

# தயானந்த ஜோதி





யோகி சுத்தானந்த பாரதியார்.



தயானந்தர் இந்தியாவுக்கு எவ்வளவோ நல்லுபதேசங்களைச் செய்திருக்கிறார். அதில் தீண்டாமை ஒழிப்பு மிகவும் முக்கியமானது.

—மகாத்மா காந்தி.



**தயனந்தர்!** இந்தப் பெயரைக் கேட்டதும் "**நவ இந்தியத் தந்தை வாழ்க**" என்று உள்ளம் பாடுகிறது. தயானந்தர் உலகப் பெரியாரில் முன்னணியில் இருப்பவர். வைர உடல், அஞ்சாச் சிங்க நெஞ்சம், ஒளி பெற்ற தெள்ளறிவு, ஒப்பற்ற கல்வியறிவு, உண்மையை உரக்கப் பேசும் மணி வாக்கு, பொய்யை மண்டையில் அடிக்கும் துணிவு, வாளுக்கும் நஞ்சுக்கும் பகைவர் கொடுமைக்கும் கலங்காமல், பொதுநலமே செய்யும் புண்ணிய வைராக்கியம், தனக்கென்று குருபீடமில்லாமல், சாத்வீகச் செருக்கில்லாமல், எல்லாரையும் சரிநிகராகக் கருதும் பரந்த உள்ளம், தேச நிலையை எண்ணி எண்ணி உருகும் இரக்கம், உயிர்களின் பால் ஓங்கிய கருணை, உலகளாவிய அன்பு —இவையே **தயானந்தர்.**

—யோகி சுத்தானந்த பாரதி.



# தயானந்த ஜோதி

(யோகி சுத்தானந்த பாரதியார்)




ஆர்யஸமாஜ் (சென்ட்ரல்)
34, ஆதியப்ப நாய்க்கன் தெரு,
மதருஸ் 1.
1948.

மஹரிஷி தயானந்த ஸரஸ்வதி 12·3



வேத வழியினிலே வீரராய் நாம் வாழ
ஜோதி யளித்த சுடர்

# பதிப்புரை

சென்னை ஆரியஸமாஜம் செய்துவரும் பொதுநலப்பணிகள், தென்னாட்டில் ஆதரவு பெறுகின்றன. எனினும் இன்னும் ஸமாஜத் தந்தையான தயானந்த ஜோதியை நம்மவர் சரியாக அறியவில்லை. அவர் உபதேசங்களைப் பின்பற்றியிருந்தால், இன்று இந்தியாவில் பாகிஸ்தானே தோன்றியிராது. இந்தியா பூரண சுதந்தரம்பெற்ற பூரண ஐக்கிய இந்தியாவாக நிலவும். மஹாத்மாகாந்தி ஆயுளெல்லாம் தியாகவேள்வியாக்கி நாட்டை விடுவித்தார் - அன்னியர் பிடியிலிருந்து விடுவித்தார். அந்த மகான் ஓர் இந்தியப்பதரால் சுட்டுக் கொல்லப்பட்டது உலகிற்கே மகத்தான நஷ்டமாகும். மகான் பட்டினியிருந்தும் அன்பொளிபாய்ச்சித் தொண்டுகள் செய்தும், நாடு இன்னும் பிளவுபட்டு வகுப்புக் கொலைக்களமாயிருக்கிறது. இந்தியா இந்தியருக்கு ஆகவேண்டுமானால், தயானந்தரின் வேதவழியே சாதனம் செய்யவேண்டும். இந்தியருக்கு முதலில் ரிஷிஞானம் பரவவேண்டும். அதற்கு தயானந்தரின் வாழ்க்கையும் உபதேசங்களும் சிறந்த வழித்துணையாகும்.

இந்தக் கருத்தைக்கொண்டே நமது தமிழ்நாட்டுத் தவமுனிவரான கவி யோகி சுத்தானந்த பாரதியார், தயானந்த ஜோதி என்ற இந்த நூலை நீண்ட ஆராய்ச்சியுடன் எழுதி யுதவினர். இந்தியிலும் ஆங்கிலத்திலும் ஸமஸ்கிருதத்திலும் உள்ள தயானந்த நூல்களையெல்லாம் படித்துக் குறிப்பெடுத்து, இரவும் பகலும் இதே வேலையாயிருந்து, சுத்தானந்தர், ரிஷி தயானந்தரின் உண்மையுருவைச் சொல்லோவியமாக்கி யளித்தார். இந்த நூலைப் படிக்குந்தோறும் நமது வாழ்க்கை புனிதமாகிறது. சோர்வும் தளர்வும் தோல்வி மனப்பான்மையும் ஒழிந்து, ஆத்மசக்தியும் தீரமும் வேதச்சுடரும் பிறக்கின்றன. இந்நூலில் சுவாமிகள் தயானந்தரின் உபதேசங்களையும் அவரது வரலாற்றுடன் தக்க முறையில் இணைத்திருப்பது கருதத்தக்கது. சொல்லும் செயலும் ஒன்றான மகானின் வாழ்வுடன் திருவுள்ளத்தையும் இணைத்து, தயானந்த ஜோதியாகச் செய்த சுத்தானந்தருக்கு ஆரிய ஸமாஜம் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறது.

இந் நூல் சிறப்புடன் வெளிவர ஆக வேண்டிய பல சேவைகளை மிக்க குதூகலத்துடன் புரிந்த, யோகி சுத்தானந்தர் அன்புத் தொண்டரும், சென்னை ஆரிய ஸமாஜ் (சென்ட்ரல்) கௌரவ காரியதரிசியுமாகிய ஸ்ரீ டி. நாராயணன் அவர்களுக்கு எமது நன்றியாகுக.

இந்த நூலை சுத்தானந்தர், மஹாத்யாகபலியான மஹாத்மா காந்திஜிக்கே அர்ப்பணித்திருக்கிறார்.

காகிதக் கட்டுப்பாடுகளும் பல இடர்களும் சோதித்தும், இந்நூலை எப்படியோ நிறைவேற்றித் தமிழருக்கு எளிய விலை வைத்து வழங்குகிறோம். தமிழர் இதைத் தக்க பயன்படுத்தி, நமது புண்ணிய பூமி கண்ணியம்பெறும் வகையில் வீரதீரர்களாக வாழ்க.

சென்னை
1—3—'48.

ஆரிய ஸமாஜ் (சென்ட்ரல்)
டிரஸ்டிகள்

# பொருளடக்கம்

## இரண்டாம் பாகம்

தவ யோகி சுத்தானந்த பாரதி



தவமும் பொது நலமுந் தன்னுயிர்ப்பாய்க் கொண்ட
கவியோகி சுத்தக் கனல்

## காந்திஜிக்கு அர்ப்பணம்

தயானந்தர் காந்திஜி இருவரும் குஜராத்து உலகிற்களித்த தெய்வப் பெரியார்கள்.

தயானந்தர் கண்ட கனவுகளையெல்லாம் செயலிற் காட்டி, உலகிற்கே தர்மஜோதியாக விளங்கினர் மஹாத்மா காந்தி. அப்படிப்பட்ட தீர்க்கதரிசியும் சுடப்பட்டு இறந்தார். ஹா! ஹா! உலகம் தெய்வப் பெரியார்களுக்குச் செய்யும் கொடுமை என்னே! தயானந்தருக்கு நஞ்சு வைத்துக் கொன்றதும், சிரத்தானந்தரைச் சுட்டுக் கொன்றதும் அதே டில்லியில் அதே மாதிரி சுடப்பட்டு ராமநாமத்துடன் காந்தி இறந்ததும் துயரம் துயரம்.

ஒற்றுமைக்காகப் பட்டினியிருந்து இளைத்த உடலில் கொலைவெறிக்குண்டு நான்கு முறை பாய்ந்த கொடுமை பொறுக்க முடியாத துக்கம், துக்கம், துக்கம்! இந்து சமுதாயத்திற்கே வெட்கம், வெட்கம்! இனியேனும் ஒற்றுமை வருமா!

நடுநிலை கொண்ட காந்தி
நல்லதே சொல்லும் காந்தி
கடுமொழி யில்லா தென்றும்
கனிமுகக் கருணை காட்டி,
விடுதலை தந்த காந்தி,
விரதத்தால் மெலிந்த காந்தி,
படுகொலை செய்யப் பட்டார்;
பதைக்குதென் ஆவி அந்தோ!

இந்த தயானந்த ஜோதியை அவரைப் போன்றே சத்திய பலியான மஹாத்மா காந்தியின் அமராத்மாவுக்கே அர்ப்பணிக்கிறேன்.

சத்தியம் உள்ள மட்டும்,
தருமமே வெல்லு மட்டும்,
உத்தமர் பொறுமை யாலே
உயிர்நலம் உயரு மட்டும்,
வித்தக பரத நாட்டின்
புண்ணியம் விளங்கு மட்டும்,
இத்தலம் உள்ள மட்டும்
எவருன்னை மறப்பார் ஐயா!

9—2—48 —சுத்தானந்த பாரதி

ஓம்

# தயானந்த ஜோதி

## 1. கண்ணைத் திறந்த உண்மை விளக்கு

நான் ஒரு கிறிஸ்துக் கல்லூரியில் உபாத்தியாயர் வேலைக்குப் படித்துக் கொண்டிருந்தேன். சுற்றிலும் பைபிள் முழக்கம், சுவிசேஷ கீத கர்ஜனை, பாதிரிகளின் வீராவேசப் பேச்சு; இந்துக் களுக்கும், இந்து சமயத்திற்கும் வசைமாரி. இந்தியா அநாகரி கர் நாடு. இந்துக்கள் வேதம் கீதை என்பன, வெறும் சாதிவாதப் பிதற்றல் இந்து சமயம் மூடப்பழக்கங்களின் மடிசஞ்சி. கல்லை யும் கட்டையையும் ஆண் பெண் குறிகளையும் தொழும் அஞ்ஞா னிகள் இந்துக்கள். பாதிரிகளே இந்தியாவுக்கு நாகரிகம் கற்பித் தார்கள்; இந்துக்களுக்குக் கல்வி தொழில் எல்லாம் தந்து கண் ணைத் திறந்தார்கள். இந்தியாவின் விமோசனம் ஏசுநாதர் கருணை யில் உள்ளது என்ற பல்லவிதான் என்றும், எங்கும் முழங்கும். உபதேசியார்கள் கிராமம் கிராமமாகச் சென்று, கூட்டம் கூட்ட மாகப் பாமர ஜனங்களை மதம் மாற்றியதைக் கண்டேன். எனது கல்லூரித் தோழர் சிலர் மதம் மாறி, எங்கோ மறைந்தனர். பத் தாண்டுகளுக்குப் பிறகு அவர்களைச் சென்னை கிறிஸ்து சங்கத்தில் சட்டை தொப்பியுடன் கண்டேன். மசூதிகளிலும் அல்லாவின் பெயரால் இந்து மதத்திற்குக் கல்லெறிதான். சிவலிங்கக்கேலி, முருகன் வள்ளிக்குறத்தியைக் காதலித்த கேலி, பரவைமனைக்குச் சிவன் தூது நடந்தகேலி, புராணப்புரட்டுக் கேலிகளில், கிறிஸ் துவர் மட்டுமன்றி, நம்மவரும் பலமாக ஈடுபட்டிருந்தனர். அக் காலமே பிராமணரல்லார் கிளர்ச்சி பலமாயிருந்தது. நமது மத நூல்களுக்கும் சதாசாரங்களுக்கும் ஓயாத சவுக்கடிதான். இந்து மதம் என்றாலே, அடிமைத்தனமும், ஆயிரம் சாதிபேதமும், பாராதே, தீண்டாதே, அணுகாதே என்ற அருவைப் பல்லவியும் புராணப் புரட்டுமாகவே பிறகுக்குத் தோன்றியது.

நம்மவரும் பரிதாபமான மடமையிருளில் மடிந்து கொண் டிருந்தனர். கஞ்சிப் படிப்பும் வயிற்றுப் பிழைப்பும், திண்ணை வம்புந் தவிர நம்மவருக்கு வேறெந்த முன்னேற்றமுமில்லை. இந்து சமுதாயம் பிறமதச் சம்மட்டியால் தூள் தூளாக நொருங்கிக் கொண்டிருந்தது.

இச் சமயம், "அஞ்ஞானிகளே வாருங்கள்; இதோ சத்திய வேதம், பரிசுத்த மரியாள் மகன் ஏசுநாதகுரு, அவர் கல்வி தருவார், கஞ்சி தருவார், நல்ல சட்டை துணி தருவார், வேலை தருவார், பணம் தருவார், வாருங்கள்!' என்று பாதிரிமார் அழைத்தால், எவர் மனந்தான் வசப்படாது? மதம் மாறிய எனது தோழர்களே என்னை "அட அஞ்ஞானி, பிராமண போஜனப்ரியா ஹா ஹா ஹா!" என்று கேலிசெய்யக் கண்டேன். நேற்று ராமசாமி ஐயங்கார், இன்று லாரென்ஸ் மாத்யூ ஆனான். நேற்றைய கமலாம்பாள் இன்று கைதரைன் மாக்தெலினு ஆகி, நர்ஸ் வேலை பார்த்தாள். நேற்றைய அப்பாசாமி இன்று அப்துல் ரஷ் மானுனன். இவ்வளவு நடந்தும், நம்மவர் ஒருவராவது வாயைத் திறப்பதில்லை; சமய உண்மையை யறியவில்லை. இந்து மதம் என்றால் என்ன, அதன் வேதம் எது, கொள்கை யென்ன என்பதை நூற்றுக்கு ஒருவர்கூட அறியவில்லை. நான்கூட கீதையையும் உபநிஷத்தையும் கட்டி வைத்துவிட்டு, பைபிளில் மோகங்கொண்டேன். ஏசுநாதர் சரித்திரத்தை நாடகமாக நடித்தேன். நாடக மேடையில் சிலுவை யேறினேன். சர்ச்சுக்குப் போனேன். மதம் மாறக்கூட நினைத்தேன். அதற்கான ஏற்பாடுகளும் இரகசியமாக நடந்தன.

நான் ஆசிரிய மாணவர் சங்கக் காரியதரிசி யாதலால், அடிக்கடி கூட்டம் போட்டுப் பேசுவதுண்டு. இந்துக்களின் நிலைமையை உணர்ச்சியுடன் பேசுவதுண்டு. ஒரு சமயம், பெரிய பாதிரி அமெரிக்காவிலிருந்து வந்தார். கிறிஸ்துமஸ் திருநாள் விமரிசையாக நடந்தது. அதில் இந்தியா விரைவில் கிறிஸ்துமயமாகுமா? என்ற விவாதம் நடத்த ஏற்பாடானது. ஆகும் என்பதற்கு ஐந்து பெரிய கிறிஸ்துவர் பேசினர். ஆகாது என்பதற்கும் இந்துமதப் பெருமையை நிலை நாட்டவும் நான் ஒப்புக்கொண்டு, எனது தலைமையில் ஐவரைத் தயாரித்தேன். இன்னும் ஒருவாரம் இருக்கிறது. நான் பரப்பரப்புடன் நூல்களைத் தேடினேன். கீதை விவேகானந்தர் பிரசங்கம் தவிர வேறெந்த நூலும் கிடைக்கவில்லை. பைபிளைப்போல் இந்து மதத்திற்குக் கோவையான நூலில்லை. எதிரிகள் கேள்விகளுக்குப் பதிற்சொல்ல வழியில்லை. நான் திகைத்தேன்.

நான் எனது நண்பருடன் மீனாட்சியம்மன் கோயிலுக்குச் சென்று அந்திக்கடைப் பொட்டலில் நுழைந்தேன். அங்கே ஒரு பாதரி காலணா பைபிளை வழங்கி, பிடில் இழுத்துக்கொண்டே ஏசு

நாதர் பெருமையைப் பேசினார். திடீரென்று எதிரே மற்றொரு நெட்டை ஆள் எழுந்து நின்றார். அவர் கொச்சைத் தமிழில் "வேத தருமமே தருமம். இந்தியாவின் நாகரிகமே நாகரிகம். பிறர் பேச்சில் மயங்காதீர்கள்" என்று சரமாரியாகப் பொழிந்து பைபிளைக் கிண்டல் செய்தார். அவர் சத்தம் பாதிரி குரலை அடக்கி விட்டது. பாதிரி ஓடி மறைந்தார். "ஹா நமது இந்து சமயத்திற்கும் ஒரு பாதிரியுண்டா?" என்ற வியப்புடன் நான் அந்த வடநாட்டு வீரரைப் பின்பற்றிச் சென்றேன். அவர் என்னையும் எனது நண்பரையும் மிக்க அன்புடன் வரவேற்று, "நீங்களெல்லாம் சந்தி ஜபம் ஒழுங்காகச் செய்யவேண்டும். ஆரிய சமாஜத்தில் சேர வேண்டும்" என்று நீளப்பேசினார். அப்போதுதான் நான் ஆரியசமாஜி ஒருவரைக் கண்டேன். ஆரிய சமாஜம் இந்து தர்மத்திற்காகச் செய்யும் மகத்தான தொண்டுகளை அறிந்தேன். அந்த அன்பர்-எம். ஜே. சர்மா-ஸத்யார்த்தப் பிரகாசத்தைத் தந்தார். எனக்கு இந்தி வரும்; பார்த்தேன், துள்ளிக் குதித்தேன். கிறிஸ்துமத விவாதம் தெளிவாயிருந்தது. உடனே சத்யார்த்தப் பிரகாசம் ஒன்று விலைக்கு வாங்கிச் சென்று, இரவும் பகலும் உட்கார்ந்து படித்தேன். குறிப்பெடுத்தேன். பைபிளையும் ஆராய்ந்ததால் தயானந்தர் கருத்துக்கள் நன்றாக விளங்கின. மறு வாரம் விவாதம் நடந்தது. எல்லாம் ஆங்கிலம். நான் மெய்ம்மறந்து உருக்கமாக எனது கட்சியைப் பேசினேன். ஆனால் நியாயாதிபதிகள் கிறிஸ்துவப் பாதிரிகள். அவர்கள் ஒரு வருஷத்திற்கு இத்தனை ஆயிரம்பேர் மதம் மாறுகிறார்கள். ஆதலால் இத்தனை ஆண்டுகளில் இந்தியா கிறிஸ்து மயமாகும் என்று தீர்ப்புச் சொன்னார்கள். நான் மேடையேறி "இல்லவே யில்லை; இதோ இந்த ஸத்யார்த்தப் பிரகாசமும், ஆரிய சமாஜமும் உள்ளமட்டும், இந்து தருமத்தை அசைக்க முடியாது, எங்களுக்கும் தயானந்தக் கூட்டம் உண்டு" என்று வீறிட்டேன். அன்று முதல் நான் வேத தர்மத்தை ஆராயப் புகுந்து, மாணவருக்கும் இந்து தருமத்தின் பெருமையைச் சொல்லத் தொடங்கினேன். அதனால் எனக்கு வந்த இடர்கள் பல. என்றாலும், ஸத்யார்த்தப் பிரகாசம் என்னை தைரியப்படுத்தியது. அதுதான் என் கண்ணைத் திறந்த உண்மை விளக்கு. இந்த விளக்கொளியை இந்தியருக்குத் தந்த மகானின் வரலாறை சர்மா சொல்லக் கேட்டு ஆவேசமுற்றேன். தயானந்தர் அன்று முதல் எனது உள்ளத்தில் கோயில் கொண்டார்.

## 2. நவ இந்தியத் தந்தை

தயானந்தர்! இந்தப் பெயரைக் கேட்டதும் "நவ இந்தியத் தந்தை வாழ்க!" என்று உள்ளம் பாடுகிறது. தயானநதா உலகப் பெரியாரின் முன்னணியில் இருப்பவர். வைர உடல், அஞ்சாச் சிங்க நெஞ்சம், ஒளி பெற்ற தெள்ளறிவு, ஒப்பற்ற கல்வியறிவு, உண்மையை உரக்கப் பேசும், மணிவாக்கு, பொய்யை மண்டையில் அடிக்கும் துணிவு, வாளுக்கும் நஞ்சுக்கும் பகைவர் கொடுமைக்கும கலங்காமல், பொது நலமே செய்யும் புண்ணிய வைராக்கியம், தனக்கென்று குருபீடமில்லாமல், சாத்விகச் செருக்கில்லாமல், எல்லாரையும் சரிநிகராகக் கருதும் பரந்த உள்ளம், தேச நிலையை எண்ணி எண்ணி உருகும் இரக்கம், உயிர்களின்பால் ஓங்கிய கருணை, உலகளாவிய அன்பு—இவையே தயானந்தர். சங்கரர் அறிவும், பீமன் உடலும், கண்ணன் போன்ற கர்மயோகமும், காந்தி போன்ற சத்திய வாக்கும், புத்தர் போன்ற கருணையும் ஒருங்கே கொண்ட மகான் தயானந்தர். தயானந்தர் வேதரிஷி, சுயநலமற்ற பொதுநல வீரர், சிறந்த தெய்வபக்தர், மூடக் கொள்கைகளை உடைத்தெறிந்து, சத்திய தருமத்தை நிலைநாட்டிய தீரர். தயானந்தர் தேவமனிதர், அதிமனிதர், புருஷோத்தமர். அவர் பூரணமான நைஷ்டிக பிரமசாரி, யோக சித்தர்; போலித்தனமும் பொய்ப் பகட்டும் இல்லாமல், படிகம் போலத் தெளிந்த உளத்தர். காலத்தை வென்ற கருமயோகி—தயானந்தர் கடவுளின் போர்வீரராகி, மனித சமுதாயத்தைப் பிடித்த பொய் மூடப்பேய்களை, அஞ்சா உண்மையாகிய வஜ்ராயுதத்தால் புடைத்துத் தகர்த்து, பரிசுத்தமான தருமத்தையே நிலைநாட்டிய நவீன இந்திரன், ஆறடி உயரம், நல்ல பெருமன், பிடிப் பிடியாகச் சதை, இரும்புபோல் இறுகிய திண்ணுடல் கொண்ட மலைபோன்ற ஆள். அப்படி ஆள் இப்போதில்லை. பெரிய பெரிய வஸ்தாதுகள் அவர் கையை மடக்க முடியாது, காலைத் தூக்க முடியாது. அவர் ஓடும் வண்டியை இழுத்துப் பிடித்தால், குதிரை நடக்காது. அவரை எத்தனையோ அயோக்கிய துரோகப்பாவிகள் குத்தவந்தனர்; வாளைப்பிடுங்கி ஒடித்தெறிந்தார். அவர்மேல் பாம்பை எறிந்தனர்; கண்ணனைப்போல் பாம்பின் படத்தில் அழுத்தி மிதித்துக்கொன்றார். எவ்வளவு இடர்கள் வந்தாலும் கலங்காத மலைபோன்றவர் தயானந்தர். அவர் யாருக்கும் அஞ்சவில்லை; அபாயங்களைக் கண்டு நகைத்தார். புலி நாய்கள்கூட அவரைக் கண்டு அஞ்சி வாலைமடக்கிக்கொண்டு

ஓடும். ஏசுநாதர்கூடச் சிலுவையில் 'கடவுளே என் என்னைக் கைவிட்டாய்' என்று கதறினர்; சோக்ரதர் தைரியமாக விஷபானம் செய்து உயிரை சத்தியபலியாக்கினர். அவரைவிட தீரர் தயானந்தர். சிங்கத்தைக் குகையில் எதிர்க்கும் தைரியவான் தயானந்தர். பாதிரிமார் முன்னும், பெரிய மௌல்விகள் முன்னும் வேத கோஷம் செய்வார். பொய்மதங்களைக்கண்டனம் செய்வார். 'இவரைப்போன்ற அச்சமற்ற மனிதரை நான் கண்டதில்லை' என்றார் ஜெனரல் ராபர்ட்ஸ். சுதேசிமன்னர்கள் இந்து தர்மத்தை மறந்து சிற்றின்பத்தில் ஆழ்ந்து சுகபோகச் சோம்பேறிகளாயிருப்பதை அவர் நேருக்குநேராகக் கண்டித்தார். தாசிலோலர்களை ரோஷம் வரும்படி பேசினர். அதனல் அவர் உயிருக்கே ஆபத்துவந்தது. உயிரைவிட உண்மையே பெரிது என்று தம்மையே சத்திய ஜோதிக்குப் பலிகொடுத்தார் தயானந்தர். தயானந்தரே இந்தியாவின் புருஷோத்தமர், நவஇந்தியாவின் தந்தை; அவர் சுதேசத்திற்குச் செய்துள்ள சேவை மிகப் பெரிது. இந்தியாவுக்கு அவர் ஆத்ம சுதந்தரம் தந்தார். அக்காலம் இந்தியா இருந்த நிலையை அறிந்தால், தயானந்தர் செய்த சேவையின் பெருமை தெரியும்.

## 3. இந்திய நிலைமை

இந்தியா மஹா பாரத காலத்திற்கு முன் சுவர்க்கலோகமாயிருந்தது. நாலாவது நூற்றாண்டில் அதைப் பார்த்த அப்துல்லா வாஸஃப், "சுவர்க்கம் என்பது இந்தியாவிலேதான் இருக்கிறது" என்றெழுதினன். கிரேக்க ரோம சீனயாத்திரிகளும் வணிகரும் இந்தியாவை வியந்து புகழ்ந்தனர். உலகில் ஒப்புயர்வற்ற ஞானச்சுரங்கங்களான வேதங்களும், உபநிஷத்துக்களும், இராமாயணம் மஹாபாரதம், போன்ற காவியங்களும், ஸ்மிருதிகளும், கலைநூல்களும் இந்தியாவிலேதான் விளங்கின. வேதகால இந்தியர், அறிவிலும் தவத்திலும் சத்தியத்திலும் நன்னடையிலும் பலத்திலும் பரோபகாரசீலத்திலும் புருஷோத்தமர்களாக விளங்கினர். பெண்களும் கல்வியும் கற்பும், தவமும் பொலிய மேன்மை பெற்றனர். மஹாதேஜசும் வர்சசும், வீறும் ஞானப்பொலிவும் யோகசக்தியும் கொண்ட அந்தணரும், பகைவர் நடுங்கும்படி போராடி நாட்டைக்காத்து வெற்றிக்கொடி நாட்டிய வீரரும், கலையும் தொழிலும், வாணிகச் செல்வமும் நிறைந்த வணிகரும், தேச சேவையில் தளராத தொண்டரும் பாரதசமுதாயத்தை அணிசெய்தனர். அவர்கள் வாழ்வை வெறுக்க

வில்லை; இந்திரன் குபேரன் போன்ற செல்வச் சிறப்புடனும் புகழுடனும் வாழ்ந்தனர்.

"பரம்பொருளே! வீரமும், தைரியமும்,புத்தியும்,பலமும், சக்தியும், நல்ல குணங்களும் தந்து, நாங்கள் ஸாம்ராஜ்யாதிபதிகளாக அருள். அன்னியர்கள் எங்கள் தேசத்தில் புகுந்து ஆளாதருள். நாங்கள் என்றும் பரதர்மத்திற்கோ பரராஜ்யத்திற்கோ ஆளாகாமல், என்றும் சுதந்தரராயிருக்கவருள். நாங்கள் இம்மை மறுமைப்பயன் செழித்து என்றும் இன்புற அருள். இறைவா, உன்னருளால் நாங்கள் அறிவும் பலமும் தேசும், ஒழுக்கமும் பெருகி, சர்வ பௌமர்களாக விளங்கவருள். இருளிலிருந்து ஒளிக்கும், துன்பத்திலிருந்து இன்பத்திற்கும், அசத்தியத்திலிருந்து சத்தியத்திற்கும், சாவிலிருந்து அமரத் தன்மைக்கும் எங்களை நடத்து. சத்திய சூரியனே, எங்கள் அறிவாற்றல்கள் சக்தி பெற்றொளிர்க; சிற்கனலே! எங்களை வழிநடத்தி வெற்றிக்குமேல் வெற்றியருள்,"

இதுதான் வேதரிஷிகளின்பிரார்த்தனை. இதே எண்ணம் வாழ்விலும் ஊறிப்போய், இந்திய சமுதாயம் அறிவும் வீரமும், கலையும், தொழிலும், முயற்சியும் வெற்றியும் புகழும் பொலிந்தோங்கியது,

மஹாபாரதகாலத்திற்குப் பிறகு, இந்தியா மெலிவுறத் தொடங்கியது. சாதிக்குழப்பமும் நீதிக் குழப்பமும் சமுதாய வாழ்வையும் ஒற்றுமையையும் சிதைத்தன.

வேதகாலத்தில் பிராமணப் பரசுராமன் வில்லேந்தி அநீதிமன்னரை ஒழித்தான். க்ஷத்ரிய விசுவாமித்திரர் தவம் புரிந்து அந்தணரானார். சாதுர்வர்ணம் குணகர்மவிபாகமாயிருந்தது. சாதிவேறுபாடுகளும் பிரிவினைச் சண்டைகளும் இல்லை. இந்தியா ஒரே பாரதசமுதாயமாயிருந்தது. அவரவர் குணத்திற்கேற்ற கருமங்களை சமுதாய நன்மைக்கே செய்து, எல்லாரும் ஆன்மநேயப் பொதுமையில் வாழ்ந்தனர். பாரதகாலத்திற்குப் பிறகு, உலகம் அநித்தியம், வாழ்வு மாயம்; இதை ஒழித்துச் சந்யாசம் வாங்கிக்கொண்டு செல்வதே மோட்சம் என்ற போலி வேதாந்தம் தலை தூக்கியது. அதனுடன் வேதத்தின் ஞானச்சுவையை அறியாமல், கேவலம் கர்மகாண்டத்தைமட்டும் பெரிதுபண்ணி, ஆட்டைக் கொலைபண்ணும் யாகங்களும், மனிதனைமனிதன் 'போ தள்ளி' என்னும் சாதிப்பித்தமும் தலையெடுத்தன. புத்தர் மஹாவீரர் ஆகிய இருவரும் யாகங்களைக் கண்டித்து, உயிர்க்கொலையை நிறுத்தினர். சாதிவித்தியாசத்தைக் கண்டித்தனர். ஆனால் பௌத்தமதம் க்ஷத்ரியபலத்தைக் குறைத்து, உலகம் துன்பக்கனவு என்ற பயத்தைக் கிளப்பி, வாழ்வில் ருசியில்லா

மற் செய்தது. பல்லுக்கும் நகத்திற்கும் கோயில்கட்டி, நாடெங்கும் சிலைகளை நாட்டி, ஜனங்கள் மரப்பரச்சிவிலேயாட்டில் புகுந்து, வேதத்தின் மகத்தான ஆத்மஞானத்தை மறந்தனர். கடவுளைக்கூட மறந்து, உருக்களையும் குருக்களையும் தொழுதுகொண்டிருந்தனர். இச்சமயம் அலெக்சாந்தர் படையெடுப்பு வந்தது. தேசத்துரோகிகள் அவனுக்குப் பாதைகாட்டினர். புருஷோத்தமன் ஒருவனே அலெக்சாந்தருடன் வீரப்போர்புரிந்தான். அதன்பிறகு சந்திரகுப்தன், அசோகன், ஹர்ஷன், சமுத்திரகுப்தன், கனிஷ்கன் முதலிய மன்னர் வந்தனர். எனினும், இவர்களுக்குப்பிறகு உள்நாட்டுக் குழப்பம் அதிகரித்து, ஜயசந்தன் என்னும் துரோகி கோரிமுகம்மதை அழைத்துவந்து, பிருதிவிராஜனுடன் போர்புரிந்தான்.

அன்று முதல் நமது தேசம் அன்னியருக்கடிமையாகி, சுதர்மத்தையும் ஸ்வராஜ்யத்தையும் இழந்தது. கஜினி நமது நாட்டைக் கொள்ளையடித்துச் சென்றான். பிறகு பரம்பரையாகத் துருக்கர் வந்து நாட்டில் கொடிபோட்டு ஆண்டனர். அல்லாவுதீன் தைமூர் முதலியோர் ஆண்டு முடிந்த பிறகு, முகல்மன்னர் எழுந்தனர். பேபர், உமாயூன் அக்பர், ஜிஹாங்கீர், ஷாஜஹான் முதலிய மன்னர் திறமையாக ஆண்டபிறகு, ஔரங்கசீபு வந்தான். ஏராளமான இந்துக்களை மதமாற்றினன். இந்து சமுதாயம் பரதர்மத்திற்கு அடிமையாகித் தனது வேத தர்மத்தை அடியுடன் மறந்து வீழ்ச்சியடைந்தது. பிரதாப சிங்கன், சிவாஜி, குருகோந்த சிங்கன் முதலிய தீரர்கள் எழுந்து, அன்னிய ஆட்சியுடன் போராடி, சுதந்தரக் கொடி நாட்டினர். என்றலும் தார்மீகத்தில் பாரததேசம் தளர்ந்து மெலிந்து, இயல்பு திரிந்து வருந்தியது. கரும்பு இனிப்பை இழந்தால் சக்கைதானே? இந்துக்கள் வேததர்மத்தை மறந்தால், அசல் இந்துக்களாக முடியுமா? பரதர்மம் ஹிந்து ஜாதியைக் கரைத்து விழுங்கிக் கொண்டிருந்தது.

அப்போதே ஆங்கிலேயர் புகுந்து, கிறிஸ்துதர்மத்தைப் பரப்பினர். அரசியல் அடிமைத்தனத்துடன், நம்மவர் நடையுடைபாவனை கருத்து உணர்ச்சிகளும் கல்விப்பயிற்சியுங்கூட அன்னியருக்கு அடிமையாயின. அரசியல் விடுதலைக்காக மராடியரும், வங்கரும், தமிழரும் சுதந்தரப் போர்புரிந்தனர். என்றலும் தார்மிகபலமில்லாமல் இந்துசமுதாயம் வரவரத் தாழ்ச்சியடைந்தது. போலிநாகரிகம் நம்மவரை விஷப் பூச்சிபோல் அரித்தது. சட்டைமினுக்கும் கிராப்புத்தலையும் ஆங்கிலப் பேச்சுமே மிச்சம். படித்தவரிடம் இந்திய உணர்ச்சியே இல்லை.

1857 ல் மறுபடியும் இந்தியா சுதந்தரப்போர்புரிந்தது. நானு சாஹெபு, லக்ஷ்மீபாய், தாதியாதொபே, குமாரசிங்கன் போன்ற அசகாய சூரர்கள் வாள்பிடித்தும், போர் தோற்றது. காரணம் பஞ்சாபிலிருந்து துரோகக்கூட்டம் வந்து எதிரிக்குத்துணைசெய்தது. நீலும் லாரென்சும் ஹாவ்லக்கும் கிராமம் கிராமமாகக் கொளுத்தனர். கூட்டம் கூட்டமாக ஜனங்களைக் கொன்று குவித்தனர், சாலைமரங்களெல்லாம் தூக்குமேடைகளாயின. ஏராளமானபேர் மதம்மாறினர்...இந்து சமுதாயம் அடிமைநரகத்தீயில் வெந்துகொண்டிருந்தது...இத்தப் பரிதாபக்காட்சியை தயானந்தர் நேரே கண்டு மனங்கசிந்தார்.

சமுதாயத்தின் உள்ளே புகுந்தால், உளுத்துப்போன மாமூல் பழக்கங்கள், வைதிகத்தின் அட்டகாசம், சாதிச் செருக்கின் கொடுங்கோல், கல்வியில்லாமடமை, பிழைக்கத் தெரியாமல் வறுமை, கைம்பெண் கண்ணீர், பாலியவிவாகத்தின் பரிதாபத் துயரம், நாத்திகநாற்றம், வேதநிந்தை, ஆங்கில மோகம், சமஸ்கிரதம் செத்தபாஷை என்ற அலட்சியம்; அச்சம், பேடிமை, துர்பலம், பிரமசரியசம்பத்தில்லாமல் மெலிந்து நலிந்த நோய் வாழ்வு-ஆகியதுயர்க்காட்டில்சிக்கி, பாரதசமுதாயம் தத்தளித்தது. இந்துக்களை ஒற்றுமைப்படுத்தவும் பிரமசரியக்கல்வியால் வீறுபடுத்தவும், வேதருமத்தை விளக்கவும் நாதனில்லை. இன்னும் சில காலம் இப்படிப் போனால், இந்தியா அன்னிய மதத்திற்கு மாறி நமக்கே பிரதிவாதியாயிருக்கும்.

நமது சமயத்தைப் பார்த்தாலோ நெல்லிக்காய் மூட்டை அவிழ்த்தமாதிரி ஒரு கட்டுப்பாடின்றி எங்கும் வேறுபாடே தலைதூக்கி நின்றது. சைவம், வைணவம், சாக்தம், வைரவம் முதலிய மதங்களெல்லாம் போலிக் குருமார்களால் கெட்டழிந்தன. குருமார்களும் வேதக்கல்விதராமல், ஒழுக்கத்தைக் காக்காமல், பாமர ஜனங்களை மயக்கி, தம்மையே கண்ணனென்றும், கோபிநாதனென்றும், அவதார மென்றும் தம்பட்டமடித்துப் பணம் ஏராளமாகப் பறித்து, சுகபோகங்களை அனுபவித்துக் கொண்டிருந்தனர். சிஷ்யகோடிகளுக்கு இந்த உலகில் வெறுப்புண்டாகச் செய்து, பரலோகத்திற்குப் பயணம் கட்டினர். சத்திய வேதம் மறைந்து, புராணப் பொய்மூட்டைகளும் கலைக்கற்பனைகளும், கடவுளருக்களும் தலைதூக்கி நின்றன. இந்துதர்மத்தில் காளான்பூத்து புல்லுருவி படர்ந்து, கற்றுழை அடர்ந்தது, பாம்பும் தேளும் குடிப்புகுந்தன. இந்துக்கள் தார்மீக உணர்வேயில்லாமல், உறங்கி, படிப்

படியாக அடிமை நரக இருளில் இறங்கிக் கொண்டிருந்தனர். பிள்ளையில்லாச் சொத்தெல்லாம் வெள்ளைக் காரனுக்குப் போய் விட்டது. அடித்தாலும் அழமுடியாதபடி இந்துக்கள் மெலிந்தனர். வீர மில்லை, பலமில்லை.

இந்த நிலையிலிருந்து நாட்டைத் திருத்தி உயர்த்தவே தயானந்தர் வேதகர்ஜனையுடன் எழுந்தார். இந்தியா அரசியல் விடுதலை அடையுமுன், சமுதாய சுதந்திரம் பெறவேண்டும். ஆத்ம சுதந் திரம் பெறவேண்டும். முதலில் தனது வேததருமத்தைக் காத்துக் கொண்டே பிறகு பரதர்மத்துடன் போராட வேண்டும் எனக் கருதியே தயானந்தர் ஜனசமுதாயத்தை வேதவழியில் நடத்தி, மூடக் கொள்கைகளை ஒழிந்து ஒற்றுமையாக நாடு முன்னேற வழிகோலினர். தயானந்தர் தமது ஜீவனவிரதத்தில் எவ்வளவு சித்தி பெற்றார் என்பதை அவர் வாழ்க்கையிலிருந்தே காண்போம்.

"உலகம் மூட மடைய விலங்கு மாட்டிக்கொண்டு தவிக் கிறது. விலங்கை அறுத்தெறிந்து, அடிமைகளுக்கு உரிமை தரவே நான் வந்திருக்கிறேன். மனித உரிமையைப் பறிப்பது என் கொள்கைக்கு விரோதம். சொந்த முக்தியைப்பற்றி எனக் குக் கவலையில்லை. இலட்சக் கணக்கான பேர்கள் ஏழைகளாய், கோழைகளாய், துர்பலராய் வருந்துகிறார்கள். மறு பிறவியைப் பற்றி அக்கரை யில்லை. இந்த ஜனங்கள் விடுதலை பெறும்போது நானும் முக்தி பெறுவேன்" என்றார் மஹான்.

மனித சமுதாயத்தை உண்மை வழியில் அழைத்துச் செல்ல எழுந்தருளிய தயானந்தர் வாழ்க! அவர் எப்படி வாழ்ந்தார், என்ன செய்தார் என்பதைக் காண்போம். வாருங்கள் டங்கா ராவுக்கு.

## 4. டங்காரா சைவர்

முகல் அரசு வீழ்ந்தது. இந்தியா ஆங்கிலேயர் கைக்கு வந் தது. என்றாலும் சில இடங்களில் சுதேசக் கொடி கம்பீரமாகப் பறந்தது. ஸௌராஷ்ட்ரமாகிய காடியவாடில் பெரும்பகுதி இன்னும் சுதேசிகள் கையிலிருந்தது. அங்கே பூனா பேஷ்வாக் களும், பரோடா கெய்க்வாரும் ஆட்சி செலுத்தினர். ஆங்கில நாகரிகச் சின்னமான கிராப்பும், சட்டை தொப்பியும் இன்னும் அங்கே பரவவில்லை. இங்கிலீஷ் வெள்ளம் பழைய பழக்க வழக் கங்களை இன்னும் விழுங்கி விடவில்லை. விட்டல் ராவ்தேவர் கட்டிய நூற்றுக் கணக்கான சிவன் கோயில்களில் மங்காமல்

விளக்கெரிந்தது, தீபாராதனை நடந்தது. மராடியர் ஆதிக்கத்தில் சைவ சமயம் எங்கும் பரவியிருந்தது. வல்லபாசாரியின் குரு பீடம் இன்னும் கிருஷ்ணலீலைகளை நடத்திக் கொண்டிருந்தது. பாமர ஜனங்கள் இன்னும் ஸ்வாமி நாராயணர் புஷ்பவிமானத்தில் தங்களை வைகுண்டத்திற்குக் கொண்டு செல்வார் என்றே நம்பியிருந்தனர். கோசாயிகளுக்கும் மஹந்துக்களுக்கும் இன்னும் பொது ஜனங்கள் கைகட்டிச் சேவை செய்தனர். சிவலிங்கத்திற்கு இன்னும் பாலபிஷேகமும் பஞ்சாமிருத நிவேதனமும் நடந்து கொண்டிருந்தன.

அந்தக் காலம், சிவபக்தியிலும் வைதிக அனுஷ்டானங்களிலும் வைராக்கியமாயிருந்த வீரசைவர் ஒருவர், மோர்வி சமஸ்தானத்தில் டங்காரா கிராமத்தில் இருந்தார். அவர் பெயரே கர்ஸன்ஜிலால்ஜி. குஜராத் சரித்திரத்தில் ஒரு குறிப்புள்ளது: அன்ஹல் வாடா ராஜா மூலராஜ் ஸௌலங்கி, தாய்வழி உறவினர், ஒருவரைக் கொலை செய்த சாபத்திற்காக, தீர்த்தயாத்திரை சென்று பிராமணர்களுக்குப் பூதானம் செய்தார். உத்தரதேச பிராமணர் ஆயிரம்பேரை வரவழைத்து, தர்மாசனங்கள் தந்து பல கிராமங்களில் குடியேற்றி வைதிக மார்க்கத்தைப் பரப்பச் செய்தார். அவர்களை உதீச்ய ஸஹஸ்ரர் அல்லது உத்தர பிராமணர் என்பர். நமது நாட்டில் அஷ்டஸஹஸ்ரர் அப்படியே தர்மாஸனம் பெற்றுக் குடியேறினர். இந்த உதீச்யஸ்ஹஸரரில் சித்திபூரில் இடம் பெற்ற சாமவேதப் பிராமணர்களே கர்சன்ஜீயின் முன்னோர். இவர்கள் பரம்பரையாக மஹாதேவனையும் மஹாகௌரியையும் வணங்கி வந்த வீர சைவர்கள். கர்ஸன்ஜீயின் தந்தை மூல்ஜி. இவர் மோர்வி சமஸ்தானம் டங்காராவில் உள்ள ஜீவபுரத்தில் பெரிய செல்வாக்குடன் வசித்தார். கர்ஸன்ஜீ ஒரு ஸாஹூகார். ஏராளமான நிலபுலன்களும் செல்வாக்கும் உடையவர், பாங்கர், ரெவின்யூ கலெக்டர் (வருமான ஊழியர்). அவர் கடுமையான சிவபக்தர். சிவவிரதங்களைச் சிரத்தையாக அனுஷ்டித்தவர். டங்காரா சுமார் 5824 ஜனங்கள் வசித்த ஒரு சிற்றூர். அதில் கர்சன்ஜீயே பெரிய ஸாஹூகார், தர்மவான். அவர் வீடு இன்னும் உள்ளது—ஒரு ஓட்டுவில்லை வீடு. (படம்-2) கர்சன்ஜீ, உள்ளூர் டேமீ ஆற்றங்கரையில், ஓர் அழகான சிறிய கோயில் கட்டி, குபேரநாத மஹாதேவரை அங்கே பிரதிஷ்டை செய்தார். மோர்வீ மன்னர் டாகுர் பிரிதிவிராஜர், இந்தக் கோயிலுக்குத் தக்க மானியம் அளித்தார். உள்ள மட்டும் கர்சன்ஜீ, வீட்டில்

பார்த்திவலிங்க பூஜையுடன் குபேரநாத மஹா தேவாலயத்திலும் பக்தி சிரத்தையாக வழிபாடுகளை நடத்தினர். சிவ நிஷ்டரான இப் பெரியார், எங்கே சிவ கதை காலக்ஷேபம், பஜனை நடந் தாலும் அங்கே அன்புடன் சென்றார். சிவ பக்தர்களை உபசரித் துச் சேவை செய்தார். சிவ கவசமும் பஞ்சாக்ஷரியும் ஜபித்தார். விட்டல்ராவ் கட்டிய ஜடேசர் கோயிலிலும் தரிசனம் செய்தார். இவர் பத்தினியும் உத்தம பக்தை. ஜாம்நகரிலும் இவருக்கு நிலம் உண்டு. இவருக்கு இரண்டு தங்கைகள். இவர்கள் ஜாம்நகரில் செல்வாக்குப் பெற்ற அந்தணக் குடும்பத்தில் வாழ்க்கைப் பட்டனர்.

கர்சன்ஜீக்கு மூன்று ஆண், இரண்டு பெண் மக்கள் பிறந் தனர். மூத்த பிள்ளையே நமது தயானந்தர். தயானந்தரின் தம்பி ஒருவன் காலராவில் இறந்தான். வல்லபன் என்ற மகன் மோகிபாயை மணந்தான். இரண்டு மாதத்தில் இறந்தான். மாமனர் மோகிபாய்க்கு ஜாம்நகரில் ஒரு நிலம் தந்து பிழைக்கச் செய்தார். கர்சன்ஜீ தம் மூத்த பெண் பிரேமாபாயை, கொண்டா சமஸ்தானத்திலிருந்து வந்த அறிவாளியான மங்கல்ஜீ லாலா ராவல் என்பவருக்குத் தந்து, அவர் பார்வையிலேயே தமது நிலபுலன் களையும் விட்டு வைத்தார். இவர் பேரன் பிரபா சங்கர் கல்யாண் ராவலே கர்சன்ஜீக்குப் பிறகு அவர் வீட்டில் குடி வந்து, சொத் துக்களையும் நிர்வகித்தான். இரண்டாவது மகன் இறந்ததுமே கர்சன்ஜீ விரக்தராகி, தான தருமங்களைச் செய்து, தல யாத்திரை புறப்பட்டு, சித்தத்தைச் சிவனிடமே நாட்டி பக்தி செய்தார். கர்சன்ஜீயைப்பற்றி இவ்வளவு போதும். இனி தயானந்தரைக் காண்போம்.

## 5. மூல சங்கர்

சிவபுண்ணியமும் சிவநிஷ்டையும் மிக்க கர்சன்ஜீக்கு, கி.பி 1824-ம் ஆண்டு ஓர் அற்புதக் குழந்தை பிறந்தது. சங்கரிடம் பக்திபூண்ட தந்தை தனது தகப்பனர் பெயரையும் முன்வைத்து குழந்தைக்கு மூலசங்கரர் என்று பெயரிட்டார். தயாராம் என்ற பெயரும் அக்குழந்தைக்கு ஏற்பட்டது. குழந்தை மகா தேஜஸ்வி. கண்டதும் மகான் என்னும்படியிருந்தது அதன் அழ கும் பேச்சும் வசீகரமும். பெற்றோர் குழந்தையைப் பேரன்புடன் வளர்த்தனர். செல்வத்திற்குக் குறைவில்லை. நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக மூலசங்கர் வளர்ந்தான்.

பையனைப் பெரிய வேதாகம வித்வானாக்கத் தந்தை விரும்பினார். ஐந்தாண்டில் மூலசங்கரன் தேவநாகரிகற்று, சமுஸ்கிருத சுலோகங்கள் பாடம்பண்ணத் தொடங்கினான். தகப்பனார் சிவஸ்தோத்திரங்கள் பல சொல்லிக்கொடுத்தார். எட்டுவயதில் மூலசங்கரனுக்கு உபநயனம் நடந்தது. தகப்பனார் காயத்ரி உபதேசம் செய்தார்; திரிகால சந்தியாமந்திரங்கள் சொல்லிவைத்தார். சிவபஞ்சாக்ஷரி உபதேசித்தார்; பூஜாநியமங்களைக் கற்பித்தார். ருத்ராத்யாயம், சிவ கவசம் கங்காஸ்தோத்ரம் போன்ற சிவபரமான பாடல்களைப் பையன் பாடம் செய்யநேர்ந்தது. சிவமாஹாத்மியங்கள் நடக்குமிடமெல்லாம் தந்தை பையனையும் அழைத்துச் சென்றார். அவனைப் பரம சிவநிஷ்டனாக்கவே அவர் முயன்றார். பிரதோஷம், சிவராத்திரி முதலிய நாட்களில் தம்முடன் மூலசங்கரனையும் உபவாசமிருக்கச் செய்தார். இது தாயாருக்குச் சம்மதமில்லை. குழந்தை இளைத்துப்போகுமென்று அடிக்கடி எதிர்ப்பாள். "பதினான்குவயதிற்குள் வியாகரணம், சப்தரூபாவளி, யஜுர் வேதத்திலும் மற்றவேதங்களிலும் சிலபகுதிகள் இவற்றைப் பாடம் பண்ணினேன்" என்கிறார் தயானந்தர். அவர் கர்னல் ஆல்காட்வேண்டுகோட்படி எழுதிய சுயசரித்திரக் குறிப்புகளை இங்கே மொழிபெயர்ப்போம். இவை தியாஸபிஸ்டு என்ற பத்திரிகையில் வந்தவை. பதினான்கு வயதில் படிப்பு முடிந்தது. பதிமூன்று வயதிலும் பதினெட்டாம் வயதிலும் நடந்த இரண்டு சம்பவங்களே மூலசங்கரின் கண்ணைத்திறந்து, அவனை தயானந்தராக்கின...

## 6. சிவராத்திரி ஞானோதயம்

உபநயனம் ஆனது முதலே தந்தை மூலசங்கரனைப்பல விரதாதிகள் அனுஷ்டிக்கும்படி வற்புறுத்தினார். உடம்பு கெட்டுப் போகும் என்று தாய் மறுத்தும் கேட்கவில்லை. சிவராத்திரி உபவாசம் அனுஷ்டித்து, இரவில் கண்விழிக்க கர்சன்ஜீ மகனை ஜடேச்வர் கோயிலுக் கழைத்துச் சென்றார். அது ஊருக்கப்பால் நாலு மைல் உள்ளது, பெரியகோயில். இன்னும் பல சிவபக்தர்கள் அங்கே கூடியிருந்தனர். பிறகு நடந்ததை தயானந்தரே சொல்லுகிறார்:

"சிவபுராணம் நடக்குமிடமெல்லாம் தந்தை என்னை அழைத்துச் சென்றார். தாயின் மறுப்பையும் தட்டி, என்னைப் பார்த்திப பூஜைச் செய்யச்சொன்னார். பதின்மூன்றும் வயதில் சிவராத்திரி உபவாசத்துடன் கண்விழிக்க என்னை அவர் ஜடேச்வரர் கோயி

னுக்கு அழைத்துச்சென்றார். அன்றே எனக்குச்சிவதீக்ஷை தரக்கருதினார். பெற்றோருடன் வந்த மற்றச் சிறுவருடன் நானும் தந்தையைப் பின்பற்றினேன். கண்விழிப்பு நாலு ஜாமமாக நடக்கும். ஒவ்வொரு ஜாமமும் மூன்றுமணி நேரம். அர்த்தஜாமம் ஆனதும் பூசாரிகளும், கோவில் பணியாளரும், மற்ற கிரகஸ்தர்களும் வெளிப்பிராகாரத்தில் படுத்துறங்கினர். தூங்கினால் விரதபங்கமாகுமென்று நான்மட்டும் அடிக்கடி கண்ணில் தண்ணீர் நனைத்துக்கொண்டு விழித்திருந்தேன். எனது தகப்பனாரும் களைத்துப்போய் கண்சுழன்று உறங்கிவிட்டார். நானே தனியாக விழித்திருந்தேன்.

அப்போது ஒரு சம்பவம்: சில எலிகள் கிளம்பி, மஹாதேவ லிங்கத்தின் மேல் ஏறி அதில் ஒட்டிக்கொண்டிருந்த அக்ஷதைகளைக் கொரித்துத் தின்றன. நிவேதனங்களையும் கொரித்தன. நான் பார்த்து வியந்தேன். பார்க்கப்பார்க்க என் மனதில் சந்தேகப்படலம் எழுந்தது. இதென்ன! மஹாதேவன் சாந்த சுத்த மூர்த்தி, சர்வசக்திமான், பாசுபதாஸ்திரம் தந்தவன், விருஷபாரூடன் என்று நேற்று வரையில் கதை கேட்டேனே. இந்தச் சிலை அதே மஹாதேவனா? இதுதான் அந்தப் புகழ்பெற்ற ஸ்ரீதத்யஹரி, காலகாலனான மஹாதேவனால், இந்த எலிக் கூட்டத்தை ஒரு போடுபோட்டுத் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளாததேன்? நடமாடி உண்டு பருகி உறங்கி, கையில் திரிசூலந்தாங்கி, உடுக்கடித்து, மனிதருக்குச் சாபந் தரும் அதே காளையேறி மஹாதேவனா இந்தக்கற்சிலை? என்று சந்தேகித்தேன். (இச்சமயம் எலிகள் பிரசாதத்தையும் சாப்பிட்டு இலிங்கத்திற்கு அபிஷேகமும் செய்துவிட்டன). நான் தந்தையை எழுப்பி, அப்பா, இந்த கோரச் சிலைதானா பரம்பொருளான மஹாதேவன்? என்று வினவினேன். தந்தை அப்படிக்கேட்பதே அபசாரம் என்றார். அப்பா, இந்த எலிகள் ஏறிச்சடுகுடுபாய்ந்து மேலே ஆபாசம் செய்கின்றனவே. இவற்றைக்கூடத் தடுக்கச் செயலில்லாத இந்தக் கல்லா எல்லாம்வல்ல இறைவனாகும். நான் நம்பமுடியவில்லையே என்றேன். எனது தந்தை சமாதானம் சொன்னார்: முட்டாளே இது கைலாச மஹாதேவனின் மூர்த்தி. பிராமணர் வேதோக்தமாகப் பிரதிஷ்டை செய்தது. அதனால் இதைக்கடவுளென்றே நம்பவேண்டும். இந்தக்கலியுகத்தில் சிவனைக்கண்ணாலே காணமுடியாது. அதனாலேதான் விக்ரகத்தில் ஆவாஹனம் செய்து கைலாசமகாதேவனை பக்தர் வணங்குவது. இதையே அவனென்றுணங்கினால், சிவனுக்கு மகிழ்ச்சியுண்டாகும் என்றார். இச்சமா

தானம் எனக்குத் திருப்தியளிக்கவில்லை. இதெல்லாம் வெறும் பசப்பு, பொய் என்றே கருதினேன். எனக்குப் பசித்தது. வீட்டுக்குப்போக உத்தரவு கேட்டேன். அப்பா 'பயலே போ; ஆனால் வீட்டில் ஒன்றும் தின்னாதே' என்று சொல்லி, ஒரு சிப்பாயுடன் என்னை அனுப்பினர். தாயாரிடம் பசி என்றேன். அவள் பக்ஷணங்கள் தந்தாள், நன்றாகச் சாப்பிட்டு உறங்கிப்போனேன். மறுநாள் விடிந்து எட்டு மணிக்கே எழுந்தேன்.

காலையில் தகப்பனர் ஜடேசர் கோயிலிலிருந்து வந்தார். நான் இரவு உண்டதைக்கேட்டு மகாபாபம் என்று மிகவும் சினந்தார். அந்தக்கற்சிலேயே மஹாதேவன் என்பதில் எனக்கு நம்பிக்கையில்லை. கல்லுக்காக நானேன் பட்டினியிருக்கவேண்டும்? என்றேன். பிறகு இந்த லிங்கபூஜையால் படிப்புக்கெடுகிறது. நான் இனிப்படிப்பில் முழுக்கவனமும் செலுத்தவேண்டும் என்றேன். தாயாரும் மாமாவும் என்னை ஆமோதித்தனர். தகப்பனரும் சரி என்று விட்டுவிட்டார். நானும் நிகண்டு நிருக்தம், பூர்வமீமாம்ஸம், வேதத்தில் கர்மகாண்டம் ஆகியவற்றைப் படித்தேன்'' படிப்பெல்லாம் சரி. மகன் மூர்த்திபூஜை செய்ய மறுத்தது தந்தைக்குப் பெருங் குறையாகவேயிருந்தது.

## 7. வைராக்கிய உதயம்

ஐந்தாண்டுகள் சென்றன. மற்றோர் அனுபவம் மூலசங்கரனை உஷார்ப்படுத்தியது. தயானந்தரே அதைச் சொல்லுகிறார்:

''என்னைத்தவிர எங்கள் வீட்டில் இரண்டு தங்கைகளும், தம்பிகளும் உண்டு. நான் பதினாறுவயதாயிருந்தபோது, கடைசித் தம்பி பிறந்தான். ஒரு நிலா இரவன்று நாங்கள் ஒரு நண்பர் வீட்டில் சதுர்க்கச்சேரி பார்த்துக்கொண்டிருந்தோம். அப்போது சேவகன் ஓடிவந்து, பதினாலுவயதுத் தங்கை கொடிய நோயால் வருந்துவதாகச் சொல்லவே நாங்கள் ஓடிச்சென்றோம். எவ்வளவோ சிகித்ஸைசெய்தும் பயனில்லை. இரண்டுமணிநேரத்தில் தங்கை உயிர்நீத்தாள். இதுதான் நான் அனுபவித்த முதல் துக்கம். இதனால் என் உள்ளம் பதைத்தது. என்னைச் சுற்றிப் பெற்றோரும் உறவினரும் பிலாக்கணம் வைத்து அலறினர். நான் கற்சிலைபோல நின்று, சிந்தனையில் ஆழ்ந்தேன். மனிதவாழ்வின் நிலையாமையைப்பற்றி நான் நீண்டு நினைத்தேன். உலகில் பிறந்தவர் எவரும் சாவைத்தவிர்க்க முடியாது. என்னையும் ஒருநாள் சாவு கொண்டேபோகும். சாவைத்தவிர்க்கும் வழி எங்கே? எங்கே நான் முக்தியடைய இயலும்? நாஸ்திகர் மரணவேதனைப் படு

கிருர்கள். நான் அவ்வாறின்றி, எப்படியாவது முக்திபெறவேண்டும் என்று அங்கேயே சங்கற்பம் செய்துகொண்டேன். இதன் பயனுக, காயக்லேசாதி வெளிவிரதங்களாலும் பயனில்லை. ஆத்யாத்ம தியானுதி சாதனங்களே பயனுகும் என்பதைத் தினம் உணர்ந்தேன். ஆனுல் என் மனவுறுதியை யாரும் அறியாமல், அந்தரங்கமாகவே வைத்துக்கொண்டிருந்தேன். யாருக்கும் சொல்லவில்லை.''

உடல் அநித்தியம், தார்மிகசாதனத்தால், ஆத்மயோகத்தால், முக்தி பெறவேண்டும் என்று சிந்திக்கும் வாலிபனுக்கு மற்ருேர் அனுபவம் நேர்ந்தது.

அவரே சொல்லுகிருர்: ''கொஞ்ச நாட்களுக்குப் பிறகு என்மாமா இறந்தார். மாமா நல்ல புலவர். சாது சம்பன்னர், பிறந்தது முதல் அவர் என்னிடம் மிக்க அன்பாயிருந்தார். நான் அவருக்குச் செல்வமாயிருந்தேன். அவர் சாவால் நான் மேலும் சோர்வடைந்தேன். உலகில் எல்லாம் நிலையற்றன; சஞ்சலமுடையன. எதைக் கருதி இந்த உலகில் உயிர் வாழ்வது? யாருக்காக? எல்லாம் அநித்தியம் என்று உணர்ந்தேன்.''

பிறந்தவர் முதிர்ந்து உதிர்ந்து கூண்டை உடைத்துப் பறக்கும் கிளிபோல், சாவின் இரகசியத் திரைக்குப் பின்னுல் ஓடி மறைவதை எல்லாரும் பார்க்கிருர்கள். ஆனுல் சில மகான்களுக்கே அதனுல் நிலையான வைராக்கியம் உண்டாகிறது. புத்தருக்குச் சாவு உடலின் நிலையாமையை விளக்கியது. தயானந்தருக்கும் அப்படியே வைராக்கியத்தைத் தந்தது.

## 8. துறவு

மூலசங்கர் முக்தியைத் தேடினுர். கர்சன்ஜீயோ இந்த இளங்காளையை பந்தப்படுத்த வழிதேடினுர். 1842-ல் மூலசங்கருக்குப் பத்தொன்பது வயது. வாலிபன் புத்தரைப் போலச் சிந்தைசெய்கிருன்: நேற்றிருந்த தங்கையும் மாமாவும் இன்றில்லை இப்படியே இன்றிருக்கும் நான் நாளை இருப்பதென்ன உறுதி இந்த உடல் இன்றிருக்கும் போதே, சம்சார துக்கத்திலிருந்து தப்பி முக்தி பெறவேண்டும். எப்படிப் பெறுவது?...பையன் உறவினரிடையே முக்திக்கு வழி கேட்டான். உறவினரோ 'ஐயா கர்சன்ஜீ, தங்கள் தலைமகன் வேதாந்தியாய் விட்டான். முக்தியாம், மோட்சமாம் ஏதோ பிதற்றுகிருன். ஞானப் பைத்தியம் முற்றுமுன்பே கால் கட்டுக் கட்டும்' என்றனர். தந்தை

பெண் பார்த்தார். திருமணம் வாலிபனின் வைராக்கியத்தைச் சிதறடிக்கும் என்பது பெற்ரேர் எண்ணம். மூலசங்கரன் கலியாணம் என்றாலே காதவழி ஓடுவான், கண்டிப்பாகச் சொல்லி விட்டான் தனக்கு மணம் கிணம் வேண்டாமென்று. தந்தை ஒரு பெண்ணைத் தீர்மானித்து நிச்சிதார்த்தம் வைத்தார். அதைத் தள்ளிப் போடச் சொல்லி மகன் மன்றாடினன். காரணம் ஒன்றும் கண்டு பிடித்தான். அப்பா நான் காசிக்குப் போய் வியாகரணம் படிப்பேன் என்றான். அவ்வளவு தூரம் போகக்கூடாது என்றாள் தாய்.

ஆறு மைல் தூரத்திலுள்ள ஒரு கிராமத்திற்கனுப்பி, அங்கே தக்க பண்டிதரிடம் படிக்க வைத்தார் தந்தை. பண்டிதர் வியாகரணம் சொல்லும் போது மூலசங்கரன் அந்தக்கரண சுத்தியுடன் உலகியல்பையும் துறவையுமே நினைத்தான். ஆசிரியரிடமும் மாணவன் 'எனக்குக் கலியாணம் வேம்பு, துறவே கரும்பு' என்று சொல்லி விட்டான். இந்தச் செய்தி தந்தைக்கு எட்டியது. இனிப் பையனைச் சும்மா விட்டால் சந்யாசியாய் விடுவான் என்று கர்ஸன்ஜீ, மளமளவென்று திருமணத்திற்கு ஏற்பாடு செய்து, மகனையும் அழைத்து வந்தார். பிறகு நடந்ததை அவரே சொல்லுகிறார் :

"எனக்கு வயது இருபத்தொன்று நடக்கிறது; இனி தாமதிக்கக் கூடாது. நான் பிரம்மச்சாரியாய் இருந்து கற்பதைப் பெற்ரேர் ஒருக்காலும் அனுமதிக்க மாட்டார்கள். முடிவில் கலியாணத்தை பலமாகத் தடுத்தொழிக்க ஒரு வழி கண்டேன். 1846-ம் ஆண்டு யாரிடமும் சொல்லாமல், யாரையும் நம்பாமல், வீட்டை அறவே துறந்தேன். முதல் நாள் இரவை எட்டு மைல் தூரத்திலிருந்த ஒரு கிராமத்தில் கழித்தேன். [படோராமபுரி ஹநுமான் கோயிலில் தங்கியதாகச் சொல்வர்] மறுநாள் விடிய மூன்று மணி நேரத்திற்கு முன்பே எழுந்து, பொழுது விடிவதற்குள் நான் முப்பது மைல் நடந்தேன். யாரும் அடையாளம் காண முடியாதபடி, நான் பொது ரஸ்தாக்கள் தெரிந்த கிராமங்களிலிருந்து விலகிச் சென்றேன். ஏனெனில், நான் கிளம்பிய மூன்றும் நாளே வீட்டை விட்டோடிய இன்ன ஊர் வாலிபனைத் தேடி ஒரு கூட்டம் சேவகரும் குதிரைச் சிப்பாய்களும் பரபரப்பாகத் திரிவதாகக் கேள்விப் பட்டேன். நான் என்ன வந்தாலும் சரி என்று தைரியமாக முன் சென்றேன். சில பிராமண பிக்ஷுக்கள் வந்தனர். அவர்களைப் பின் பற்றினேன். என் அணிமணி

களை அவர்கள் பார்த்தனர். 'தம்பீ, பிராமணர்களுக்குத் தானம் கொடுத்தால் பரலோகத்தில் நன்மையுண்டு. புண்ணியமுண்டு. இந்த அணி மணிகளை யெல்லாம் கொடுத்தொழித்தாலே துறவு பலிக்கும். கொடுக்கக் கொடுக்கப் புண்ணியம், என்றனர். நான் எனது கடுக்கன், தங்கக் காப்பு, மற்ற ஆபரணங்கள் எல்லாம் அவர்களுக்குத் தானம் செய்து விட்டேன். பந்தம் ஒழிந்தது. உடனே லாலாபகத் என்ற சாது வித்வான் வசித்த சைலா கிராமம் சென்றேன். இந்த அறிஞரைப்பற்றி வழியில் பைராகிகளிடம் கேள்விப் பட்டேன். சைலா ஆமதபாது மோர்வி ரயில் பாதையில், மூலியிலிருந்து எட்டு மைல் உள்ளது"

## 9. சுத்த சைதன்யர்

மூலசங்கர் கலியாணத்திற்குப் பயந்து வீட்டைத் துறக்கவில்லை. சாவின் திருவிளையாடலையும், உலகில் மக்கள் படும் துக்கத்தையும், மூடக் கொள்கைகளால் சமுதாயம் படும் இழிவையும் கண்டான் ஞானி. தனக்கு மட்டுமன்று; உலகிற்கே உய்யும் வழி தேடத்தான் புத்தர் போலக் கிளம்பினான் துறவி. சைலாவில் ஒரு நல்ல பிரம்மச்சாரி அவனைக் கண்டான். இந்த பரிசுத்தாத்மாவைக் கண்ட பிரம்மச்சாரி "ஐய நீ மகான், ஞான சம்பன்னன். எங்கள் சம்பிரதாயத்திற் சேர்; துறவறம் பூண்" என்றான்... மூலசங்கர் அவ்வாறே பிரமசரிய தீக்ஷை பெற்று, அதற்கேற்ற நியமங்களை யெல்லாம் அறிந்து செம் மஞ்சள் ஆடையணிந்து, சுத்த சைதன்யர் என்ற நாமமும் பெற்றான். பிறகு அவனே தன் கதையைச் சொல்லுகிறான் :

"சைலாவிலிருந்து பிரமசாரிக் கோலத்துடன், நான் ஆமதபாதிற் கருகேயுள்ள, கோடகங்காராவுக்கு வந்தேன்.

கோடகங்காராவில் நான் பெரிய பைராகி சங்கத்தைக் கண்டேன். அவர்கள் கூட்டத்தில் நான் ஒரு ராஜகுமாரியையும் கண்டேன். ஆனல் அவள் எங்கிருந்து வந்தாள் என்ற விபரம் தெரியவில்லை. ராஜகன்னிகை என்னிடம் பரிகாசமாகப் பேசத் தொடங்கினாள். ஆனல் நான் கவனமாக இப்பரிகாச தமாஷுக்கு இடந்தராமல் ஒதுங்கினேன். கோடகங்காராவில் மூன்று மாதங்கள் கழித்தேன். ஒரு பைராகி, "என்னப்பா பட்டாடை போட்டுக் கொண்டு எப்படி நீ பைராகியாவாய்?" என்று குத்திக் காட்டினான். நான் உடனே பட்டாடையைக் களைந்து கடையில்

சாதாரண ஆடை வாங்கி அணிந்தேன். அப்போது என்னிடம் மூன்றே ரூபாய் இருந்தது. கோடகங்காரா சாதுக்களிடம் எனக்கு வேண்டிய ஞானம் கிடைக்கவில்லை. சித்திபூரில் கார்த் திகை மேளம் நடக்கிறது. அங்கே சாதுக்களைக் காணலாம் என்று புறப்பட்டேன். துரதிட்ட வசமாக வழியில் ஒரு வைரா கியைச் சந்தித்தேன். அவர் என் ஊருக்கு அருகேயுள்ள ஒரு கிராமவாசி. என் வீட்டாரை நன்கறிந்தவர். என் நிலைப்பைப் போலவே அவர் வியப்பும் அதிகரித்தது. இந்த வேஷத்தில் நான் அங்கே வந்த காரணத்தை அவர் கேட்டார். உலகைச் சுற்றிப் பார்க்கவே கிளம்பியதாகச் சொன்னேன். அவர் என் வேஷத் தைக் கேலி செய்து, "இதற்காகவா வீட்டை விட்டு வந்தாய்" என்று குறை கூறினார். நான் நிகைத்தேன். சித்திபூர் மேளத் திற்குச் செல்வதாகச் சொன்னேன். இனி நான் செய்யப் போகும் காரியங்களையும் அவர் மெள்ள அறிந்து கொண்டு சென் றார். நானும் உடனே சித்திபூர் சென்று நீலகண்டாலயத்தில் இருந்த சந்நியாசிகளுடனும் பிரமசாரிகளுடனும் தங்கினேன். அங்கே ஏராளமான கூட்டம். நான் பல சாதுக்களையும் பிரம சாரிகளையும் கண்டு பயன் பெற்றேன். அவர்களுள் எனக்கேற்ற யோகியைத் தேடினேன். சில நாட்கள் நல்லோர் கூட்டத்தில் மகிழ்ந்தேன்.

## 10. வந்தார் தந்தை

உலகில் நிம்மதி யடைவதும் துறவின்பத்தை அனுபவிப்பதும் எளிதில்லை. எத்தனையோ பந்தங்களும் பாசங்களும் வந்து சோதிக் கும். "கோடகங்காராவில் பார்த்த வைராகி, துரோகம் செய் தான். என் எண்ணத்தையும் இருப்பிடத்தையும் அவன் உடனே வீட்டிற்கு எழுதி விட்டான். அதன் பயனாக, எனது தந்தை சிப் பாய்களுடன் சித்திபூருக்கே வந்து, மேளக் கூட்டத்தில் என்னை அலசிப் பார்த்தார். நான் இருந்த சாதுக்களிடமிருந்து குறிப் பறிந்தார். ஒருநாட் காலை திடீரென்று என்முன் தோன்றினார். அவர் கோபம் தீப்பொறிந்தது. அவர் என்னைக் கடுமையாகத் திட்டி, என்னால் குலத்திற்கே அவமானம் வந்தது என்று சினந் தார். அவரை இப்போது எதிர்ப்பதில் பயனில்லை. அவருடைய கோபத்தைக் கண்டதுமே இன்னது செய்வதே உசிதம் என்று தெரிந்து கொண்டேன். நான் கைகுவித்து அவர் காலில் விழுந்து, கோபந் தணியச் சொன்னேன். ஒருவர் துர்போதனையால் வீட்டை விட்டேன். அதனால் கஷ்டப் பட்டேன்; ஊருக்குத் திரும்பிக்

கொண்டிருந்தேன். தாங்களும் வந்தீர்கள். இப்படியே தங்களு டன் வருகிறேன் என்றேன். என் இதமொழிகளைக் கேளாமல் அவர் கடுஞ் சினங்கொண்டார். என் மஞ்சள் ஆடையைக் கிழித்தெறிந்தார். கையிலிருந்த சுரக் குடுக்கையைப் பறித்துத் தூர வீசினார். சொல்ல முடியாத வசைமாரி பொழிந்தார். அடே மாத்ருஹத்தா (தாயைக் கொன்றவனே) என்று கோபா வேசத்தில் கடுமையாகத் திட்டினார். நான் பணிவுடன் கூட வரு வதாகச் சொல்லியும் கேளாமல், சிப்பாய்களிடம் ஒப்புவித்துக் கண்கொட்டாமல் இரவும் பகலும் காவல் காக்கச் சொன்னார்.

ஆனால் அவரைப் போலவே என் மனமும் உறுதியாயிருந்தது. என் காரியத்தைச் சாதித்து விடவே தீர்மானித்துத் தப்பி ஓடச் சமயம் பார்த்திருந்தேன். அதே இரவு சமயம் வாய்த்தது. மணி மூன்று; என்னைக் காவல்காத்த சிப்பாய் நான் உறங்கி விட்ட தாக எண்ணி, தானும் உறங்கிப் போனான். எங்கும் அமைதி; ஒரு தம்பாவில் தண்ணீர் எடுத்துக் கொண்டு வெளியே சென்று ஓடி னேன். ஒரு மைல் ஓடுவதற்குள் என்னைத் தேடத் தொடங்கினர். அங்கே அடர்த்தியான மரம் ஒன்று, ஒரு கோயில் கோபுரம் மட் டும் பரவி உயர்ந்திருந்தது. நான் சட்டென்று மரத்தில் ஏறி, இலைகளிடையே மறைந்து, கோபுரத்தில் புகுந்து அங்கே ஒளிந்து கொண்டேன்.

விதிப்படி நடக்கட்டும் என்று கமக்கமாயிருந்தேன். சுமார் நான்கு மணிக்கு, சிப்பாய்கள் பரபரப்புடன் கோயிலின் உள்ளும் புறமும் என்னைப்பற்றி விசாரித்துத் தேடித் திரிவதை கோபுரத்திலிருந்தே மெல்லப் பார்த்தேன். நான் மூச்சைப் பிடித்துக்கொண்டு, அசையாமல் இருந்தபடி யிரிந்தேன். முடிவில் பையன் இங்கே யில்லை என்றெண்ணி அவர்கள் ஏமாந்து சென் றனர். அவர்கள் மறுபடி வருவார்களோ என்ற பயத்தால் நான் கோபுரத்திலேயே ஒளிந்திருந்து, இருட்டானதும் எதிர்ப் பக்கம் ஓடினேன். பொது ரஸ்தாக்களை விலகி, அதிகமாக யாரையும் வழி கேட்காமல் நான் ஓடி, மறுபடியும் அஹமதா பாதுக்கே வந்து, உடனே அங்கிருந்து பரோடா சென்றேன்.

தந்தை கர்ஸன்ஜீ இன்னது செய்வதென்று தெரியாமல், கவலை சுமந்து திரும்பினார். வீட்டுக்குச் சென்றதும் அவர் மனம் இனிச் சம்சாரத் துயர்களில் ஈடு படாமல், புண்ணிய கைங்கரியங் களில் கடைசி நாளைக் கழிக்க விரும்பியது. கர்ஸன்ஜீ தமது பெருஞ் செல்வத்தை தான தருமங்களில் செலவிட்டார். காசி,

கயா, பூரி, மதுரா முதலிய திருத்தலங்களைத் தரிசித்து, ஆங்காங்கே ஏராளமான சிவ புண்ணியம் செய்தே நாளைக் கழித்தார். மூலசங்கரன் தயானந்தராகி, உலகப் புகழ் பெற்றதை அவர் சிவலோகத்திலிருந்துதான் பார்த்திருக்க முடியும்! அவருடைய இறுதி நாள் ஜபதப தான தருமங்களிலேயே சென்றது என்பதே நமக்குத் தெரிகிறது.

## 11. தயானந்த சரஸ்வதி

சுத்த சைதன்யர் எடுத்த ஓட்டம், பரோடாவில் போய் சுதந்தர மூச்சு விட்டது. சித்திபூர் சம்பவத்திற்குப் பிறகு அவர் உள்ளம் துறவறத்திலும் யோகத்திலும் தீவிரப்பட்டது. பரோடாவில் பிரம்மானந்தர் என்ற வேதாந்தி புகழ் பெற்றிருந்தார். சுத்தசைதன்யர் அவரிடம் சென்றதும் பிறகு நடந்ததும் சொல்லுகிறார் :

"பரோடாவில் கொஞ்ச காலம் தங்கினேன். அங்கே சேதன மடத்தில் பிரம்மானந்தரும் பல துறவிகளும் இருந்தனர். அவர்களுடன் வேதாந்த விசாரம் செய்தேன். பிரம்மானந்தரும் மற்றத் துறவிகளுமே நான் பிரம்மம், (அஹமாத்மா பிரம்மம்) என்ற உண்மையை எனக்கு நன்று விளக்கினர். நான் பிரம்மம் பிரம்மத்தின் அம்சம். எனது ஜீவனும் பிரம்மமும் ஒன்றுதான். முன்னே சாஸ்திரங்களைப் படித்தபோது, இதை ஒருவாறு தெரிந்துகொண்டேன், இப்போது அஹம் பிரமம் என்பதை நிச்சயமாக அறிந்தேன்.

பரோடாவிலிருந்தபோது, ஒரு காசிப் பெண்மணி ஓரிடத்தில் வித்வத் சபை நடத்தப் போவதாகச் சொன்னாள். நான் அந்த ஊருக்குப் புறப்பட்டேன். வழியில் சச்சிதானந்த பரமஹம்ஸருடன் கலை விஷயமாகவும், வேதாந்த விஷயமாகவும் பேசினேன். அவர் சாணோத கர்ணாலியில் பெரிய சந்யாசிகளும், பிரமசாரிகளும் இருப்பதாகச் சொன்னார். அங்கே சென்றேன். அது நருமதைக் கரையிலிருந்தது. அங்கேதான் முதன் முதல் நான் தீக்ஷித யோகிகளையும், பிரமசாரிகளையும் கண்டேன். அவர்களுடன் அளவளாவினேன்.

நான் பல மாதங்கள் பரமானந்த பரமஹம்சரிடம் வேதாந்த சாரமும், வேதாந்த பரிபாஷையும் இன்னும் பல ஆத்மீக கிரந்தங்களும் கற்றேன். இந்தக் காலமெல்லாம் பிரமசாரியாகிய நான், என் கையால் சமைத்துண்ண வேண்டியிருந்தது. அது படிப்புக்

குத் தடையா யிருந்தது. அதைத் தடுக்க நான் நான்காவதான ஸந்யாச ஆசிரமம் பூண முயன்றேன். இத்துடன் இன்னொரு காரணமுண்டு. இதுகாறும் நான் இயற்பெயரையே சொல்லி வந்தேன். என் குலம் பிரசித்தி பெற்றது. பெயரைக் கேட்டு யாராவது இன்னார் பிள்ளையா என்று அடையாளம் கண்டு கொள்வார்களோ என்ற பயமும் இருந்ததால், பெயரை மாற்றிக்கொள்ள நினைத்தேன். ஸந்யாசம் வாங்கிக் கொண்டால் தொல்லை யில்லை. நான் முதலில் ஒரு தக்ஷிணதி நண்பரைக்கொண்டு நல்ல வித்வானை ஒரு தீக்ஷிதரிடம் எனக்கு உடனே சந்யாசம் தரும்படி சிபார்சு செய்யச் சொன்னேன். "நீ அதி பால்யம்" என்று அந்த தீக்ஷிதர் மறுத்தார்: ஆனால் நான் கவலைப்பட வில்லை. பல மாதங் கழித்து ஒரு தக்ஷிண சுவாமிகளும், பிரமசாரியும் வந்து சாணோதக் காட்டில் இரண்டு மைலுக்கப்பால் இருந்த ஒரு பாழுங் கட்டிடத்தில் முகாம் போட்டனர். வேதாந்த நிபுணரான எனது தக்ஷிண நண்பர் என்னையும் அழைத்துக்கொண்டு, அவர்களைக் காணச் சென்றார். தத்துவ விசாரத்தால் ஒருவருக்கொருவர் நிரம்பப் படித்த தீக்ஷதர்களென்று அறிந்து கொண்டனர். அவர்கள் சங்கராசாரியாரின் தலைமை நிலையமான சிருங்ககிரி மடத்திலிருந்து வந்ததாகவும், துவாரகைக்குச் செல்வதாகவும் சொன்னார்கள். அவருள் ஒருவர் பூர்ணானந்த சரஸ்வதி. அவரிடம் எனது நண்பரை என் நிலைமை, விருப்பம் எனக்குள்ள கஷ்டங்கள் எல்லாம் சொல்லச் செய்தேன்.

அவர் பூர்ணானந்தரிடம் சொன்னதாவது :—"இவன் இளம் பிரம்மசாரி; தடையில்லாமல் வேதாந்த சாஸ்திரங்களைப் படிக்க விரும்புகிறார்; இவர் குணமும் நடையும் மிக நிர்மலமானது என்பதற்கு நான் அத்தாட்சி கூறுகிறேன். இவர் எல்லாவிதத்திலும் சந்யாச ஆசிரமத்திற்குத் தகுதியானவர். சந்யாசத்தின் கடின நியமங்களை இவர் அறிவார். இவருக்கு உயர்ந்த துறவறம் தந்தருள வேண்டும். துறவு பூண்ட பிறகு இவர் சம்சாரத் தொல்லைகளிலிருந்து விடுபட்டு, நிம்மதியாக பிரம்ம வித்யாவிசாரம் செய்து கொண்டிருப்பார்". பூர்ணானந்தர், "இவர் மிகவும் இளைஞர்; மேலும் குஜராதி; நான் மராட்டி; இவர் ஒரு குஜராதி சுவாமியிடம் தீக்ஷை பெறுதலே நலம்" என்று முதலில் மறுத்தார். எனது பண்டித நண்பர், "தக்ஷிணத்து சுவாமிகள் கௌடாதிகளுக்கு தீக்ஷை கொடுக்கும்போது பஞ்ச திராவிடருள் ஒருவரான

இவருக்கு தீக்ஷை தரத் தடையேன்? இவர் தக்க பாத்திரம்" என்ற பிறகே அவர் ஒப்புக் கொண்டார். மூன்றும் நாள், பூர்ணானந்தர் எனக்கு ஸந்யாஸ தீக்ஷை தந்து, தயானந்த ஸரஸ்வதி என்ற நாமத்தையும் அளித்தார். என் விருப்பத்தாலும் குருவின் ஆணையாலும் நான் தண்டத்தை அவரிடமே அர்ப்பணித்து விட்டேன். ஏனெனில் அதற்குரிய சடங்குகள் என் ஞான ஆராய்ச்சியில் குறுக்கிடும். தீக்ஷை தந்த பிறகு, அந்த இருவரும் துவாரகைக்குச் சென்றனர்.

நான் கொஞ்ச நாள் சாணோதில் துறவியாகத்தங்கினேன். அப்போது வியாசாச்ரமத்தில் யோக சாஸ்திர வித்பன்னரான யோகானந்த சுவாமிகள் இருப்பதாகக் கேட்டு, அங்கே சென்றேன். அவரிடம் மாணவனாகி நான் சிறிது யோக வித்தையும் யோக கிரியானுஷ்டானமும் பெற்றேன். பிரதம சிக்ஷையானதும் நான் சினூர் சென்றேன். அங்கே கிருஷ்ண சாஸ்திரி என்ற புலவரிடம் வியாகரணம் முற்றிலும் படித்தேன். பிறகு சாணோதத்திற்குத் திரும்பி, அங்கேயே அதிக நாள் தங்கினேன். அங்கே ஜ்வாலானந்த பூரி, சிவானந்த கிரி என்ற இரு யோகிகளைக் கண்டேன். அவர்களுடனும் யோகாப்பியாசம் செய்தேன். மூவரும் பரம யோக சாஸ்திரத்தைப் பற்றி சர்ச்சை செய்தோம். அவர்கள் சென்று ஒரு மாதத்திற்குப் பிறகு அவர்கள் குறித்தபடியே நான் அஹமதாபாதிற்கு அருகேயுள்ள துக்தேச்வரத்திற்குச் சென்றேன். அங்கே அவர்களை சந்தித்தேன். வாக்களித்தபடியே அவர்கள் எனக்கு யோக வித்தையை விளக்கி, சாதன ரகசியங்களைப் பயிற்றினார்கள். யோக சாத்திரத்தின் அனுபவ ஞானம் அவர்களாலே தான் எனக்கெய்தியது. அதற்காக அவர்களுக்கே நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறேன். ஆனால் இவர்களைவிட இன்னும் பெரிய யோகிகள் யோகவித்யாபாரங்கதர்கள் இராசபுதனத்தில், அபுமலை மேல் இருப்பதாகக் கேள்விப் பட்டு, அங்கே சென்றேன். புண்ணியத் தலங்களைச் சுற்றிக் கொண்டு நான் பவானி கிரியில், ஒரு மஹாத்மாவைக் கண்டேன். அவரிடம் சிற்சில யோகப் பயிற்சிகள் பெற்றேன்."

இவ்வளவு பெரியவர்களைக் கண்டும் பயின்றும் தயானந்தருக்கு இன்னும் மனச் சாந்தி யுண்டாக வில்லை. அங்கே கொஞ்சம் இங்கே கொஞ்சமாகக் கற்று யோக சிகரத்தை ஏற முடியாது; நிம்மதியான தியான சாதனங்களாலே தான் முடியும். தியான சமாதிக்கு வழிகாட்டும் குருமாரை தயானந்தர் தேடினர்.

சிலர் இமாலயத்திலே தான் சிறந்த யோகிகள் இருப்பதாகச் சொன்னார்கள். ஹரித்வாரத்தில் நலல துறவிகள் இருப்பதாகவும் கேள்விப் பட்டார் சுவாமிகள். உடனே இமாலயப் பயணம் தொடங்கினர்...அவரே அதை உருக்கமாகச் சொல்லுகிறார்...

## 12. இமாலயத்தில் அனுபவங்கள்

"கி. பி. 1845 வைசாக மாசம், நான் ஹரித்வாரத்தில் கும்ப மேளத்தின் போது போய்ச் சேர்ந்தேன். அங்கே ஏராளமான ஞானிகளும், தத்வதர்சிகளும் சேருவார்கள் என்பதை முன்பறியேன். மேள யாத்திரைக் கூட்டம் கரையுமட்டும், நான் கங்கைக்கு எதிரே சண்டிவனத்தில் யோகாப்யாசம் செய்தேன். கூட்டம் கலைந்ததும் நான் ரிஷீகேசம் சென்று, துறவிகளுடனும், பெரும்பாலும் ஏகாந்தமாகவும் யோக சாதனமும் நூலாராய்ச்சியும் செய்தேன். ரிஷீகேசத்தில் கொஞ்ச காலம் ஏகாந்த வாசம் செய்த பிறகு, ஒரு பிரம்மச்சாரியும் இரண்டு மலை வாசிகளான சாதுக்களும் வந்து சேர்ந்தனர். மூவரும் டேஹரிக்குச் சென்றோம். அங்கே மெத்தப் படித்த ராஜ பண்டிதர்கள் பலர் இருந்தனர். அவருள் ஒருவர் தம் வீட்டில் அமுதுண்ண எங்களை அழைத்தார். குறித்த நேரத்தில் ஆள் அனுப்பினர். நாங்கள் மூவரும் சென்றோம். அந்த ராஜபண்டிதர் வீட்டிற்குள் நுழைந்ததுமே, ஒரு பிராமணர் மாமிசம் அறுக்கக் கண்டேன். மேலே சென்றதும் சில பண்டிதர்கள் சுற்றியமர்ந்து மாமிசராசிகளை அறுத்துக் குவிக்கக் கண்டேன். மிருகங்களின் தலைகளும் அங்கங்களும் அங்கு சிதறிக் கிடந்தன. அவற்றை அவர்கள் துண்டு போட்டுக் கொண்டிருந்தார்கள். வீட்டுத் தலைவர் உபசாரம் சொல்லி எங்களை வரவேற்றார். நடக்கட்டும் தங்கள் காரியம் என்றல் தடை வேண்டாம் என்று நயமாகச் சொல்லி, நான் உடனே அந்த வீட்டை விட்டு என் ஜாகைக்கு வந்தேன். சில நிமிஷங்களுக் கெல்லாம், கறிதின்னிப் பண்டிதர் வந்து என்னை வருந்தி அழைத்தார். எனக்காகவே அப்படி மாமிசம் அறுத்துச் சமைத்திருப்பதாகச் சொன்னர். நான் அவர் அழைப்பைக் கண்டிப்பாக மறுத்து, நீங்களெல்லாம் புலாலுண்பவர்கள்; நான் திடமான சைவன். புலாலைக் கண்டாலே எனக்குக் குமட்டும். எனக்கு உணவுதர விருப்பமானல், அரிசி காய்கனிகளை இங்கே அனுப்புங்கள். எனது பிரம்மச்சாரி உணவு தயாரிப்பார் என்றேன். அவர் அப்படியே செய்வதாகச் சொல்லி வருத்தத்துடன் சென்றார். வேண்டியதை அனுப்பினர்.

## 13. தாந்திரிக ஆபாசம்

தேஹரியில் கொஞ்சகாலம் தங்கினேன். அப்போது ஒரு பண்டிதரிடம் எனக்குப் படிக்கச் சில புத்தகங்களையும் ஏடுகளையும் கேட்டேன். அவர் சில இலக்கணங்கள், இலக்கியங்கள், நிகண்டுகள், தாந்திர நூல்கள் கிடைக்குமென்றார். தாந்திர நூல்களை நான் அதுகாறும் பார்த்ததில்லை. அதைப் படிக்கக் கேட்டேன். பண்டிதர் பல தாந்திர நூல்களைத் தந்தார். புத்தகத்தைத் திறந்ததுமே நம்ப முடியாத படி அவ்வளவு அசுத்த ஆபாச, அபத்த அசங்கியச் சரக்குகளைக் கண்டு அருவருத்தேன். தாந்திர நூல் தாய், மகள், அக்கா தங்கை, சண்டாளி சாமாரி என்ற விய வஸ்தை யில்லாமல், ஸஹகமனம் செய்யத் தூண்டுகிறது. அதில் நிர்வாண ஸ்திரீயை பூஜை செய்யச் சொல்லியிருக்கிறது. எல்லாப் பிராணிகளையும் கொன்று புலாலுண்ணலாம், மீனுண்ணலாம், மது பானம் செய்யலாம்; இவையெல்லாம் பூஜா விதியாம். பிராமணன் முதல் சாமரன் வரையில், வ்யவஸ்தை யில்லாமல் பஞ்ச மகாரா னுஷ்டானம் செய்யச் சொல்லுகிறது. மாமிஸம், மது, மத்ஸ்யம், முத்திரை மைதுனம் ஆகியவை பஞ்சமகாரங்கள். இந்தப் பைசாச அனுஷ்டானங்கள் முக்தி தருமாம். ஆனந்த முக்திக்கு இவை வழியாம். இந்தத் தாந்திர நூல்களைப் படித்து முடித்த போது, என் அருவருப்பிற்கும் வியப்பிற்கும் அளவில்லை. இப்படிப் பட்ட ஆபாசக் குப்பைகளை எழுதி, தர்ம சாஸ்திரம் என்று பிரசாரம் செய்யும் தூர்த்தரை வெறுத்து, அங்கிருந்து ஸ்ரீநகரம் சென்றேன்.

## 14. தலயாத்திரைகள்

நான் கேதாரிநாதில் தங்கி, உள்ளூர் பண்டிதர்களிடம் தாந்திர ஆபாசங்களைக் காட்டி, நேர்ந்த போதெல்லாம் வாதாடினேன். அங்கே கங்காகிரி என்ற சாது பழக்கமானார். பகலெல்லாம் அவர் ஒரு மலைக்காட்டில் வசித்தார். அவர் எனக்குகந்த நண்பரானார்; மதிக்கத்தக்க நண்பர். நாங்களிருவரும் யோக சாஸ்திர விசாரம் செய்தோம். கேள்வியும் பதிலும் எங்கள் அன்யோன்யத்தை வளர்த்தன. அவர் எனக்குத் தகுதியான நண்பரானார். நான் அவரிடம் இரு மாதங்கள் தங்கினேன். அவர் நேசம் அவ்வளவு இனிமையாயிருந்தது. அந்தப் பருவ காலம் முடிந்து இலையுதிர் காலம் தொடங்கிய போதே, எனது சகாக்களான பிரமசாரியுடனும் இரண்டு சந்யாசிகளுடனும், கேதார் கட்டத்திலிருந்து புறப்பட்டேன். நாங்கள் ருத்ரப்பிரயாகை

முதலிய ஸ்தலங்களைப் பார்த்துக் கொண்டு, அகஸ்திய முனிவர் கோயிலுக்குச் சென்றோம். அதற்கும் மேலே சிவபுரி என்ற மலைச் சிகரம் உள்ளது. அங்கே மாரிகாலம், நான்கு மாதங்கள் கழித்தேன். பிறகு எனது பிரம்சாரியையும் இரண்டு துறவிகளையும் பிரிந்து, தனியாகவே கேதார்நாதுக்குப் புறப்பட்டு, குப்த காசிக்குச் சென்றேன். அங்கே சில நாள் இருந்தேன்.

## 15. யோகிகளைத் தேடுதல்

பிறகு திரியுக நாராயணன் கோயிலுக்குச் சென்றேன். வழியில் கௌரி குண்டத்தையும் பீம குகையையும் கண்டேன். சில நாட்களில் எனக்குகந்த இடமான கேதார் கட்டத்திற்கு வந்து தங்கினேன். எனது சகாக்களான பிரமசாரியும் இரண்டு சந்யாசிகளும் வருமட்டும் அங்கே கேதார்கோயில் பண்டாக்களும் பூசாரிகளுமான ஜங்கம சம்பிரதாய பிராமணர்களுடன் உறவு கொண்டேன். நான் அவர்கள் சம்பிரதாயங்களையும்; சடங்குகளையும் அறிந்து கொள்ள விரும்பியே கூர்ந்து கவனித்தேன். என் விருப்பம் நிறைவேறியது. பிறகு என்றும் வெள்ளிப்பனி மூடிய சுற்றியுள்ள மலைத் தொடர்களைக் கண்டு, அங்கே இருப்பதாகச் சொல்லும் மகா புருஷர்களைத் தரிசிக்க அவாவினேன். இன்னும் நான் ஒரு மகா புருஷனையும் காணவில்லை. என்ன வந்தாலும் சரி, மஹா புருஷர் யாராவது அங்கே இருக்கிறாரா என்று பார்த்து விடவே நான் உறுதி கொண்டேன். ஆனால் பொறுக்க முடியாத குளிர்; மலைப்பாதை கடினம்; ஆதலால் நான் முதலில் மலைவாசிகளிடம் இந்த விஷயமாகக் கேட்டேன். யாரைக் கேட்டாலும் மகா மூர்க்கத்தனம், அல்லது மூடத்தனமே மிச்சம். இந்த மாதிரி இருபது நாட்கள் இங்குமங்கும் திரிந்து தளர்ந்தேன். முடிவில் நான் தனியாகத் திரியத் தொடங்கினேன். ஏனெனில், என்னுடனிருந்த பிரமசாரியும் இரு துறவிகளும் குளிருக்குப் பயந்து இரண்டே நாள் இருந்து சென்று விட்டனர். பிறகு நான் துங்கநாத் சிகரத்தி லேறினேன். அங்கே கோயிலில் ஏராளமான பண்டாக்களையும் விக்ரகங்களையும் கண்டு, அன்றே கீழே இறங்கி விட்டேன். என்முன் இரண்டு பாதைகளைக் கண்டேன். ஒரு வழி மேற்கும், மற்றொன்று தென் மேற்கும் சென்றது. எனக்கு எந்த வழிச் செல்வதெனத் தெரியவில்லை. முடிவில் காட்டுப்பக்கம் செல்லும் பாதையில் போனேன். கொஞ்ச தூரம் சென்றதும் நான் அடர்ந்த காட்டில் அகப்பட்டுக் கொண்டதாக அறிந்தேன். காட்டில் கரடு முரடான பாறைக

ளும் வறட்டு ஓடைகளும் இருந்தன. கொஞ்ச தூரம் சென்ற தும் அந்த வழி அடைக்கப் பட்டிருந்தது. எங்கும் வழியில்லை. நான் மேலேற வேண்டும்; அல்லது கீழிறங்க வேண்டும். மேலே றுவதானால், பல இடர்களைத் தாண்ட நேரும். இருட்டிப்போகும். இரவில் உச்சிக்கேற முடியாது. ஆதலால் கீழிறங்குதலே நலம் என்று தீர்மானித்தேன். புல் புதர்களைப் பற்றிக் கொண்டே நான் மெல்ல மெல்லக் கீழே இறங்கினேன். கொஞ்ச நேரத்தில் நான் ஒரு வறண்ட நதியின் உயர்ந்த கரைக்கு வந்து, ஓர் உயர்ந்த பாறையில் நின்று நாற்புறமும் சுற்றிப் பார்த்தேன். நாற்புறமும் உயர்ந்த பூமி, சிறு சிறு குன்றுகள், மனிதர் புகமுடியாத அடர்ந்த காடுகளையே கண்டேன். இதற்குள் சூரியன் அஸ்தமித் துக் கொண்டிருந்தது. இதோ இரவு வந்து விடும், மனிதரில்லா மல், நீரோ நெருப்போ இல்லாமல் இந்தத் தனிக் காட்டில் என்ன செய்வது என்று நான் திகைத்தேன். எனது மனித முயற்சி தவிர வேறு உபாயமில்லை. பெருமுயற்சியால் அந்த முள்காட் டில் என் ஆடை கிழிய, உடல் நைய, கால் நொண்ட மலையி னின்று இறங்கி அடிவாரத்திற்கு வந்து வழி கண்டேன். எங்கும் இருள் மூண்டது; நான் அந்த வழியையே பற்றி விடாமல் மேன்மேலும் சென்றேன்.

கொஞ்ச தூரத்தில் சில குடிசைகளைக் கண்டேன். குடிலில் உள்ளவர்களிடம் கேட்டு, அந்தப் பாதை ஒகீ மடத்திற்குப் போகிறதென்று அறிந்தேன். நானும் அதை நோக்கிச் சென்று சிறிது நேரத்தில் ஒகீ மடத்தில் சேர்ந்தேன். இரவை அங்கே கழித்தேன்.

காலையில் களைப்பாறித் தெம்பாயிருந்ததால், நான் குப்த காசிக்கு வந்து, அங்கிருந்து மறுநாள் மேற்கொண்டு பயணம் தொடங்கினேன். ஆனால் அந்தப் பயணம் அவ்வளவு சுகமில்லை. ஆதலால் நான் ஒகீ மடத்திற்கே திரும்பி வந்தேன். அந்த மடத்தை நன்றாகப் பார்க்கவும், அதில் உள்ளவர்களின் வாழ்க் கையைக் கவனிக்கவும் விரும்பினேன். ஒகீ மடம் செல்வச் செழிப்புள்ளது. துறவும் வைராக்கியமும் காட்டுவது. அந்தப் புகழ் பெற்ற செல்வ மடத்தை நான் சாவகாசமாகச் சோதித் துப் பார்த்தேன். மடத் தலைவரான மஹந்து, என்னை அங்கேயே தம் சிஷ்யனாக இருக்கச் சொல்லி வற்புறுத்தினார். இலட்சக் கணக்கான தம் சொத்து, அதிகாரம் ஆடம்பரங்களுக் கெல்லாம் நானே வாரிசாகி, ஒரு நாள் அவர் ஸ்தானத்தில் நானே மஹந்து

வாக விளங்கலாம் என்றும் ஆசை காட்டினர். "ஐயா, நான் இந்தச் செல்வச் சிறப்பை யெல்லாம் கருதியிருந்தால், இந்தப் பணக்கார மடத்தை விட எள்ளளவும் செல்வத்தில் குறையாத எனது தகப்பனர் வீட்டை விட்டு ஓடி வந்திருக்க மாட்டேனே. இந்த உலகின்பங்களை யெல்லாம் துறந்து, நான் எதைத் தேடுகிறேனே, அதன்பால் நீர் முயலவு மில்லை, அடையவு மில்லையே" என்றேன். "நீ எதைத் தேடுகிருய்" என்று மடத்தலைவர் கேட்டார். "திவ்ய ஞானம், ஓர் உண்மை யோகியின் சத்திய வித்தை, தன் ஆத்ம சுத்தியால் ஒருவன் அடையத்தகும் முக்தி, அஃதின்றி அடைய முடியாத சில சித்திகள்—இவையே நான் தேடுவன. இவற்றுடன் நான் மனிதன் மனிதருக்குச் செய்ய வேண்டிய கடமைகளை யெல்லாம் செய்து, மனித சமுதாயத்தை உயர்த்தவும் வழி தேடுகிறேன்" என்றேன். "இதெல்லாம் நல்லது தான்; கொஞ்ச காலமாவது என்னிடம் இரு" என்றுர் மஹந்து. நான் பதிற் சொல்லாமல் சும்மா இருந்தேன். இன்னும் நான் தேடியது கிடைக்க வில்லை.

மறுநாள் அதிகாலையிலேயே எழுந்து, நான் இந்தச் செல்வ மடத்தை விட்டு ஜோஷி மடத்திற்குச் சென்றேன். அங்கே உண்மையான மராட்டியத் துறவிகளுடனும் சாஸ்திரிகளுடனும் நான் கொஞ்ச நாள் தங்கினேன்.

## 16. ஜோஷி மடம்

ஜோஷி மடத்தில் நான் பல யோகிகளையும் கற்றறிந்த துறவிகளையும் சந்தித்தேன். அவர்களுடன் தொடர்ந்து பேசி யோக வித்தையைப் பற்றி அதிகம் தெரிந்து கொண்டேன். அவர்களிடம் விடை பெற்று இசை பெற்ற யாத்ரா ஸ்தலமான பதரீ நாராயணம் சென்றேன். அப்போது பதரீ ஆலயப் பண்டா மிகவும் படித்த ராவல்ஜீ. அவருடன் சில நாள் நான் இருந்தேன். இருவரும் வேதங்களைப் பற்றியும் தர்சனங்களைப் பற்றியும் சம்பாஷித்தோம். அருகே யாராவது நல்ல யோகி இருக்கிருரா என்று நான் கேட்டேன். அச்சமயம் யாருமில்லை. சிலசமயம் நல்ல யோகிகள் கோயிலுக்கு வருவதுண்டு என்றுர். நான் ஏமாந்தேன். எனினும் இந்த மலைப் பிரதேசத்தில் யோகிகளைத் தேடிப் பிடிக்க உறுதி கொண்டெழுந்தேன்.

ஒருநாட் காலை புறப்பட்டு, நான் மலையடிவாரத்தைப் பற்றிச் சென்று, அலகநந்தா நதிக்கரை சேர்ந்தேன். அதன் அக்கரையில்

மாஞ கிராமம் தென்பட்டது. ஆனால் அவற்றைத் தாண்டி அங்கே செல்லப் பிரியமில்லை. மலையடிவாரத்தில் ஆற்றங்கரையையே பின்பற்றி நான் ஒரு காட்டை நோக்கிச் சென்றேன். மலையும்பாதையும் பனிமூண்டிருந்தன. மிகவும் இடர்ப்பட்டு நான் அலகந்தாவின் தோன்றிடத்தை அடைந்தேன். சுற்றிலும் உயர்ந்த மலைகள், முகமறியாத தேசம்; என் முன்னேற்றம் தடைப் பட்டது. திடீரெனப் பாதை நின்றது. எங்கும் வழித்தடம் இல்லை. இனி என்ன செய்வதென்று தெரியவில்லை. நான் ஆற்றைக் கடந்து வழிவினவத் தீர்மானித்தேன். நான் சாதாரண லேசு வேட்டி கட்டியிருந்தேன்; அங்கே குளிர் கடுமையாகி, பொறுக்க முடியாதிருந்தது. பசி தாகம் அதிகமானது. பனிக்கட்டி சாப்பிட்டேன் பசி திற்கவில்லை. பிறகு நான் நதியைத் தாண்டப் புகுந்தேன். சில இடங்கள் ஆழமதிகம். சில ஒருமுழ ஆழத்திற் கதிகமில்லை. அகலம் எட்டு பத்து முழம் இருந்தது. ஆற்றங் கரையில் சிறுசிறு பனித்துண்டுகள் அடர்ந்திருந்தன. அவை என் வெறுங் கால்களைப் புண்ணாக்கி இரத்தம் வந்தது. குளிரால் அவை மரத்துப் போயின. பெரிய இரத்தப் புண் கூட எனக்கு உணராமலிருந்தது நல்லதே. பனியில் பலமுறை வழுக்கிச் சருக்கிக் கீழே விழுந்து, அங்கேயே உறைந்து போகும் நிலைக்கு வந்து விட்டேன். உடம்பெல்லாம் மரத்துப் போனதால், கீழே விழுந்தால் மறுபடி எழுந்திருப்பது கடினம் என்பதை உணர்ந்தேன். எப்படியோ மிகவும் கஷ்டப்பட்டு முயன்று, நான் அக்கரை சேர்ந்தேன். பசி. களைப்பு, திகைப்பு, அசாத்தியக் குளிர், நான் செத்துயிர்த்தேன். நான் மேலாடைகளை எடுத்துக் கால்களில் முழங்கால் வரையில் சுற்றிக் கொண்டு, வழிகாட்ட யாராவது வருவார்களா என்று எதிர் பார்த்து நின்றேன். முடிவில் இரண்டு மலையாட்கள் வருவதைக் கண்டேன். அவர்கள் காசியாம்பா என்று வணங்கித் தம் வீட்டிற்கு வந்து உணவு கொள்ளச் சொன்னார்கள். என் கஷ்டத்தை யறிந்து, அவர்கள் ஸிதபந்த் என்னும் புண்ணியஸ்தலம் வரையில் கொண்டு விடுவதாக வாக்களித்தனர். ஆனால் நான் மறுத்தேன்; என்னால் நடக்க முடியவில்லை. அவர்கள் வற்புறுத்தி அழைத்தார்கள். அவர்களுடன் செல்லத் துணிவில்லாமல் அங்கேயே நின்றேன். அவர்கள் சொல்லைக் கேட்க நான் மறுத்தேன். அந்த இருவரும் என்னை விட்டுச் சென்று மறைந்தனர். நான் திருப்பிச் சென்று என் படிப்பைக் கவனிக்கக் கருதினேன். களைப்பாறியதும் நான் மேலே சென்றேன். முன்னே சாக நினைத்

தேன். இப்போது நான் ஏன் சாக வேண்டும்?...என் ஞான வேட்கை தணிய வாழ நினைத்தேன். நான் வசுதாரா என்ற புண்ணியத் தலத்திற் சிறிது நேரம் தாமதித்தேன். பிறகு மானுக் கிராமத்தின் பக்கம் சென்று இரவு எட்டு மணிக்கு பத்ரிநாராயணம் சேர்ந்தேன்.

என்னைக் கண்டதும் ராவல்ஜியும் அவர் நண்பரும் வியந்து காலை முதல் எங்கு சென்றாய் என்று வினவினர். நடந்ததை நடந்தபடியே அவர்களுக்குச் சொன்னேன். இரவு கொஞ்சம் உணவருந்தி உறங்கினேன். காலையில் ராவல்ஜீயிடம் விடை பெற்று, காடு மலைகளைத் தாண்டி சில்கியா கட்டத்தைத் தாண்டி முடிவில், ராமபுரிக்கு வந்து சேர்ந்தேன்.

அங்கே ராமகிரி என்ற அற்புத சாது இருந்தார். அவர் மிகப் புகழ் பெற்ற தூய துறவி. ஆனால் அவரிடம் நான் விநோதமான பழக்கங்களைக் கண்டேன். அவர் இரவு முழுதும் தூங்காமல், தனக்குத்தானே உரக்கப் பேசிக் கொண்டிருந்தார். அடிக்கடி உரத்த சப்தமும் அழுகையும் கேட்கும். அவர் அறையில் யாரும் இல்லை. நான் வியப்புற்று, சீடர்களைக் கேட்டேன். அதுதான் அவர் வழக்கம்; காரணம் தெரியாது என்றனர். நான் அவரிடம் பேசிக் காரணத்தை அறிந்தேன். அது யோகக் கிரியை அன்று. மதிமயக்கம். ராமகிரிக்கு இரண்டோர் யோகக் கிரியைகள் கூடத் தெரியா. இப்படிப்பட்ட யோகத்தை நான் விரும்பவில்லை.

அவரை விட்டு நான் காசிபூர் சென்று, அங்கிருந்து துரோண சாகரம் சென்றேன். அது நானிடால் ஜில்லாவிலுள்ளது. அங்கே மாரிகாலம் முழுதும் இருந்தேன். அங்கிருந்து மூரதாபாது வழியாக ஸம்பல் வந்து, கடமுக்தேச்வரத்தைக் கடந்து கங்கைக் கரையை அடைந்தேன்.

## 17. வடநாட்டு யாத்திரை

இவ்வாறு தயானந்தர் இரண்டாண்டுகள் இமாலயத்தில் யோகிகளைத் தேடி அலுத்தார். அவருக்குப் பிடித்த யோகி ஒருவரும் அகப்படவில்லை. யோக நூல்கள் மட்டும் கிடைத்தன. படித்தார். அவருடன் சில நூல்கள் இருந்தன. அவற்றுள் ஹடப்ரதீபிகை, யோக பீஜம், சிவஸந்த்யா, கிரந்த ஸம்ஹிதை முதலியன இருந்தன. "சில யோக நூல்களில் நாடி சக்கரங்களைப் பற்றி மிக விரிவாக எழுதப் பெற்றிருந்தது. அவை எனக்குப்

புரியவே யில்லை. அவற்றை மிகைபடச் சொல்லும் இந்த நூல்கள் சரியான ஆதாரமில்லை என்று நான் சந்தேகித்தேன். என் சந்தேகத்தை நிவர்த்திக்க சமயம் பார்த்தேன். இதுகாறும் கிடைக்கவில்லை. ஒருநாள் ஆற்றில் ஒரு பிணம் மிதந்து வந்தது. சந்தர்ப்பம் வந்தது. யோக நூல்களில் நாடி சக்கரங்களைப் பற்றிச் சொல்லி யிருப்பதெல்லாம் உண்மை தானு என்று சோதிக்கப் புகுந்தேன். உடற் கூறுகளையும் ஆராயக் கருதினேன். புத்தகங்களைக் கரையில் வைத்து, ஆடைகளைக் களைந்து விட்டு ஆற்றில் இறங்கி, பிணத்தைக் கொண்டு வந்து கரையில் போட்டேன். பிறகு ஒரு வாளால் அதை நன்ருக அறுத்துச் சோதித்தேன். இதயகமலத்தை எடுத்துப் பார்த்தேன். நாபி முதல் விலாக்கூடு வரையில் சோதித்தேன். தலை கழுத்து இவற்றின் கூறுகளை ஆராய்ந்தேன். புத்தகத்தில் இருந்த வர்ணனைகளுடன் அவற்றை ஒப்பிட்டுப் பார்த்தேன். இரண்டிற்கும் ஒத்து வரவேயில்லை. உடனே பிரேதத்துடன் அந்தப் புத்தகங்களையும் கிழித்து ஆற்றில் எறிந்தேன். அன்றிருந்து வேதங்கள், உபநிஷத்துக்கள், பதஞ்சலி யோக சூத்ரம், சாங்கிய யோகம் ஆகியவற்றைத் தவிர மற்றதெல்லாம் புரட்டு என்று தீர்மானித்தேன். கொஞ்சகாலம் கங்கா தீரத்தில் திரிந்து, ஃபரூகபாது சென்று, ஸ்ரீங்கராமபுரம் போந்து இராணுவ ஸ்தலத்தின் கிழக்குப் புறம், கான்பூருக்குள் புகுந்தேன். (5-4-1856)

பின் ஐந்து மாதங்கள் கான்பூருக்கும் அலஹபாதுக்கும் இடையே பல தலங்களைக் கண்டேன். 1856 அக்டோபரில் மிர்ஜாபூர் வந்து ஒரு மாதம் விந்தியாசலேசர் கோயிலுக்கருகே தங்கினேன். அசுவனி மாதம் (நவம்பர்) நான் காசிக்குச் சென்று, வருணைசங்கமத்திற்கருகே' பூமானந்த ஸ்வாமிகள் குகையில் தங்கினேன். அங்கே காகாராம் ராஜாராம் முதலிய பண்டிதர்களைக் கண்டு அளவளாவி, பன்னிரண்டு நாட்களுக்குப் பிறகு புறப்பட்டு, சண்டாள கட்டம் துர்காஹரி கோயிலில் பத்து நாட்கள் இருந்து, சமீபத்திலுள்ள ஒரு கிராமத்திற்குச் சென்றேன். அங்கே ஒரு சிவாலயத்தில் இரவைக் கழித்தேன். இச்சமயம் நான் சாதத்தை நிறுத்திப் பால் மட்டும் பருகி, இரவும் பகலும் படிப்பதிலும் யோகசாதனம் செய்வதிலும் கழித்தேன்.

இக்காலம் நான் பங்கியடிக்கும் பழக்கத்திற் குட்பட்டது வருந்தத் தக்கது. ஒருநாள் கோயிலை விட்டுச் சென்று சண்டாள கட்டத்தருகிலுள்ள குக்ராமத்தில், எனது பழைய தொண்டரைக்

கண்டேன். கிராமத்தின் மற்றொரு பக்கம் ஒரு சிவாலயம் இருந்தது. அங்கே இரவைக் கழித்தேன். பங்கி மயக்கத்தால் நான் நன்றாகத் தூங்கினேன். அப்போது ஒரு விநோதக் கனவு கண்டேன். நான் மஹாதேவனையும், அவன் மனைவி பார்வதியையும் கண்டேன். அவர்கள் என்னைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தார்கள். எனக்குக் கலியாணம் செய்ய வேண்டும் என்றாள் பார்வதி. மஹாதேவன் அதற்கு ஒப்பவில்லை. அவள் பங்கியைக் காட்டினாள். இக்கனவு என்னை மிகவும் வருத்தியது. நான் திடுக்கிட் டெழுந்தேன். மழை பெய்துகொண் டிருந்தது. நான் கோயிலின் உள் பிராகாரத்திற்குச் சென்று, அங்கிருந்த நந்தியின் மேல் என் துணி மணிகளை வைத்து விட்டு தியானத்தில் அமர்ந்தேன். திடீரென்று நந்தி உருவினுள் நோக்கினேன்; ஓர் ஆள் இருந்தான். நான் கையை நீட்டினேன். அவன் பயந்து குதித்து ஒரே ஓட்டமாய் கிராமத்தை நோக்கிச் சென்றான். நான் அந்தச் சிலைக்குள் புகுந்து அடக்கமாக இரவில் உறங்கினேன். காலையில், ஒரு கிழவி வந்து, நான் உள்ளே புகுந்த நந்தியைத் தொழுதாள். அவள் என்னையே கடவுள் என்றெண்ணினாள் போலும். வணங்கிச் சென்றதும் கொஞ்ச நேரத்தில் இனிப்புப் பண்டம், தயிர் முதலிய நிவேதனங்களைக் கொண்டு வந்து எனக்கு உபசாரம் சொல்லி அளித்தாள். நான் மறுக்காமல் அவள் தந்ததை உண்டு பசியாறினேன். புளிப்புத் தயிர் பங்கிமயக்கத்தைப் போக்கியதால், நான் தெளிவுற்றேன்.''

## 18. நருமதை நதிக்கரையில்

இவ்வாறு பல அனுபவங்களுடன் தயானந்தர் வடநாட்டைச் சுற்றினார். ஆனால் அப்போது தான் மீரட், கான்பூர், லக்னோ, டில்லி, கல்கத்தா, காசி முதலிய இடங்களில் நானாசாகெபு, ராணி லக்ஷ்மீபாய், அஹமத் மௌல்வி, பகதுர்ஷா,குமாரசிங் முதலியோர் ஆங்கிலேயரை எதிர்த்துப் பெருங் கிளர்ச்சி செய்தனர். இந்திய சுதந்திர யுத்தம் நடந்து கொண்டிருந்தது. ஜெனரல் நீலும், லாரென்சும், ஹாவ்லக்கும் இந்தியர்களைக் கொடுமையாகச் சுட்டுத் தள்ளித் தூக்குப் போட்டுக் கொன்று குவித்தனர். அந்தக் காட்சியை தயானந்தர் அவசியம் கண்டே யிருப்பார். நானாராயன் சண்டைச் செய்திகளைப் பத்திரிகைகளிலும் படித்தே யிருப்பார். கிராமம் கிராமமாக மக்களை உயிரோடு நீலன் கொளுத்தியதையும், நம்மவர் துரோகிகளால் தோற்றதையும், இந்தியாவின் அடிமை நிலையையும் அவர் அறிந்தார். பின்னையில்

வாச் சொத்தை யெல்லாம் டல்ஹௌஸி சிவப்பு நிறம் தீட்டி, அபகரித்ததைத் தயானந்தர் உணர்ந்தார். அவர் நியோக விவாகத்தை வற்புறுத்தியதின் காரணமும், நமது தேசத்திற்கு நல்ல சந்தானம் பெருக வேண்டும் என்பதேயாம். சுதந்திர யுத்தத்திற்குப் பிறகு, பஞ்சம் நோய் துர்ப்பலங்களால் நாடு பட்டபாடு அவருக்குத் தெரிந்தே யிருக்கும். அதனாலே தான் பாரத சமுதாயத்தை வீர தீரர்களாக்கி வேதவழி உய்க்க, ஸத்தியார்த்தப் பிரகாசத்தில் மெய் வழி காட்டினார். தயானந்தரைப் போல் தேசாபிமானியும், பாரத ஜோதியும் யாருண்டு? 1857ம் ஆண்டு எழுந்த சுதந்திர யுத்தம் அவர் கண் முன்னே நடந்தது; அவர் கண்ணைத் திறந்தது. சிவாஜி காலத்தில் மக்கள் நிலையை நேரே பார்த்து, தேசம் உய்ய சமர்த்த குரு ராமதாஸ் தாஸபோதம் அருளினார். அதுபோலே, 1857-ல், தேசத்தின் பரிதாப நிலையை நேரே பார்த்து, தயானந்தர் நமது நாடு மீண்டும் வீர தீர சமுதாயமாகித் தலை தூக்க, ஸத்தியார்த்தப் பிரகாசம் அருளினார். தயானந்தர் நானாராயன் போரைக் கண்டு கொண்டே தெற்கே விரைந்து நர்மதை நதிக்கரையில் சுற்றினார் என்று சிரத்தானந்தர் ஒருதரம் சொல்லியிருக்கிறார். லாலாஜியும் அதே அபிப்பிராயப் பட்டார்......இந்த விஷயத்தை ஏதோ தக்க காரணங்களாலே தான் தயானந்தர் சுயசரிதத்தில் குறிக்கவில்லை. தயானந்தர் நருமதைக்கு வந்த நாற்பத்தைந்து நாள்களில் சுதந்தரப்போர் கிளம்பியது (10-5-1857). தயானந்தர் கான்பூர் முதலான இடங்களில் சஞ்சரித்த காலத்திலேதான் நானாசாகெபின் ஒற்றரும் தூதரும் வடநாடெல்லாம் புரட்சியை ஜோடித்துக் கொண்டிருந்தார்கள். புரட்சிச் செய்தியும், அப்போது நடந்த கொடுமைகளும் துரோகிகளின் வெட்கங்கெட்ட மோசடிகளும் அவருக்குத் தெரிந்தேயிருக்கும். நருமதை நதிக்கரையிலிருந்து ஏராளமான மராடியர் போரில் கலந்துகொண்டனர். தயானந்தர் அந்த விஷயத்தைச் சொல்லாமல் விட்ட காரணம் தெரியவில்லை. இனி அவர் சுயசரிதத்தைக் காண்போம் :

" இச்சம்பவத்திற்குப் பிறகு 26-3-1857ல், நான் மலைப் பிரதேசங்களின் வழியே சென்று, நர்மதையின் மூலஸ்தானத்தைக் கண்டுபிடிக்கப் புகுந்தேன். யாரையும் பாதை கேளாமல் நான் தெற்கே பயணமானேன். சீக்கிரம் காடடர்ந்த ஒரு நிர்மானுஷ்யமான இடத்தை அடைந்தேன். இங்குமங்கும் தூர தூரத்தில் புதர்களுக்கிடையே இரண்டோர் ஓலைக்குடில்களைக் கண்டேன். ஓர் இடத்தில் நான் பால் பருகி மேலே நடந்தேன். ஆனால் அரை

மைல் போவதற்குள் பாதை நின்றுவிட்டது. ரஸ்தா மறைந்தது. குறுகிய பாதைகளே கதி. அவை எங்கு செல்வதென்று அறியேன்; திகைத்தேன். நாணல் புல்லடர்ந்த கருங் காட்டினுட் புகுந்தேன். அங்கே திடீரென ஒரு பெருங் கருங்கரடி முன்வந்தது. மிருகம் பயங்கரமாக உருமி, முன்காலைத் தூக்கிநின்று, என்னை விழுங்க வாயைத் திறந்தது. நான் கொஞ்சநேரம் அசையாதிருந்து, பிறகு எனது பிரம்பை ஓங்கினேன். கரடி பயந்தோடிப் போனது. அதன் பயங்கர சப்தத்தைக்கேட்டு முன் சொன்ன கிராமக்குடிலில் இருந்தவர்கள் தடிகளுடன், நாய்களையும் கொண்டு, எனது பாதுகாப்பிற்காக ஓடி வந்தனர். அவர்கள் எங்களுடன் திரும்பி வந்துவிடுங்கள் என்று மன்றாடினார்கள். இந்தக் காட்டில் கரடி, புலி, யானை, காட்டெருமை முதலிய ஆபத்தான விலங்குகள் மிகுதி; மேலே செல்வது மிகவும் அபாயம்; பல இடர்கள் வரும் என்றனர். கடவுள் காப்பார்; கவலைப்பட வேண்டாம்; நீங்கள் செல்லுங்கள் என்றேன். நர்மதை மூலத்தைப் பார்க்க எனக்கு ஆவலாயிருந்ததால், என்ன ஆபத்து வந்தாலும் எனது மனவுறுதி மாறவில்லை. அவர்கள் வேண்டியமட்டும் சொல்லியும் நான் கேளாமையால், எனது கம்பைவிடத் தடியான ஒரு கோலை என் பாதுகாப்புக்காகக் கொடுத்துச் சென்றனர். நான் அதையும் வீசியெறிந்து, காட்டிற்குள் சென்றேன்.

அன்று இருட்டுமட்டும் நான் நிற்காமல் முன்னே நடந்தேன். நெடுநேரம் மனித சஞ்சாரமோ, கிராமமோ, ஒரு குடிலோ ஆளோ காணவேயில்லை. காட்டானைகள் முறித்தெறிந்த பல பெரிய மரங்கள் வேருடன் சாய்ந்திருக்கக் கண்டேன். மேலே செல்லச்செல்ல இலந்தை முதலிய முள்மரங்கள் நெருங்கி அடர்ந்து காடாந்தகாரமாயிருந்தன. அதிலிருந்து விடுபட வழிகாணேன். நான் ஆடைகிழிய, உடல் கீறி இரத்தம் ஒழுக, முழந்தாளிட்டு நகர்ந்தும், குப்புற ஊர்ந்தும் எப்படியோ இந்த இடரைத் தாண்டினேன். இருட்டிவிட்டது. எனினும் எனது முன்னேற்றம் தடைபடவில்லை. முடிவில், என்னை நீண்ட பாறைகள் சூழ்ந்தன; மரங்கள் மிக நெருங்கியிருந்தன. பயிர்பச்சைகள் அடர்ந்திருந்தன. ஆனால் அங்கே குடியிருப்புகள் இருக்கும் என்றே தெரிந்தது. அதி சீக்கிரம் நான் சில குடில்களைக் கண்டேன். அவற்றைச் சுற்றிச் சாணம் குவிந்திருந்தது; ஒரு சிறு தெண்ணீர் ஓடைக் கரையில் ஆட்டுமந்தைகள் மேய்ந்தன. சுவர்களின் பொந்துகளுக்

இடையே விளக்கு வெளிச்சம் மின்னிவந்தது. மேலே செல்லாமல் இரவை அங்கே கழிக்க நினைத்து, நான் ஒரு குடிலருகேயிருந்த விசாலமான மரத்தடியில் தங்கினேன். என் இரத்தக் காலையும் முகத்தையும் கைகளையும் சுத்தம் செய்துகொண்டு, சந்தியாபிரார்த் தனைக்கு அமர்ந்தேன். அப்போது பறைக்கொட்டு பலமாக முழங்கி எனது தியானத்தைக் கலைத்தது. சற்று நேரத்தில், குடில்களி லிருந்து ஆடுமாடுகளுடன் ஆண்களும் பெண்களும் குழந்தை களும், அன்றிரவு ஏதோ திருவிழாக் கொண்டாடப் பவனி சென்றனர். அவர்கள் என்னை அன்னியனென்று கருதிச் சூழ்ந்து கொண்டனர். அவருள் ஒரு கிழவர் "நீர் எங்கிருந்து வருகிறீர்" என்று வினவினர். நான் காசியிலிருந்து வந்தேன்; நர்மதை மூலத்தை அறியச் செல்கிறேன் என்றேன். இதைக்கேட்டு எல்லா ரும் சென்றனர். நான் சந்த்யா உபாஸனையில் ஆழ்ந்தேன். அரை மணிக்குப் பிறகு, அவருள் ஒரு தலையாரியுடன் இரண்டு மலையாட் கள் வந்து என் பக்கத்தில் உட்கார்ந்து காத்திருந்தனர். கிராமக் குடில்களுக்கு என்னை அழைக்கவே, அத்தலையாரி வந்தான். முன் போலவே நான் அவன் அழைப்பை ஏற்க மறுத்தேன். ஏனெனில் கிராமத்தார்கள் உருத்தொழுகையர். பிறகு அவன் என்முன் கணப்புப்பற்றவிட்டு, இரவெல்லாம் எனக்குக் காவலாக இரண்டு ஆட்களையும் அமர்த்தினன். நான் பாலே சாப்பிடுவதை அறிந்து, தலையாரி எனது கமண்டலத்தை வாங்கிச் சென்று, அது நிரம்பப் பால் கொண்டு வந்தான். நான் அன்றிரவு சிறிதே பருகினேன். பிறகு என்னை அந்த இருவர் பாதுகாப்பிலும் விட்டு, அவன் வீடு சென்றான். அன்றிரவு நன்றாக உறங்கி, காலையில் எழுந்து பிரார்த்தனைகளை முடித்துக்கொண்டு, நான் மேற்கொண்டு நடக்கும் செயல்களுக்குத் தயாரானேன்..."

தயானந்தரின் சுயசரித்திரம் திடீரென இங்கே நிற்கிறது. பிறகு மூன்றாண்டுகளின் கதை நமக்குத் தெரியவில்லை. சிலர் அவர் நர்மதை நதிக்கரைகளிலேயே இருந்ததாகவும், மகாத்மாக் களைக் கண்டு அளவளாவியதாகவும் சொல்வர். சுவாமி சிரத்தானந் தர் இக்காலத்தில் எழுந்த சுதந்தர யுத்தக் காட்சிகளை தயானந்தர் கண்டதாக நம்பினர். லாலாஜீயும் சென்னையில் வந்திருந்தபோது வினவியபோது, "இந்திய சுதந்திரப்போரை தயானந்தர் நேரே கண்டவர். இந்தியா சுதந்தரம் பெறும் வழியையும் கண்டவர்" என்றார். தயானந்தர் நருமதைக்குவந்த நாற்பத்தைந்து நாட்களுக் கெல்லாம் கான்பூரிலும் மீரட்டிலும் கலகம் மூண்டது. நானுசா

கெபும், தாந்தியா தொபேயும் லக்ஷ்மீபாயும் வீரக்கனல்வாள் பிடித்துச் செய்த அந்த அற்புதப்போரை தயானந்தர் அவசியம் அறிந்திருப்பார். அந்தப்போரில் நீலன் ஹாவ்லக் நிகல்ஸன் போன்ற கொடியர் ஆயிரக் கணக்கான சிரபராதிகளைப் படு கொலை செய்ததும், கிராமம் கிராமமாகத் தீயிட்டுச் சாம்பலாக்கிய தும், காசியில் நீலன் செய்த படுகொலையும், இந்தக் கொலைக்கு உடந்தையான இந்திய துரோகிகளையும் தயானந்தர் அறிந்தே யிருப்பார். நானாராயன் சண்டைச் செய்தி சிவகங்கை மறவருக் குக்கூட எட்டியிருந்தது என்றால், நருமதைக் கரைக்கு அவசியம் எட்டி யிருக்கும். இந்தக்கொடும் போரின் கொடிய அதிர்ச்சியிலிருந்து, மீள நாட்டிற்கு மூன்றாண்டுகளுக்கு மேல் சென்றது......பிறகுதான் தயானந்தரைப்பற்றிக் கேள்விப் படுகிறோம்.

## 19. சுவாமி விரஜானந்தர்.

'தேடுக கிடைக்கும்' என்பது உண்மையானது. தயானந்தர் குருவைத்தேடினார். மதுராவில் விரஜானந்தர் என்ற மஹாகுரு இருப்பதைக் கேள்வியுற்றார். உடனே அங்கே சென்றார். குரு முரஸான் என்ற இடத்தில் பிரசங்கம் செய்வதாகக் கேட்டு அங்கே சென்றார். பிரசங்கம் முடிந்து மதுரைக்கே விரஜானந்தர் சென்றுவிட்டதாகச் சொன்னார்கள். மீண்டும் மதுரைக்குத் திரும்பி, குருவைக் கண்டார். இந்த மஹாகுருவைப்பற்றி முன்னே சொல்லிப் பிறகு சிஷ்யன் சந்தித்ததைச் சொல்வோம்.

பஞ்சாப் வீரர் நிலம்; தர்மத்தின் பலிபீடத்தில் தம்மையே நிவேதித்த மகாதியாகிகளான நானக்குருகோவிந்த சிஷ்யர்களின் நிலம். பஞ்சாபில், கர்த்தார்புரத்திற்கு அருகே, பேோய் நதிக்கரை யில், கங்காபுரம் என்றொரு சிற்றூர் உண்டு. அங்கே நாராயணதத்தர் என்ற பாரத்வாஜ அந்தணர் இருந்தார்; நல்ல வேதவித்து. இவ ருக்கு கி. பி. 1779 ல் விரஜானந்தர் பிறந்தார். இவருக்குப் பெற் றோர் தந்த பெயர் மறைந்தது. விரஜானந்தர் என்ற தீக்ஷாநாமமே எங்கும் அறிந்தது. குழந்தை அசாதாரணமான அறிவும், திறனும் பெற்று வளர்ந்தது. ஆனால் உலகத் துயர்கள் விரஜானந்தரை அப் போதே சோதிக்கத் தொடங்கின. ஐந்து வயதில் அம்மைநோய் வந்து கண்ணைக் கொண்டுபோய்விட்டது. விரஜானந்தர் இரண்டு கண்ணும் இழந்து குருடரானார். வெளியுலகைப் பார்க்க முடியா மல் உள்ளுலகிலேயே வசித்தார். ஊனக்கண் இழந்த குழந்தைக்கு

உள்ளே ஞானக்கண் கூர்மையாயிருந்தது. விரஜானந்தருக்குத் தகப்பனுரே எழுத்தும் இலக்கணமும் சொல்லிவைத்தார். ஒருதரம் கேட்டதை அப்படியே மனத்தில் பதித்து ஒப்பிப்பார் விரஜானந்தர். பன்னிரண்டு வயதில் வியாகரணம் முழுதும் பாடம். ஆனுல் மேற்கொண்டு படிக்க முடியாமல் உலகத் துய ரம் வந்து மூடிக் கொண்டது. விரஜானந்தர் முதலில் தாயை இழந்தார். பிறகு தந்தையை இழந்தார். அனுதையானுர். மாமா அத்தை வீட்டில் கொஞ்சகாலம் இருந்தார். படாத பாடு பட்டார். அன்பு என்பதையே அவர் காணமுடியவில்லை. அத்தையும் மாமாவும் இந்தக் குருட்டு அநாதையைச் சிடுசிடுவென்று கரித்து வைது, கொடுமை செய்து அவன் வாழ்வை எமகண்டமாக்கினுர்கள். வேளைக்குச் சோறில்லை. ஒரு நல்ல வார்த்தையில்லை. ஒழிடா சனியனே என்பதைத் தவிர, பரிவு கூர்வாரில்லை. ஆதலால் விரஜானந்தர் ஒரு நாள் இரவில், சர்வாந்தர்யாமியான இறைவனையே நம்பி, வீட்டைத் துறந்து ஓடினுர். அப்போது அவர் வயது பதினுலுதான். கண்ணில்லாக் குருடர், மன வைராக்கியங் கொண்டு கோல் பிடித்து வழி தடவி நடந்து நடந்து ஹரித்வாரம் சேர்ந்தார். அங்கிருந்து ரிஷீகேசம் சேர்ந்து, சில சாதுக்களின் கூட்டத்தில் கலந்து கொண்டு இமாலயக் காடுகளில் மூன்ருண்டுகள் திரிந்தார். அவருக்கு ஒரே துணை காயத்திரி மஹாமந்திரமே அதையே ஒவ்வொரு மூச்சுடனும் அவர் ஜபித்துக் கொண்டு, பரமேசன் விட்ட வழியே உலகில் நடந்தார். அந்த மந்திர சக்தியும் சித்தியும் அவருக்கு உள்ளொளி யளித்து வழிநடத்தின. ஒரு நாள் "ஆகவேண்டியது ஆனது; இனி இதைவிட்டுப் போ" என்ருெரு வாய்ச்சொல் கேட்டது. அதையே தேவவாக்காகக் கருதி, விரஜானந்தர் ரிஷீகேசத்தை விட்டு, ஹரித்வாரத்திற்குப் பக்கத்திலுள்ள, கன்கனலுக்கு வந்து, அங்கே சுவாமி பூரணனந்தரிடம் சந்யாசம் பெற்று, விரஜானந்தர் என்ற தீக்ஷா நாமத்துடன் வியாகரணம் படித்துத் தேர்ந்தார். ஷட்லிங்கம், ஆவமத்தி கௌமுதி முதலிய இலக்கணங்களைக் கற்ருர். பிறகு காசிக்குச் சென்ருர். காசியில் அரிய ஞானத்தை நிறைவாக வளர்த்துக் கொண்டு, சுவாமிகள் மாணவருக்குப் புது முறையில் பாடஞ் சொல்லத் தொடங்கினுர்.

அவரிடம் பாடம் கேட்டவர்கள் பெரிய அறிவாளிகளானுர்கள். அப்போது அவர் வயது இருபது தான். காசியிலிருந்து விரஜானந்தர் கயாவுக்குச் சென்ருர். காட்டு வழியே தடியின்றி

வழி தடவிச் செல்லும் இக்குருடரைத் திருடர் மறித்து இடர் செய்தனர். விரஜானந்தர் "ஹே சர்வேசா......பாஹி பாஹி" என்று முறையிட்டார். திடீரென்று உதவி வந்தது. அப்போது குவாலியர் ஸர்தார் அங்கே முகாம் போட்டிருந்தார். அரவங் கேட்டு அவர் ஆளை அனுப்பினர். ஆளைக்கண்டு திருடர் ஓடினர். விரஜானந்தர் சம்ஸ்கிரதம் பேசினர். ஆளுக்கு சம்ஸ்கிரதம் புரிய வில்லை. திரும்பி வந்தான். ஸர்தார் உடனே தமது பண்டிதரை அனுப்பி, சுவாமிகளை அழைத்து வரச் செய்து பேசினர். கண் குருடான நாடோடித் துறவி இவ்வளவு அழகாக சம்ஸ்கிரதம் பேசக் கேட்டு மகிழ்ந்து, மரியாதை காட்டி ஆதரித்து அவரை கயாவுக் கனுப்பினர். அங்கே சில மாதங்கள் இருந்து கல்கத்தா வுக்கு வந்து, கங்கைக் கரையில் நிம்மதியான இடம் தேடினர். முடிவில் வரகாவதாரம் நடந்த இடமும், கௌரங்கர் சில காலம் தங்கிய இடமுமான ஸோரோமில் கங்கைக் கரையில் கடியா கட்டத்தில் அமைதியாயிருந்து சாஸ்திர ஆராய்ச்சி செய்தார். அங்கே அங்கதராமன், புத்த சேனன் என்ற இரண்டு அன்பர் மாணவராகி வியாகரணம் படித்தனர்.

விரஜானந்தர் நல்ல தேஜஸ்வி. இனிய குரலுடன் மணிக் கணக்கில் பேசவல்ல பண்டிதர். அவர் ஒருநாள் கங்காஸ்நானம் செய்து கொண்டே விஷ்ணு ஸ்தோத்திரம் பாடினர். அதைக் கேட்ட ஆழ்வார் மன்னர் வினயசிங் வந்து சுவாமிகளைப் பணிந்து தம்முடன் வந்திருக்கும்படி அழைத்தார். "நீ போகி; நான் யோகி; உனக்கும் எனக்கும் எட்டுமா" என்று மறுத்தார் துறவி. மன்னன் சுவாமிகள் குடிலுக்குச் சென்று மன்றாடினர். முடிவில் தினம் மூன்று மணி நேரம் என்னிடம் சம்ஸ்கிரதம் கற்ப தானல், வருவேன் என்றார் துறவி. சரியென்று ஒப்புக் கொண்டு, அரசர் துறவியை ஆழ்வாருக்கு அழைத்துச் சென்றார்,

மன்னர் புலவர் கற்பகம். அவர் சமஸ்தானத்தில் கலையும் திருவும் நடம்புரியும். அவர் விரஜானந்தருக்கு, ஜகந்நாத மந்தி ரத்திற் கருகே ஒரு வீடு தயாரித்துக் கொடுத்து, வேண்டிய சாமான்களைத் தானே தந்து, மித்ரசேனன் என்ற பரிசாரகனையும் தந்து, தினம் ஒரு ரூபாய் செலவிக்கீந்து உபசரித்தார். விரஜானந்தர் மன்னருக்காகத் தொகுத்த சப்த போதத்தின் முடிவில், தம்மை ஸ்ரீ பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஸ்ரீ கௌரி சங்கர சிஷ்யர் என்று குறிக்கிறார்...அந்தக் கையெழுத்துப் பிரதி இன்னும் ஆழ் வார் மன்னர் நூலகத்தில் உள்ளது.

விரஜானந்தர் அங்கே ஆறு மாதங்கள் இருந்து அரசருக்குப் பாடம் சொன்னார். அக்காலமே அரசருக்கு சிவதானசிங் என்ற குழந்தை பிறந்தது. சுவாமிகளின் கருணையாலேதான் தமக்கு நன்மை உண்டானதென்று மன்னர் வெகு விசுவாசமாயிருந்தார். ஒரு வார்த்தை சொன்னால் அரசர் பெரிய மடம் கட்டி ஏராள மான சொத்து சுகம் அளிக்க முடியும். ஆனால் விரஜர் விரக்தர். உலகமும் பணமும் அவருக்குத் தூசி மாத்திரம். அரசனுக்கு அவர் ஆளில்லை. அரசனே அவருக்கு ஆள். ஒருநாள் உரிய நேரத்தில் மன்னன் பாடத்திற்கு வரவில்லை. விரஜானந்தர் அப்ப டியே எழுந்து, சிஷ்யன் அங்கதராமனுடன் சோரனுக்குச் சென்று மதுரா தாஸரின் ஆசிரமத்தில் தங்கினார் (1845). பிறகு மன்னர் வருந்தி அழைத்தும் போகவில்லை. அங்கே சில நாள் உடல் நோயால் வருந்தினார். உடம்பு சரியானதும் சுவாமிகள் முரஸான் வந்தார்; அந்த ஊர் மன்னன் அவரை உபசரித்தான். அங்கிருந்து பரத்பூருக்கு வந்து, ராஜா பலவந்த சிங்கரால் உபச ரிக்கப் பெற்றார். ஆறு மாதம் அங்கே தங்கி, விரஜானந்த தண்டி சுவாமிகள் மதுரைக்கு வந்து சேர்ந்தார்; இங்கேதான் அவர் புகழ் பரவியது.

## 20. மதுரா தண்டி

மதுரையில் விரஜானந்தர் அரிய ஞானசேவை செய்தார். அவரை ப்ரக்ஞாசக்ஷு, தண்டி சுவாமிகள் என்று ஊரார் மரி யாதை செய்தனர். பிரம்ம நாராயணர் கோயிலில் அவர் ஒரு பாடசாலை தொடங்கி, இரண்டு மாதம் நடத்திப் பிறகு ஒரு வீடு வாங்கி, அதில் நிலையாகப் பாடசாலை நடத்தினார். முன்னே அவ ரிடம் படித்த சிலரும், புதிய பல மாணவரும் அங்கே சாத்திரமும் இலக்கணமும் கற்றனர். மாணவரிடம் அவர் பணங் காசு பெற் றுக் கொண்டதில்லை. யாரையும் யாசித்ததுமில்லை. ஆழ்வார், பரத்புரி, ஜயபுரி மன்னர் போன்ற பக்தர்கள் அருமை யறிந்து தருவதைக் கொண்டே அவர் பாடசாலையை நன்றாக நடத்தினார். நாளைக்கவலை அவரிடமில்லை. யமுனை விச்ராமகட்டத்திற்குப் போகும் வழியில் உள்ள இரட்டை மாடி வீடே தண்டியின் பாட சாலை. அதுதான் இந்தியாவின் வேத ஜோதி நிலையமாயிருந்தது. அதனின்றே வடநாடெங்கும் ரிஷிஞானம் பரவியது.

மதுரையில் சேட்டுகள் செல்வமும் செல்வாக்கும் பெற்று விளங்கினர். அவர்களுக்கு மூல புருஷர் மணிராம். அவர் முன்பு

ஜயபுரியில் ஓர் அறுவிளல் இருந்தார். ஏழைதான்; அவர் கோகுல் சந்து பாரக் என்ற குஜராத்தி வைசியரிடம் வேலைக் கமர்ந்தார். பாரக்ஜி வல்லபாசாரி மதத்தைச் சேர்ந்த வைணவர். இவரும் சாமான்ய மனிதராயிருந்தவரே; குவாலியர் சிந்தியா வின் கஜானுதாரான கோசல சந்திடம் வேலைக்கமர்ந்து முன் னேறி, அரசர் தயவையும் பெற்றார். அதனால் பெருஞ் செல்வ ரானார். அச்சமயம் சந்நியாசிகள் சிலர் சண்டையடித்துக் கொண்டிருந்தனர். ஒரு சமயம் பாரக்ஜி அதில் ஈடுபட்டு நியா யம் தீர்த்தார். ஒரு பெரிய மடத்து பைராகி, மடத்தைக் காலி செய்து சென்று விட்டார். அந்த மடச் சொத்து சுமார் கோடி ரூபாய் பாரக்ஜி கையில் அகப்பட்டது. அதை நம்பிக்கையுடன் அவர் குவாலியர் மன்னரிடம் சமர்ப்பித்தார். தரும சொத்து தமக்கு வேண்டாம், தருமத்திற்கே செலவிடும் என்று திருப்பித் தந்தார் மன்னர். பாரக்ஜி மதுரைக்கு வந்து, தமது பெருஞ் செல் வத்திரளால், துவாரகாதீசர் கோயில் கட்டி, அதன் பாது காப் பிற்காக ஏராளமான நிலபலங்களை விட்டிருந்தார். அவருக்குப் பிள்ளையில்லை. இறுதிநாளில் தமது சொத்து சுகங்களையெல்லாம் கோயிலுடன், விசுவாசமான ஊழியனுயிருந்த மணிராமின் மூத்த பிள்ளைக்கே சாசனம் செய்து தந்தார். மணிராமுக்கு மூன்று புதல்வருண்டு; லக்ஷ்மீசந்து, ராதாகிருஷ்ணன், கோவிந்ததாஸன். மூன்று பேரும் நல்ல செல்வச்செழிப்பும் லௌகிகசாமர்த்தியமுங் கொண்டவர்கள். விஷ்ணு கோயில் தர்மகர்த்தாக்களான பிறகு ஜைனமதத்திலிருந்து இவர்கள் வைஷ்ணவ சம்பிரதாயத்திற்கு மாறினர்.

இராதாகிருஷ்ணன். அரங்காச்சாரியார் என்ற தென்னாட்டு வைஷ்ணவ குருவிடம் தீக்ஷை பெற்றார். இவர் முன்னே, மது ரைக்கருகே யுள்ள கோவர்த்தனத்தில் விஷ்ணு கோயில் அத்யக்ஷ ராயிருந்த ஸ்ரீநிவாசாசாரியாரின் சமயல்காரராயிருந்தார். ஸ்ரீனி வாசாசாரியார் தமிழகத்திலிருந்து வந்து, இராமானுஜ சம்பிரதா யத்தையும் திவ்யப்ரபந்தசாரத்தையும் வடநாட்டில் பிரசாரம் செய்தார். அரங்காச்சாரியார் இவரிடமே கல்வி கற்று அன்புக் குரிமையாகி, முடிவில் ஆசாரியர் திருவுளப்படியே கோவர்த்த னலயம் அத்யக்ஷகரும் ஆனார். இவருக்குப் பெரும் புதையற் செல்வம் கிடைத்தது. அதைத் தமது சிஷ்யர் ராதாகிருஷ்ணசேட் டிடமே இரகசியமாகக் கொடுத்துப் பாதுகாத்தார். இராதா கிருஷ்

ணனும் தம்பி கோவிந்தனும் வைஷ்ணவரானது, விரஜானந்தர் வருமுன்பு, 1844-ல்.

இவர்கள் வீர வைஷ்ணவர்களாய் ராமானுஜரின் ஸ்ரீபாஷ்யத்தைக் கற்று, பிருந்தாவனத்தில் நாற்பத்தைந்து லட்ச ரூபாயில் ரங்க மந்திரம் கட்டினர். அதை சேட்ஜீயின் கோயில் என்றே இன்றும் வழங்குகிறார்கள். அதன் பாதுகாப்பிற்காக ராதாகிருஷ்ண சேட்டு வருஷம் 1,16,000 ரூபா வருமானந் தரும் 33 கிராமங்களை எழுதி வைத்தார். 1857-ல் அவர் ரங்கமந்திரத்தையும் அதன் சொத்துக்களையும் அரங்காச்சாரியாருக்கே தாமிரப் பட்டயசாசனம் செய்து கொடுத்தார். பிருந்தாவனத்தில் இது தான் மிக்க இசை பெற்ற கோயிலாக விளங்குகிறது.

இந்த ரங்காசாரியாருக்கு இலக்கணம் சொல்லித்தந்தவர் கிருஷ்ண சாஸ்திரி. இவர் நியாய வியாகரணப் புலவர், தர்க்கப் புலி. இவர் ஒரு சமயம் மதுராபுரிக்கு வந்து சேர்ந்தார். அரங்காசாரி சிஷ்யர்களான சேட்டுகள் இவரை மரியாதை செய்தனர். கிருஷ்ண சாஸ்திரியும் விரஜானந்தரும் சாஸ்திரார்த்தம் செய்ய வேண்டுமென்று வித்வான்கள் விரும்பி ஏற்பாடு செய்தனர். விரஜானந்தரின் மேதையும், கல்வித் திறமையும் இராதகிருஷ்ணருக்குத் தெரியும். அவரிடம் வாதாடி கிருஷ்ண சாஸ்திரி தோற்றால் தமது குருவிற்கு அவமானம் என்று கருதி ஒரு சூழ்ச்சி செய்தார். சாஸ்திரியாரின் சீடர் என்று இரண்டு பேர்களை அனுப்பி; அவர்களுடன் தர்க்கம் செய்யச் சொன்னார். அவர்கள் பெயர் லக்ஷ்மண ஜோதிஷி, மூடமுடியா. இருவரும் வியாகரணம் படித்தவர்கள். சித்தாந்த கௌமதியை உருத்தள்ளினவர்கள் தண்டிஜீ சாஸ்திரியுடனேயே தர்க்கம் செய்வேனென்றார். அதற்குச் சம்மதிக்காமல் ராதாகிருஷ்ணர் சிஷ்யரையே அனுப்பியதால் தண்டிமஹா ராஜரும் ரங்கதத்தர் கங்காதத்தர் என்ற தமது இரண்டு மாணவரை அனுப்பினார். கௌதம நாராயணர் கோயிலில் தர்க்கம் நடந்தது. விஷயம் சுத்த இலக்கணம். அஜாத்யுக்தி என்ன ஸமாஸம், எத்தனைவது தத்புருஷம் என்பது. தண்டி சிஷ்யர் ஆஜாத்யுக்தி ஷஷ்டி ஸமாஸம் என்றனர், சாஸ்திரி சீடர் ஸப்தமீ ஸமாஸம் என்றனர். தண்டிஜீ தமது சிஷ்யர் சொன்னதே சரி என்று விளக்கினார். சாஸ்திரி தமதே சரி என்றார். ராதாகிருஷ்ணசேட்டு சாஸ்திரி பக்கமே சரி என்று சாதித்தார். பந்தயம் 500 ரூபா. அதை சேட்ஜீ உள்ளூர் வேதியருக்குப் பங்கு வைத்துக்கொடுத்து, அவர்களையும் தன் பக்கம் சேரச்செய்தான்.

பந்தயப்பணத்தில் 200 ரூபா விரஜானந்தரது, 200 சாஸ்திரி பணம், 100 சேட்பணம். விரஜானந்தர் அஷ்டாத்தியாயியைக் குறிப்பிட்டுத் தமது கட்சியே சரியென்று பறைச் சாற்றச் செய்தும், சேட்டின் பிடிவாதம் தணியவில்லை. அவன் ஏராளமான கைக்கூலி தந்து, காசிப்பண்டிதரையும் தன் பக்கமே தீர்ப்புக் கூறச் செய்தான். கிருஷ்ணசாஸ்திரி ஜயமுழக்கத்துடன் மதுரையை விட்டுச் சென்ருர்.

"விரஜானந்தப் புலி தோற்றது போய்" என்று ஊரெல்லாம் கூச்சலிடச் செய்தான் சேட்டு. பணம் உண்மையை மறைத்தது. வஞ்ச உலகம் லஞ்சத்தில் மயங்கியது.

சும்மா விட்டாரா விரஜானந்தர்! காசிப்பண்டிதருக்குத் தர்க்க ரீதியாகக் கடிதம் எழுதி, தமது கட்சியை விளக்கினுர். பண்டிதர்கள் ஓர் ஆள் மூலம் நீர் சொல்வது சரிதான், இலக்கணத்தில் அப்படியிருக்கிறது. ஆனுல் எங்கள் வாயில் முன்பே வந்த தீர்மானத்தை இனி மறுக்க முடியாது என்றனர். விரஜர் கலெக்டரிடம் பிராது செய்து, நமது இருநூறு ரூபாயையும் வாங்கிதரச் சொன்னுர். செல்வச்சேட்டு கலெக்டரையும் தாஜா பண்ணிவிட்டான். "சுவாமிகளே பணக்காரன் வம்புக்குப் போகாதேயும்" என்று கலெக்டர் புத்தி சொன்னுர், சுவாமிகள் வருமான அதிகாரியிடம் முறையிட்டார். அதே பதில் கிடைத்தது. "என் பணம் திரும்பி வரவேண்டும், அல்லது என் கட்சி நியாயம் என்று ஒப்பவேண்டும்" என்று துறவி கதறிப் பார்த்தார். பணத்திமிர் அசையவில்லை. உடனே சொல்லம்பை டங்காரம் செய்து விரஜானந்தர், காசி பண்டிதர்மேல் "கதம் காசி வித்வம்மதீ" என்று முடியும் கண்டனக் கவி பாடிவிட்டார். இந்தச் சிறிய இலக்கண உண்மை தெரியாதவர்களா பிரமாதமாக காசி வித்வான்கள் என்று மார்தட்டுகிருர்கள்...இவர்களை எப்படி அறிவாளர் என்ன முடியும்...? என்பதே அதன் பொருள்.

விரஜானந்தர் தமது கட்சியை நிலைநாட்ட கர்த்ரு கர்மணோ: க்ருதி என்ற பாணினி சூத்திரம் பொருந்துவதைக் கண்டு, அன்று முதல் பாணினி வியாக்கியானமான அஷ்டாத்யாயியையே ஆதாரமாகக் கொண்டு, பிற்காலத்தில் கண்டபேர் எழுதிய இலக்கணங்களைக் கிழித்தெறிந்தார். ரிஷி வாக்கைத் தவிர மறறெதையும் ஒப்ப மறுத்தார். சித்தாந்த கௌமதி, மனோரமா, சந்த்ரிகா, சேகர் முதலிய இலக்கணங்களைக் குப்பையில் கிழித்தெறிந்தார். ரிஷிகள்

அருளிய ஆர்ஷ நூல்களையே விரஜானந்தர் ஒப்பினார். அனார்ஷ நூல்களைப் பலமாகக் கண்டித்தார், பாணினி அஷ்டாத்யாயி முழுதும் சுவாமிகளுக்குக் கரதலப்பாடமானது. ஆர்ஷ நூல்கள் எவை அனார்ஷ நூல்கள் எவை என்பதை அவர் தெளிவாக விளக்கினார். ஆர்ஷகிரந்தங்கள் ரிஷி வாக்குகள், வேதப் பொருள் நிறைந்தவை' ஓம் அத: என்று தொடங்குபவை—அதாதோ ப்ரஹ்மஜிக்ஞாஸா, அத யோகானு ஸாஸனம் என்பவை உதாரணங்கள்...அனார்ஷ கிரந்தங்கள் வேதப்பயிற்சி மறைந்தபிறகு கண்ட பேர் எழுதியவை. அவை ஏதாவது தேவதைகளுக்கு வணக்கஞ் செய்து தொடங்கும்: நாராயணாய நம: துர்காயை நம: ஸரஸ்வத்யை நம: முதலியன உதாரணங்கள். ஆர்ஷநூல்கள் சாதிமத பேதமில்லாமல், சர்வாத்மசம்மதமதமாய், சர்வோத்தமக்கொள்கைகளுடனிருக்கும், அனார்ஷகிரந்தங்கள் "என் மதம் என்சாதி எங்சாமி" என்ற அகங்காரமும் பிறமத கண்டனமும் கொண்டிருக்கும். உபநிஷத்து எல்லாருக்கும் பொதுவான ஆர்ஷ நூல். சிவபுராணம் என்றால் சிவனையே போற்றும், விஷ்ணு தூஷணை செய்யும். வைஷ்ணவபுராணம் விஷ்ணுவையே போற்றும், சிவ தூஷணை செய்யும். சாக்த புராணங்களோ சொல்ல வேண்டியதில்லை. பொய்த் தெய்வங்களை யெல்லாம் புராணக் கதைகட்டி வர்ணிக்கும். அனார்ஷ நூல்களினாலேதான் நமது நாட்டில் இத்தனை குரு பீடங்களும் குருபீடங்களைச் சுற்றி வகுப்பு வாதங்களும் சமயச் சண்டைகளும் கோயில்களும் ஆயிரக்கணக்கான உருத்தொழுகைகளும், பிரிவினைகளும் ஏற்பட்டு, இந்து தர்மம் உருப்படாமலே போய் இந்துக்கள் பரதர்மிகளாகி, நமக்கே விரோதிகளாக நேர்ந்தது. உபநிஷத்திற்கு ஆசாரிய சங்கரரின் பாஷ்யத்தை அவர் மிகவும் மெச்சினார். ஆசாரிய ரிஷிகள் அல்லார், கண்டபடி பழைய நூல்களில் கைவைப்பதையும், மனம்போனபடி புதிய நூல் எழுதுவதையும் அவர் பலமாகக் கண்டித்தார். விரஜானந்தர் தாமே அஷ்டாத்யாயிக்கு உரையும், வாக்கிய மீமாம்ஸை என்ற இலக்கணமும் செய்தார். ஆனால் நான் ஆசாரியனல்லேன் சாதாரண மனிதன். என் எழுத்து பிறர் மூளையைக் குழப்பக் கூடும் என்று கையெழுத்துப்பிரதிகளைக் கிழித்துக் கங்கையில் எறிந்து விட்டார். ஊரில் வந்த பண்டிதர்களெல்லாம் அவர் ஆர்ஷ நூல்களையே போற்றும்படி வற்புறுத்தினார். சித்தாந்த கௌமுதியைத் தீயில் போட்டு எரிக்க வேண்டினார். அதன்மேல் அவருக்கு மகா எரிச்சல். சர்க்கார் அதிகாரிகளைக் கண்டால், சித்தாந்த கௌமுதிகளைச் சேர்த்து வைத்துக் கொளுத்தும்படி

வேண்டினார். மதுரா கமிஷனரிடம் ஊரில் ஆர்ஷ கிரந்தங்களையே ஆதரித்து அனார்ஷ கிரந்தங்களை அடக்கி விடும்படி வேண்டினார். அதிகாரி மத விஷயத்தில் தலையிடேன் என்று மழுப்பி விட்டார். மதுரா திருத்தலம். அங்கே ஏராளமான பண்டிதர்களும் துறவிகளும் வருவார்கள், சுவாமிகளை அவசியம் காண்பார்கள். அவர்களுக்குத் தமது கொள்கைகளை அவர் அழுத்தமாகச் சொல்லுவார். பலர் அவரை மெச்சி மாணவரானார். காசியிலிருந்து வந்த விரஜப்கிஷோர் அப்படி மாணவரானவருள் ஒருவர். ஊரில்பண்டிதச் சிலம்பம் அதிகம். பெரிய புலவர் வந்தால் விரஜானந்தருடன் பொருத விட்டுப் பார்ப்பது ஊராருக்கு உற்சாகமாயிருந்தது. ஒரு தரம் பாணினி மஹாபாஷ்யத்தில் அப்யந்தரம் வாக்யம் — ஆகிய இரண்டு பொருள் உண்டு என்பதை எதிர்த்த கோபாலாச்சாரியார் என்ற புலவரை பிருந்தாவனம் சேட்ஜி கோயிலில் சபை கூடி வென்றார்; சபைக்கு மத்யஸ்தமிருந்த அரங்காசாரியாரே இப்போது விரஜானந்தர் புலமையை மெச்சி, அவருக்கே வெற்றி மாலை சூட்டினார். பம்பாயிலிருந்து வந்த சதாவதான அந்தககவி கட்டுலாலை " ஐயா ரிஷிவாக்குகளைப்படியும், உமது புதுக்கவியில் பிழைகள் அதிகம் '' என்று திருத்தினார். விரஜானந்தர் நக்கீரர் போலக் கலைவீரர்.

## 21. ஸர்வ பௌம சபை

விரஜானந்தர், மகா வைராக்கியமானவர். கண்ணில்லாத ஞானி; நியமநிஷ்டையில் அணுப்பிசகாத வேதமார்க்கி. அவர் பால் பழம் பேரீச்சம் பழம்,—சுக்கு—வெந்நீர் ஆகியவற்றையே புசித்து உண்பார். அடிக்கடி பட்டினியிருப்பார்; அடிமைத்தனத்தை வெறுப்பார். பெயர்களுக்குப்பின் தாஸ், தாஸன் என்ற வால்களை இகழ்வார். அவரிடம் வந்த கங்கா தாஸருக்கு கங்காதேவன் என்ற பெயரிட்டனுப்பினார். அடிமை மனப்பான்மையை அவர் மண்டையிலடித்து, எல்லாரும் சுதந்தரமாக மனச்சாட்சிக்கு விரோதமில்லாமல், நிமிர்ந்து நடக்கச் செய்தார். அவர் காலையில் வல்லாரை சாப்பிடுவார், பரம சுத்தர். யமுனையில் இரண்டுவேளை குளித்து சந்திஜப ஹோமங்களைத் தவறாது செய்வார், குருட்டு நம்பிக்கைகளாலும், புராணப் பொய்களாலும், வகுப்பு வேறுபாடுகளாலும் நமது நாடு சீர்குலைந்து அன்னியருக்கு அடிமையானதை உணர்ந்து வருந்திய துறவி விரஜானந்தர். அவர் 1857-ல் நடந்த இந்திய சுதந்திர யுத்தத்தின் காரண காரியங்களையும், அப்

போது நீலும் ஹாவ்லக்கும் செய்த படுகொலை அட்டூழியங்களை யும். நம்மவரே துரோகிகளாகி, அன்னியருக்குதவிய மோசமும் கண்டு வருந்தினர். இந்தியா உருப்படவேண்டுமானல், இடை யிற் புகுந்த அபத்தங்கள் ஒழிந்து, சர்வோத்தமமான வேதவழியிற் செல்லவேண்டும் என்று பிரசாரம் செய்தார். வேதப் பிரசாரத் திற்காகவே அவர் தக்க மாணவரைப் பயிற்றினர்...வேத தரு மத்தை நிலை நாட்ட மஹாராஜர்களை அணுகி மன்ருடினர்.

நான சாகெபு போர் புரிந்து வீரர்களை யெல்லாம் தேசசுதந் தரத்திற்கே பலி கொடுத்து, ஓடி மறைந்தான். போரும் நின்றது. வட இந்தியா முழுதும் மயானச்சாந்த மடைந்தது. சுதந்தரக் கொடி பிடித்த மன்னர்களெல்லாம் அரசிழந்தனர். குலாமிகள் சிறந்தனர். 1858-ல் விக்டோரியாராணி இந்தியருக்கு ஒரு சாச னம் வழங்கினர். அதைப் படித்தளிக்க தர்பார் கூட்டினர் கானிங்குதுரை. 1858 நவம்பரில், ஆக்ராவில் தர்பார் கூடியது. சுதேச மன்னர்கள் அனைவரும் வந்து ராஜவிசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொண்டனர்.

இச்சந்தர்ப்பத்தை வேதப் பிரசாரத்திற்குப் பயன் படுத்திக் கொண்டார் விரஜானந்தர். சுவாமிகள் ஆக்ரா சென்று, க்ஷத்ரிய வீரரான ஜயபூர் மன்னன் ராமசிங்கைக்கண்டு, சர்வ பௌம சபை கூட்டி வேதக் கொடியை உயர்த்தத் தூண்டிப் பேசினர்:—

மஹாராஜா, அந்தணர் வேதத்தை மறந்தனர், இடையே தோன்றிய அனர்ஷ நூல்கள், போலிகளின் உரைகள் அட்டூ ழியம் செய்து, நமத தேசத்தைப் பிரித்தலைக்கின்றன. க்ஷத்திரிய பலம் குன்றி விட்டது. க்ஷத்திரியரில்லாமல் தேசத்தை யார் பாது காப்பார்? தர்மம் எப்படி நிர்பயமாக வளரும்? நீர் உண்மையான க்ஷத்திரியர். நீர் அகில இந்திய சபை கூட்டும். நாட்டிலுள்ள பண்டிதர்களும் அறிஞரும் வரட்டும். நான் ஆர்ஷக்கிரந்தங்கள் இன்னவை, அனர்ஷ கிரந்தங்கள் இன்னவை என்று விளக்கு வேன்: பாணினி அஷ்டாத்யாயி, பாதஞ்சலி, சங்கரர் போன்ற அருள் நூல்களையே போற்றுவேன், வேத தர்மம் இன்னதென்று தெளிவுறுத்திப் போலிப்பழக்கங்களைக் கண்டிப்பேன். இந்தியா உருப்பட வழி சொல்வேன். அறிவாளர் கூடித் தீர்மானித்து வேததர்மத்தை நாடெங்கும் பரப்ப முயற்சிசெய்யலாம்...பரமதங் கள் இந்து தர்மத்தை ஆக்ரமிக்கின்றன. பொய் அட்டூழியம் செய் கிறது. உண்மைக் கொடியை உயர்த்தி, வேததர்மத்தை நாடெங் கும் பரப்பலாம். **மன்னர்களே விழித்தெழுங்கள்!"**

இராமசிங் எல்லாம் சரிதான், இப்போது இங்கே சபை கூட்டத் தோதில்லை. ஜெயபூர் சென்று வேண்டியதைச் செய்கிறேன் என்று சொல்லி விரஜானந்தருக்குச் சன்மானம் செய்தார். துறவி " ஐயா நான் உம்மிடம் பணத்தாசை கொண்டு வரவில்லை: சன்மானம் உம்மிடமே இருக்கட்டும். நீர் சர்வ பௌம சபை கூட்டவேண்டும். கூட்டினால் விக்ரமாதித்யன் போலப் புகழ் பெற்று விளங்குவீர். இன்றேல் எல்லாரையும் போலத் தின்று தூங்கி இறந்து மண்ணாக வேண்டியதுதான். உலகம் உம்மை மறந்தே போகும். நீர் இருந்ததும் இறந்ததும் ஒன்றுதான். இந்தியாவில் வேததருமம்மறைந்து, புராண தாந்திரிகப் பொய்மூட்டைகள் மனிதர் மூளையைக் கலக்கிப் பிரிவினை செய்கின்றன. அவற்றை ஒழித்து, பரிசுத்தமான ரிஷிஞானத்தை அனைவரும் கற்கச் செய்வதுதான் தேசோத்தாரணம்" என்று வேண்டுமட்டும் சொன்னார். சரிசரி என்று கேட்டுவிட்டு, ஜயபூர் சென்றதும், ராம்சிங் எல்லாம் மறந்துவிட்டான். விரஜானந்தர் பிறகு காஷ்மீர் ரணவீர சிங்கருக்கும், குவாலியர் ஜியாஜி மஹாராஜாவுக்கும் தம் எண்ணத்தை எழுதி, அகில இந்திய வேதர்ம மகாநாடு கூட்ட வேண்டினார். பதிலில்லை. நானாராயன் சண்டையில் ஆங்கிலேயர் செய்த கொடுமைகளால் சிற்றரசரெல்லாம் பயந்துபோய், சுதர்மம் சுயராஜ்யம் என்ற பெயரையே வெளியில் சொல்லாமல் அடங்கிப் போயிருந்தனர் மேலும் ஆங்கில மோஹம் அதிகரித்து, வேதமாவது கீதமாவது என்ற நாஸ்திக நிலைக்கு நாடு வந்துவிட்டது...அன்னிய மோஹம் ஒருபுறம், சாதிப்பேயாட்டம் ஒருபுறம், சுதர்மத்தை அறியாத மடமையிருள் இன்னொருபுறம்; நாட்டை அடிமைக் குழியில்ஆழ்த்தின. வடநாடெல்லாம் கொடிய பஞ்சம்; இந்துக்கள் அதிவிரைவாக மதம் மாறிக் கொண்டிருந்தனர். விரஜானந்தர் உள்ளம் நாடு அறம் என்று துடித்தது. தமது மனத்துடிப்பை அறிந்து, இந்தியரைத் தட்டி எழுப்பக்கூடிய ஒரு ஆத்ம வீரனை அவர் எதிர் பார்த்திருந்தார். இந்தச் சமயமே தயானந்தர் வந்து சேர்ந்தார்.

## 22. கதவு திறந்தது.

தரிசனம் நமஸ்காரம் என்றால் விரஜானந்தர் கதவு திறக்க மாட்டார். படிக்கவேண்டும், கேட்கவேண்டும் என்றால், அர்த்த ஜாமமானாலும் உடனே அன்புடன் கதவு திறந்து வரவேற்பார்... *14—11—1869*; டட் டட் டட்! கதவுச் சத்தம் கேட்டது.

விரஜா : யாரது ?

தயா : தயானந்தோஹம்.

விர : என்னவேண்டும்?

தயா : தங்கள் சிஷ்யனாக வேண்டும்.

விர : என்ன படித்திருக்கிறீர்?

தயா : வியாகரணம் முதலியன.

விர : கதவு திறந்தது; இந்தியாவின் சிறந்த குருமுன் சிறந்த சிஷ்யன் நின்றான். இருவரும் நைஷ்டிகபிரம்மசாரிகள். வேதவித்துக்கள். தயானந்தர் வயது முப்பத்தாறு. நல்ல கட்டுமஸ்தான வைரக் கட்டை. விரஜானந்தர் எண்பத்தோரு வயதுப்பழம். கண்ணிழந்த தொண்டுகிழவர். என்றாலும் ஞானக்கண்ணால், ஞானமணியான சிஷ்யனைத் தெரிந்துகொண்டார். தயானந்தர் குருவுக்கு சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து, பணிவுடன் நின்றார். விரஜானந்தர் சிஷ்யனை அமர்த்தி, "அப்பனே என்னிடம் படிக்கவேண்டுமானால், முன்னே படித்த அனார்ஷ கிரந்தமெல்லாம் மறக்கவேண்டும். மஹாபாரதத்திற்குப் பின்னே எழுதப்பெற்ற நூல்கள் ரிஷிகள் அருளிய உண்மை நூல்கள். மஹாபாரதத்திற்குப் பின்னே எழுதப் பெற்ற நூல்கள், உள்ளுணர்வில்லாத சாதாரண மனிதர் எழுதியவை. இந்த அபத்தக்குப்பைகளாலேதான் நமது நாடு இந்தக்கதிக்கு வந்தது. அருள் நூல்களையே நீ படிக்கவேண்டும்... வெறும் மூளைக்குப்பைகளான பொய்நூல்களை வீசியெறியவேண்டும்...ஸாரஸ்வத் என்ற இலக்கணம் எழுதிய அனுபூதிஸ்வரூபாசாரியார் பல்லிழந்ததால், பும்ஸு என்பதை பும்க்ஷு என்று தன் பொக்கை வாய் உச்சரிப்பே சரியென்று சூத்திரமும் செய்தார்...சித்தாந்த கௌமதி படுமோசம். அதன் ஆசிரியர் பட்டோஜியை மதிக்கவே கூடாது. அந்த நூலைச் செருப்பாலடித்துக் கிழித்தெறியவேண்டும். ஒரு தரம் கலெக்டர் ப்ரீஸ்ட்லி இங்கு வந்து வணங்கி எனக்கு ஏதாவது சேவை செய்யவேண்டுமா என்று கேட்டார். ஐயா பட்டோஜியின் கௌமதியை எங்கிருந்தாலும் பறிமுதல் செய்து ஒரேயடியாகத் தீயை வைத்துக் கொளுத்துங்கள் அல்லது கிழித்து ஆற்றில் வீசுங்கள்...அதுதான் எனக்குச் செய்யும் சேவை என்றேன்... உம்மிடம் அனார்ஷ நூல்கள் இருந்தால் உடனே கிழித்துப்போடும்" என்றார். அப்படியே செய்வதாக தயானந்தர் ஒப்புக்கொண்டார். பிறகு விரஜானந்தர், "நீர் துறவி. பிக்ஷையை நம்பியிருக்கக்கூடாது. படிக்கும் மாணவன் சாப்பாட்டுக்கு வழிசெய்து கொள்ளவேண்டும்,

முதலில் உண்ண இருக்க வசதி செய்துகொண்டு வாரும்" என்ற னுப்பினார். அப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டு, தயானந் தர் வணங்கிச் சென்றார்.

தயானந்தர் கிம் கரோமி, க்வ கச்சாமி (என் செய்வேன்? எங்கு செல்வேன்?) என்று சிந்தித்துக் கொண்டே ரங்கேச்வர் மந்திரத்திற்கு வந்தார். கையில் ஒரு கடந்தவிர வேறெதுவுங் கிடை யாது. துர்காப்ரஸாத் க்ஷத்ரி என்பவர் சிலநாள் தயானந்தருக்கு பிக்ஷை செய்தார்.

ஒரு நாள் அமர்லால் ஜோஷி என்னும் வள்ளல், தயானந்த ரைக் கண்டார். அவர் தயானந்தர்போலே உதீச்ய குஜராதி பிரா மணர், செல்வர், புண்ணியவான். அவர் தயானந்தரின் விருப்பத் தைக் கேட்டறிந்து, இருக்கவும் உண்ணவும் தாராளமாக ஏற்பாடு செய்தார்...விச்ராம் கட்டத்தில் லக்ஷ்மீநாராயணர் கோவில் தளத்தில் ஜாகை ஏற்பாடு செய்தார். அது யமுனைக்கரையில் ரமணீயமான தோப்பும் வயலும் சூழ்ந்த இடம். "அமர லால் மிகவிசால மனதுடையவர். எனது உணவு இருக்கைக்கு தாராளமாக உதவினார். நான் சாப்பிட்ட பிறகுதான் அவர் சாப்பி டுவது வழக்கம். என் உணவில் அவருக்கு அத்தனை கருத்து. அமர லாலுக்கு நன்றி" என்று எழுதுகிறார் தயானந்தர்.

ஜோஷீபாபா தயானந்தருக்கு வேண்டிய நூல்களும் வாங் கித்தந்தார். ஹரதேவ் என்பவர் பாலுக்காக மாதம் இரண்டு ரூபா தந்தார்; கோவர்த்தனர் விளக்கெண்ணெய்க்காக மாதம் கால் ரூபா தந்தார்...இவ்வாறு வேண்டியன கிடைத்தபிறகு, தயானந்தர் விக்ஞான சக்ஷுவான குருநாதரிடம் பாடம் கேட்கத் தொடங்கினார். குரு, சர்வேசனே தமது விருப்பத்தை நிறைவேற்ற இத்தகைய சிஷ்யனைத் தந்ததாக எண்ணி மகிழ்ந்து, மிகவும் கருத்துடன் பாடம் சொன்னார்.

## 23. குருவும், சிஷ்யனும்

அதிகாலை எழுந்து யமுனையில் குளித்து அனுஷ்டானங்களை முடித்துக் கொண்டு, தயானந்தர் கணக்காக ஏழரை மணிக்கெல் லாம் குருநாதரிடம் வந்து நமஸ்கரித் தமர்வார். விரஜானந்தரும் தமது அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, சிஷ்யனை எதிர் பார்த்திருப்பார். மணிதவறினால் குரு சினப்பார். பாடம் சரியாக ஒப்பிக்காவிட்டால், பிடிவாதமாக "ஒப்பி; பிறகே மேற்கொண்ட பாடம்" என்பார். ஒரு நாள் ஒரு பிரயோகசித்தி மிகவும் கடின

மாயிருந்தது; மறந்து போனார் தயானந்தர். மறுபடி சொல்லித் தரவேண்டினார் சிஷ்யர். "நான் சொன்னதையே திருப்பிச் சொல்லேன். பாடத்தை நினைப்பூட்டிக்கொண்டே வரவேண்டும்" என்று அனுப்பிவிட்டார்...ஏகசாந்தக் கிராகியான தயானந்தரும் நினைத்து நினைத்துப் பார்த்தும் நினைவிற்கு வராமல், குருவைக் கெஞ்சினார். "இதை ஞாபகம் வைத்துக்கொள்ள முடியாவிட்டால் யமுனையில் விழுந்து சா" என்று கடுகடுத்தார் தண்டி மகராஜ்... தயானந்தர் குருபாதம் தொட்டு வணங்கி, யமுனைக்கே சென்றார். நீண்ட தியானத்தில் ஆழ்ந்தார். உள்ளே யாரோ பிரயோக சித்தியை ஒப்பிப்பதுபோல் உணர்ந்தார். தியானபலத்தால் நினைவு வந்தது...உடனே குருவிடம் சென்று பாடம் ஒப்பித்தார்; குருவும் மகிழ்ந்து கொண்டாடினார்.

விரஜானந்தர் உள்விழித்த கண்டிப்புப் பேர்வழி. கண் தெரியாதென்று யாரும் ஏமாற்ற முடியாது. வருகிறவர் போகிறவர் எல்லாரையும் இடைப்போட்டுப் பார்த்தறிவார். அவரைக் கேளாமல், உத்தரவில்லாமல் யாரும் உள்ளே வர முடியாது. யாரையும் அழைத்து வரவும் கூடாது. மாணவர் தவிர யாரும் உள்ளேவர அவர் அனுமதிப்பதில்லை. தரிசன நாடகமும் நடத்துவதில்லை. ஒரு நாள் விரஜானந்தரின் உறவினர் ஒருவர் பஞ்சாபிலிருந்து வந்து சுவாமிகளைக் காணவேண்டிக் கெஞ்சினார். தயானந்தர் ஓசைப்படாமல் அவரை அழைத்துச் சென்று காட்டி, மெல்லக் கீழே கொண்டுவரும்போது, ஒரு சகபாடி கண்டு குருவிடம் கோள் சொல்லிவிட்டான். விரஜானந்தர் எரிமலையானார்... "போ வெளியே...உனக்குக் கதவு திறக்க முடியாது" என்று தயானந்தரைத் துரத்திவிட்டார். பிறகு நீண்ட நாள் மன்றாடி ஒரு வைர வியாபாரியின் சிபார்சின் மேல் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு பாடத்திற் சேர்ந்தார். சிறு பிழைகளைக்கூட குரு பொறுக்கமாட்டார். சில சமயம் அறை விழும்...உதை விழும்...ஒருநாள் தம் சிஷ்யனைக் கையால் நொய்யப் புடைத்தார். அதனால் அய்யர் கைதான் வலித்தது. தயானந்தர் "குருமஹராஜ் என் உடல் வஜ்ரம்; அதில் தங்கள் கைஅறைந்தால், தங்கள் மெல்லிய கரமே நோகும்...அதனால் எனக்கும் வருத்தமாயிருக்கும்" என்றார். அன்று குரு வைத்த அறையின் தடம் நீண்டகாலம் தயானந்தர் உடலில் தழும்பேறியிருந்தது. அதைக் காட்டி, தயானந்தர் குருவின் அன்பைப் புகழ்வாராம்.

விரஜானந்தர் தயானந்தரை மனதார நேசித்து உயிர்போலக் காத்தார். சிஷ்யரும் குருதேவர் மனம் அறிந்து தொண்டுசெய்து, பாடம்கேட்டார். விரஜானந்தர் தயானந்தரை, கால்ஜிஹ்வா (பொய்யை ஒழிக்கும் நாவலன்) குலக்கர் (கல்லைப்போல் திண்ணியன்) என்றழைப்பது வழக்கம். தயானந்தர் பரிசுத்த பிரம்மசாரி. பெண்கள் வாடையே இல்லாதவர். ஒரு நாள் யமுனைக் கரையில் தியானம் செய்தபோது, ஒரு பெண்மணி அவர் காலைத் தொட்டுக் கும்பிட்டுச் சென்றாள். அந்த ஸ்பரிசத்திற்காக வருந்தி, தயானந்தர் பட்டினியிருந்து, குருவிடம் சொன்னார். குருதேவர் இது தான் வைராக்கியம் என்று மெச்சினார். விரஜானந்தர் தயானந்தருக்குப் பாணினி அஷ்டாத்யாயியும், மஹாபாஷ்யமும் நிகண்டும் நிருக்தமும் கற்பித்தார். சிஷ்யன் எளிதில் கற்றுத் தேர்ச்சி பெற்று குருவைப் போலவே சமுஸ்கிருதத்தில் பெரும் புலமை பெற்றான். விரஜானந்தர் முறையாக வேதபாடம் சொல்லவில்லை. வேதத்தை அறிய இன்றியமையாத பாஷாஞானத்தையே தந்தார். எனினும் தயானந்தரே தமது எண்ணத்தை நிறைவேற்ற முடியும் எனக் கண்ட குருநாதர், தனியாக நாட்டு நிலை, வேத தருமம், வேதப் பிரசாரம் ஆகியவற்றைக் குறித்துப் பேசினார். நாளடைவில் இருவரும் அந்தரங்கத் தோழரானார்கள். குருவின் உள்ளம் சிஷ்யனுள் துடித்தது. குரு தம்மையே சிஷ்யனுள் வைத்தார் என்னலாம். விரஜானந்தர் தயானந்தருள் உயிர்த்தார்.

இரண்டரை ஆண்டுகள் முடிந்தன. கற்கவேண்டியதைக் கற்றாயிற்று. தயானந்தர் இனித் தமது திருப்பணிக்குப் புறப்பட முனைந்தார். குருவுக்குப் பிரியமான கிராம்பை அள்ளி தட்சிணையாகத் தந்து, "குருதேவ, தங்களால் கிருதார்த்தனானேன். எளியேனிடம் பொன்னில்லை. ஏழையின் இந்த எளிய குருதட்சிணையை ஏற்றருள வேண்டும்." என்று பணிந்தார். விரஜானந்தர் அன்பு பொங்கிய புன்னகையுடன் ஆசீர்வதித்து, "ஹே கால் ஜிஹ்வா, தீர்காயுஷ்மான் பவ...... நீ துறவி. உன்னிடம் நான் பணத்தை எதிர்பார்க்கவில்லை. குணக்குன்றே, என் அருமை குலக்கர், நீ மகா வித்வானாய். உன்னிடம் ஒரு தட்சிணை கேட்கிறேன். உள்ளமட்டும் ஆர்ஷநூல்களைப் பிரசாரம் செய்; வேதஞானத்தைப் பரப்பு. பொய்நூல்களைக் கண்டனம் செய். வேத தருமத்தை நிலைநாட்டவே உன் உயிரைக் கொடு. செய் சபதம். எடு வேதவிரதம். இதுவே நான் கேட்கும் குருதட்சிணை" என்று உருக்கமாகச் சொன்னார். தயானந்தர் "குருதேவா,

தாஸ்து சத்தியவேதத்திற்கே வாழ்வேன்- தங்கள் உள்ளம் என் உள்ளத்தில் துடிக்கிறது. உபதேசித்ததை என் ஆயுளெல்லாம் முயன்று நிறைவேற்றுவேன். தங்கள் ஆசி எப்போதும் என்பால் இருக்கவேண்டும் '' என்று நமஸ்கரித்தார். பரமகுரு உள்ளங்கிளர்ந்து, தீர்க்கதரிசியான சிஷ்யனை ஆசீர்வதித்தார். தயானந்தரும் நமஸ்தே என்று விடைபெற்றுக் கொண்டு தமது திருப்பணிக்கு எழுந்தார்.

## 24. மகா சமாதி

தயானந்தர் வேததருமத்தை மும்முரமாக தீரமாகப் பிரசாரம் செய்ததைக் கண்டு, குருதேவர் மிக்க மகிழ்ச்சி அடைந்தார். தமது ஜன்மம் சாபல்யமானதென்றுணர்ந்தார். தயானந்தரும் தமக்குச் சந்தேக மிருக்கும் போதெல்லாம் குருநாதரிடம் வந்து வேதார்த்தங்களைத் தெளிவு செய்து கொள்வதுண்டு. விரஜானந்தர் யஜுர் வேதத்தில் மகா நிபுணர். தயானந்தர் வரும்போதெல்லாம் அவர் வேத தர்மத்திற்ககாகச் செய்த பெருஞ் செயல்களையும் பட்ட துயர்களையும் கேட்டு, வாழ்த்தி '' தைரியமாக தருமக் கொடிபிடி. பொய்யைக்கண்டி; மெய்யைப் போற்று '' என்று ஊக்கியனுப்புவார்.

விரஜானந்தர் சுமார் தொண்ணூறு வயதுவரையில் வாழ்ந்தார். இறுதிகாலத்தில், தமது சொத்து, புத்தகங்கள், பாத்திரங்கள் ரொக்கம் ரூ- 300 எல்லாம் ஜுகல்கிஷோர் என்ற நன்றியுள்ள சிஷ்யனுக்குத் தந்து, வேததருமத்தைப் பரப்பச் சொல்லி, பரமாத்ம தியானத்தில் ஆழ்ந்தார்.

'' இன்ன நாள் இத்தனைமணிக்கு என் உயிர் பிரியும் '' என்றும் முன்பே சொன்னார். நாலைந்துநாள் படுக்கையிலிருந்தார். ஒரு நாள் வழக்கமாக உபதேசிக்கும் இடத்திற்குத் தன்னை தூக்கிச் செல்லச் செய்தார். ஆசாரிய பீடத்தில் கம்பீரமாக அமர்ந்தார். சமாதியில் ஆழ்ந்தார். அதுவே மகாசமாதியானது. கைகள் செயலற்று விழுந்தன. முகத்தில் புன்னகை தவழ்ந்து ஒரு ஜொலிப்பு எழுந்தது. உயிர்க்கிளி பறந்துபோனது. விரஜானந்தரின் மறைவைக்கண்டு வருந்தாத புலவரில்லை. ஏராளமான மகா ஜனங்கள் அவர் உடலை வேதகோஷங்களுடன் கொண்டுசென்று தகனக்கிரியை நடத்தினர். குருதேவர் இறந்ததைக்கேட்ட தயானந்தர் மிகவும் வருந்தி, "ஹா, ஆரியவர்த்தமே, பாரதவர்ஷமே இன்றொரு வேத வியாகரண சூரியன் அஸ்தமித்தான்" என்று

பெருமூச் செறிந்தார். இனி தயானந்தரின் தீரச் செயல்களைக் காண்போம்.

## 25. ஆக்ராவில்

ஆக்ராவிலேதான் விரஜானந்தர் சர்வபௌம சபை கூட்டச் சொன்னார். யாரும் கேட்கவில்லை. அதே ஆக்ராவுக்கே தயானந்தர் சென்றார் (1864 மே.) அங்கே சேத் குல்லாமல் தோட்டத்தில் தங்கினார். அத்தோட்டம் குல்லாமல் தந்தை ரூப்மல், சாதுக்கள் இருக்கவே நாட்டியது. தயானந்தர் காலை நான்கு மணிக்கே எழுந்து பல் விளக்கி நீர்பருகி, விறுவிறு என்று நடப்பார். குடல் சுத்திசெய்துகொண்டு அரைமணி நேரம் தியானிப்பார். பிறகு பால்பருகிச் சிறிது நேரம் எழுத்து வேலையோ புத்தகவேலையோ கவனித்து, அன்பருடன் அளவளாவிய பிறகு, குளித்துத் தனியறைக்குச் சென்று தியானம் செய்வார். 12 மணிக்கே சாப்பிடுவது வழக்கம். சாப்பிட்டதும் அரைமணி நேரம் இளைப்பாறிய பிறகு, வேத ஆராய்ச்சி, சாஸ்திரார்த்தம் முதலியன நடத்துவார். மாலை வேளையும் உலாவி வந்து, சந்தியாத் தியானம் செய்த பிறகு பிரசங்கம் நடத்துவர். இரவு பத்து மணிக்கு பால் பருகி உறங்குவார். ஆக்ராவில் சுந்தரலால் பாலமுகுந்தர் முதலிய அறிஞர் சுவாமிகளுக்குச் சேவை செய்து, ஞானோபதேசங் கேட்டனர். இருவரும் தபால் ஊழியர்கள். அதேதோட்டத்தில் கைலாச பர்வதம் என்ற சுவாமிகளும் இருந்தார். ஒரு நாள் ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாம் ஏகம் ஸரணம் வ்ரஜ என்ற கீதா சுலோகத்திற்குச் சிலர் அர்த்தம் கேட்டனர். சுவாமி கைலாசர் பிரபத்தி மார்க்கத்தை நீளப் பேசி "தர்மத்தையெல்லாம் கடவுளுக்கே விட்டுவிடுக!" என்று விளக்கினார். ஜனங்களுக்குப் புரியவில்லை. தயானந்தரைக் கேட்டனர். மகாபுத்திமானான தயானந்தர் ஸர்வாதர்மான் (ஸர்வ+அதர்மான்) என்பதே சரியான பாடம். எல்லா அதர்மங்களையும், பொய் போலி மதங்களையும் விக்ரக ஆராதனைகளையும் விட்டுவிட்டு, 'மாம்' என்று ஒவ்வொருவர் நெஞ்சிலும் பேசும் சர்வேசனை சரண் புகுக" என்று விளக்கியதும் ஜனங்கள் வியந்து மகிழ்ந்து ஏற்றனர். தயானந்தர் இந்துக்களில் பெரும்பாலோர் தினசரி சந்தி ஜபங்கூடத் தெரியாமல் கடனைக் கழிப்பதைக் கண்டார். உடனே ஸந்த்யா உபாஸனைகளை அச்சிட்டு ஏராளமாக வழங்கினார். ரூ 1500 செலவில் 30, 000பிரதிகள் அச்சிட்டளித்தார் ரூப்லால். சுவாமிகள் முதலில் பஞ்சதசி பாடம் சொன்னார். பிறகு அது ரிஷி

வாக்கில்லை என்று நிறுத்தினார். பிறகு அஷ்டாத்யாயி பாடம் சொன்னார். பாகவதத்தைக் கண்டித்தார். சுந்தராலாலுக்கு மூக்கிலிருந்த கோளாறைத் தீர்க்க நேதி, பஸ்தி, தௌதி முதலிய ஹடயோகமுறைகளைப் பயிற்றினார். சுவாமிகளே பெரும்பாலும் தியானயோகசாதனத்திலும் வேத ஆராய்ச்சியிலும் காலங்கழித்தார். வேதத்தில் சந்தேகம் வந்தபோதெல்லாம் மதுரைக்குச் சென்று குருநாதரிடம் கேட்டுத் தெளிந்தார். இவ்வாறு இரண்டாண்டுகள் ஆக்ராவில் தம்மைத் தயாரித்துக் கொண்டார் சுவாமிகள்.

## 26. பாகவதப் பலன்

1863 பிப்ரவரி மாதம், மாக சுக்ல பட்சம் குவாலியர் சிந்தியா ராஜா ஜியாஜி ராவ் பாகவத ஸப்தாகம் 108 பண்டிதர்களைக் கொண்டு நடத்தினார். காசி, பூனா, நாசிக், ஸதாரா முதலிய இடங்களிலிருந்து பெரிய வித்வான்கள் வந்து பாகவதம் படித்தார்கள். தயானந்தர் குவாலியர் சென்று மஹா தேவாலயத்தில் தங்கினார். அரசரும் தமது பண்டிதர் விஷ்ணு தீக்ஷிதரை அனுப்பி வரவேற்று பாகவத மான்மியத்தைச் சொல்லும்படி கேட்டார். பொய்புராணங்களைப் படிப்பதால் தொல்லையும் துயரமுமே வரும் என்றார் தயானந்தர். வருந்தி அழைத்தும் பாகவதம் படிக்குமிடத்திற்குப் போகாமல், தனியே தியானமும் வேத ஆராய்ச்சியும் செய்து கொண்டிருந்தார். மூன்று பந்தல் போட்டு கிருஷ்ண விக்ரகத்திற்கு முன், 108 பண்டிதர்கள் கிணீர் என்று பாகவதம் படித்தனர். அரசரையும் ராணியையும் இளவரசையும் நீடு வாழ்க நல்ல சந்தான முண்டாகுக என்று பண்டிதர்கள் வாழ்த்திப் பெருத்த சன்மானம் பெற்றனர். புலவர்களுக்குப் பலமான ஊர்வலங்கள் நடந்தன. பண்டிதர்கள் பாகவத மான்மியத்தைப் பற்றியும் கிருஷ்ணலீலானந்தம் பற்றியும் சொற் பொழிந்தனர். பலன்? முதற் சொற்பொழிவு நடந்த இரவே, ராணி கர்ப்பம் சிதைந்து காய் விழுந்தது. மற்றொரு சொற்பொழிவின் போது, ஒரு கடுஞ்சாவு. திருநாள் ஆனந்தமாக முடிந்து மங்களம் பாடியதும், ஊரில் காலரா பிய்த்துக் கொண்டு, ஆயிரம்பேர் வைகுண்ட பதவி சேர்ந்தனர். சோடா மகாராஜாவே காலராக் கண்டு கிருஷ்ணார்ப்பணமாய் விட்டார்......சுவாமிகள் யதுசாகெப் தோட்டத்திற்கு ஜாகை மாறி, மத்யானங்களில் புராணப் பொய்களை கண்டித்து, வேத உண்மைகளை விளக்கினார். அக்காலம் அவர் பகலில் பாலும், சாயுங்காலம் சப்பாத்தி பாசிப்பருப்பு இரண்

டுமே சாப்பிட்டார். நீண்டநேரம் யோகாப்யாஸமும் வேத ஆராய்ச்சியும் செய்தார்.

## 27. வெட்டினாலும் தொழேன்

குவாலியரிலிருந்து சுவாமிஜி கரௌலிக்குச் சென்று பத்ராவதி நதிக்கரைத் தோட்டத்தில் கொஞ்சகாலம் தங்கியிருந்து, கங்காபுரம் சென்று பண்டிதர்களுடன் வாதம் புரிந்தார். சிலபுலவர் பாதஞ்ஜலி மஹாபாஷ்யம் ஆதாரமில்லை என்று வாதாடினார்கள். "அப்படி எழுதித் தாருங்களேன்" என்றார் தயானந்தர். பண்டிதர்கள் தம் குட்டு வெளிப்படுமென்றஞ்சி, எழுத மறுத்துக் கூட்டத்தைக் கலைத்துச் சென்றனர். சுவாமிகளின் அறிவாற்றல்களைக் கேட்ட ஜயபுரி டாகுர் ரண்ஜித் சிங்கன், அவரை வரவேற்றுத் தன் தோட்டத்தில் சௌகரியமாக இருக்க வசதிசெய்து போற்றினார். சுவாமிகள் அவருக்கும் அவர் மகனுக்கும் கீதையும், சாந்தோக்ய உபநிஷத்தும் பிருகதாரண்ய உபநிஷத்தும் பாடம் சொன்னார். இருவரும் சுவாமிகளின் அமுதவாக்குகளைக் கேட்டு உருத்தொழுகையை விட்டனர். டாகுரின் காம்தார் குடியை விட்டார். ஜயபுரியில் வல்லப வைஷ்ணவர்கள் அதிகம். ராதை—கண்ணன் என்ற பெயரால் சிலர் ஆடிய லீலைகள் ஆபாசம், ஆபாசம்! சிலசமயம் குற்றவாளிகளைக்கூட வல்லபக் கோயில்களில் பட்டர் ஒளித்து வைப்பதுண்டு. பட்டர் சாதிச் செருக்கும் தனிச் செருக்கும் கொண்டு, வேறொரு மதத்ினரையும் மதிக்கமாட்டார். ஒரு நாள் ஜயபுரி மன்னன் பட்டாச்சாரியாருடன் பேசிக் கொண்டிருந்தார். அப்போது முதன் மந்திரி ஸர் ஆலிகானும் வந்து, அதே கப்பளத்தில் அமர்ந்தார். பட்டாச்சாரியார் அது தீண்டலென்று தலைமுழுகிப் பிராய்ச்சித்தம்செய்து கொண்டார்......மேலும் அரசர் வைணவ மதத்தில் நம்பிக்கையிழந்து, சைவரானார். நாடெங்கும் சிவாலயங்கள் கட்டி, சைவ சமயப் பிரசாரமும் செய்ய, தக்க பண்டிதர்களை ஏற்பாடு செய்தார். காசியிலிருந்து வித்வான்களை வரவழைத்து, சிவபரமான சொற்பொழிவுகள் நடத்தினார். ஜயபூரிலிருந்த பல வைணவர் சைவரானார். தயானந்தர் போலி மதங்களைக் கண்டித்து, உருத்தொழுகையையும் புராணப் பொய்களையும் நிராகரித்து, தூய வேத தருமத்தையே போற்றினார். அவர் உபதேச பலத்தால் பலர் வேத தருமத்தைக் கைக் கொண்டு, உருத் தொழுகையை ஒழித்தனர். தாம் சென்ற இடங்களில் தயானந்தர் கோயில்களில் ஜாகை. வைத்துக் கொண்டாலும், உருவை ஒருக்காலும் தொழுததில்லை

ஒரு பண்டிதர் "ஐயா ஒரு மன்னன் வந்து, நீர் விக்கிரகத்தை தொழுகிறீரா, அல்லது உம்மை வெட்டிக் கொல்லட்டுமா என்றால் என்ன செய்வீர்?" என்று வினவினார். தயானந்தர் வியச் சிரிப்புடன், "ஐயா தைரியமிருந்தால் என்னை வெட்டிக் கொல்லும். ஆனால் நான் உயிர் போனாலும் உருவைத் தொழேன் என்பேன்" என்றார். சொல்லும் செயலும் ஒன்றான சத்தியவான் தயானந்தரே.

## 28. எனக்கு உரிமையுண்டு

தயானந்தர் அரசருக்கோ, பண்டிதர்களின் மிரட்டலுக்கோ அஞ்சியதே யில்லை. அச்சப் பாம்பை அழுத்தி நசுக்கிய தீரர் தயானந்தரே. 6—3—1866ல், அவர் ஐயபூரிலிருந்து புஷ்கரத்திற்குப் புறப்பட்டார். டாகுர் ரஞ்சித் அவருக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்தனுப்பினார். வழியில் சுவாமிகள் சில ஊர்களில் தங்கி, வேத உண்மைகளை விளக்கினார். சிலர் அவர் சீடரானார்கள். ஒருநாள் சுவாமிகள் கிருஷ்ண நகருக்கு வந்து, சுகசாரர் கோயிலில் தங்கினார். உள்ளூர் அரசன் சுவாமிகளுக்கு மரியாதை செய்தார். சுவாமிகள், இந்துக்களின் மூடக் கொள்கைகளையும், பாகவதத்தின் ஊழல்களையும் சண்டமாருதமாகக் கண்டித்தார். வல்லபதாஸ் என்பவருக்கு ஆத்திரம் பொங்கிற்று. அரசரிடம் இந்தச் சாமியார் விஷ்ணு தூஷகர், பாகவத நிந்தகர் என்று கோளேற்றினார். "சாமியாரே, 24-மணி நேரத்திற்குள் ஊரைவிட்டுச் செல்லும்" என்று அரசர் உத்தரவிட்டார். சுவாமிகள் அதை அலட்சியம் செய்து, "இந்த ஊரில் இருக்கவும் பேசவும் எனக்கு உரிமையுண்டு" என்று தைரியமாகச் சொல்லி, மேற்கொண்டு ஆறு நாள் தங்கி, போலிப் பழக்கங்களைக் கண்டித்து, வேத தருமத்தைப் பிரசாரம் செய்தார், பிறகே ஆஜ்மிர் சென்று, அங்கிருந்து புஷ்கரம் போய், பிரம்மாஜி கோயிலில் தங்கினார். அங்கும் சுவாமிகள் விக்கிரக ஆராதனை, பல சாமித் தொழுகை, வைணவம் அனைத்தையும் கண்டித்தார். பிரம்மாஜி கோயில் பூசாரி நகரா முழக்கத்துடன் ஆவேசம் நடித்துப் பூஜை செய்தான். "ஐயா, சாமி உன்னுடன் பேசுமா? இந்த (நகராத்) தோலைப் போட்டடித்தால், சாமி வருமா? சைவ வைணவ புராணங்களெல்லாம் பிற்காலம் ஏற்பட்ட கட்டுமானங்கள். நீங்கள் முத்திராதானம் செய்வதேன்? தப்த தனு, ஸ்வர்கம் கச்சதி என்ற வாக்கிற்கு, முத்திரையை நெருப்பில் இட்டு வாட்டிச் சுட்டுக் கொள்வதில்லை. விரத வைராக்யாதி தவ நியமங்களால், உடலை வாட்டி, மனதை அடக்குவதே முத்திரா தானம்" என்று விளக்கினார். உடனே பூசாரி உருத் தொழு

கையை விட்டான். வேங்கட சாஸ்திரி தமது அகோர சைவத்தை விட்டு, சுவாமிகள் சிஷ்யரானார். பூசாரி கோயில் வேலையை விட்டுத் தபால் வேலை மேற்கொண்டான். கோயில் தருமகர்த்தா மணிபூரி பிரம்மாஜீக்கு நிவேதித்த பாலையே தயானந்தருக்குத் தந்தார். தயானந்தர் "அந்தக் கல்லுக்கு நிவேதித்ததை நான் கொள்ளேன்" என்று மறுத்து விட்டார். கங்காராம் என்பவர் பாகவதத்தைத் தலை கீழ்ப் பாடம் செய்தார். "ஐயா, இது பிற்காலம் போப் தேவர் எழுதியது. ரிஷி வாக்கில்லை. போலி நூல் களைப்படிக்காமல் வேதம், உபநிஷத்து, கீதை ஆகிய ஆர்ஷ கிரந்தங்களைப் படியும் என்றார். ஆள் உண்மையுணர்ந்து சுவாமிகளின் சீடரானார். இரண்டு மாதம் இப்படிப் பிரசாரம் நடந்தது.

## 29. சிறைக்கும் அஞ்சேன்

பிறகு சுவாமிகள் ஆஜ்மீருக்கு வந்து, ராய் பம்சிதார் தோட்டத்தில் தங்கினார் (30—5—1866). அங்கே கிறிஸ்துவருடனும், இஸ்லாமியருடனும் வாதாடி, வேத தருமமே உயர்வு என்று நிலை நாட்டினார். மௌல்வி மூரதாலி, இஸ்லாமைப் பற்றிப் பேசினார். ரெவரண்ட் கிரே, ராப்ஸன், ஷூல்ப்ரட் ஆகியோர் கிறிஸ்து மதத்தைக் கொண்டாடி, இந்து மதத்தைத் தூஷிக்கச் சில சமுஸ்கிருத சுலோகங்களைக் காட்டி இவையே உங்கள் வேத வாக்கு என்றனர். "ஐயா, இது போலி வாக்கு; காட்டும் வேதத்தில்" என்றார். கிறிஸ்துவர் வாயடைத்தது. சுவாமிகள் கிறிஸ்து மத கண்டனம் செய்தார். "இப்படிப் பேசினால், நீர் சிறைக்குச் செல்வீர்" என்று மிரட்டினார் ஷூல்ப்ரெட். "ஐயா, பாதிரியாரே! நான் சிறைக்கு அஞ்சவில்லை; வேத தருமமே சத்தியம். அதை நிலை நாட்டிப் பொய் மதங்களைக் கண்டிப்பதே எனது கடமை. அதற்காகத் தூக்கு மேடையிலும் ஏறத் தயார்" என்றார் தீரர். வாதிகள் சுவாமிகளின் தைரியத்தை வியந்து பயந்து சென்றனர். இப்படிப்பட்ட மகா புருஷரைப் பின்பற்றி யிருந்தால், இன்று இந்து சமுதாயம் பதினைந்து கோடிப் பேர்களை இழந்திராது!

ஆஜ்மீரில் ராமசேஷி மஹந்து வந்தார். அவரிடம் ஏராளமான பெண்கள் சென்று வந்தனர். சுவாமிகள் ராமசேஷி மதத்தின் புரட்டுகளை அம்பலப்படுத்தினார். இப்படிப் பதினாயிரம் போலிக் குருமார்களும், அவர்களைச் சுற்றிச் சிஷ்யர்களும், ஒரு குருவுக்கும் மற்றொரு குருவுக்கும் சண்டையும், அதனால் நாட்டில்

பிரிவினையும், அதனால் நாம் அன்னியருக்கு அடிமையாவதையும் சுவாமிகள் தெளிவாக விளக்கி, மகந்துவை வாதிற்கழைத்தார்! மகந்து பயந்துகொண்டு அன்றிரவே மெதுக்காக ஊரைவிட்டு நழுவினர்.

வேதத்தில் விக்கிரக ஆராதனை இல்லை என்று சுவாமிஜீ விறிட்டுரைத்தார். அவரை யாரும் எதிர்க்கவில்லை. டிபுடி கமிஷனர் டேவிஸனை சுவாமிகள் கண்டார். டேவிசன் சுவாமிகளின் அறிவை வியந்து, ஏதாவது சேவை செய்வதாகச் சொன்னர், "ஐயா, போலிக் குருமார்களும், அபத்தப் பதர்களும் மூடக் கொள்கையேற்றி, ஜனங்களைக் கொள்ளையடிக்கிறர்கள். உண்மையான வேத தருமத்தையே அனைவரும் பின்பற்றிப் போலிகளை அடியோடொழிக்க வேண்டும். செய்யும் உதவி" என்றர் தயானந்தர்.

## 30. பசுக் கொலை தீது

ஒருநாள் சுவாமிகள் பிரீதிசந்துக்கு மஹா பாஷ்யம் பாடம் சொல்லிக் கொண்டிருந்தார். அங்கே கர்னல் புரூக்ஸ் வந்து தொப்பி எடுத்து வணங்கினர். சுவாமிகள், "ஐயா, நீர் தர்மத்தை ஆதரிக்கிறீரா?" என்றர். புருக்ஸ், "தர்மத்தை ஆதரிப்பது நல்லதே! ஆனல் நாங்கள் உபயோகமான காரியம் செய்கிறேம்" என்றர்.

சுவாமிகள் "இல்லை. நீங்கள் உபயோகமானதைச் செய்யவில்லை. தீமையானதே செய்கிறீர்" என்றர்.

அதெப்படி? என்று ஆத்திரங் கொண்டார் புருக்ஸ்.. சுவாமிகள் ஒரு பசுவைக் காட்டி, "ஐயா, இந்தப் பசு எவ்வளவு ஜனோபகாரம் செய்கிறது? அதனின்று எத்தனை பேர் பால் பருகிச் சுகமடைகிறர்கள்? அதை நீங்கள் கொன்றுண்பது நல்லதா தீமையா சொல்லுமே. பசுவைக் கொல்வதேன்?" என்று வினவினர். இதைப்பற்றி நாளை பேசுவோம் என்று சென்றர் புரூக்ஸ்.

மறுநாள் வண்டியனுப்பி வரவழைத்து, புருக்ஸ் தமது பங்களாவில் சுவாமிகளுடன் பசுக் கொலைப் பற்றிப் பேசினர். சுவாமிகள் 45-நிமிஷம் கச்சிதமாகப் பசுக்கொலையின் தீமையை விளக்கி, ஊரில் கொலை மறுக்க வேண்டும் என்று மன்றடினர். புருக்ஸ், "தாங்கள் சொல்வது மெத்தச் சரி. பசுக்கொலை தீதென்று நான் அறிந்துகொண்டேன். ஆனல் கொலையை கவர்னர் ஜென

ரலே தடுக்க முடியும். அவரைப் பாரும்" என்று சிபார்சுக் கடிதமும் தந்தனுப்பினர். பிறகு ஜயபுரி மன்னருக்கு, "சிறந்த ஞானத் துறவி" என்று சுவாமிகளைச் சிபார்சு செய்தார்.

இதற்குள் ஆஜ்மீர் பண்டிதர்கள் கட்சி கட்டினர்கள். தயானந்தர் வைணவத்தையும், பாகவதத்தையும், அனர்ஷ கிரந்தங்களையும் தூஷிக்கிறார். சந்யாசியான இவர், ஓர் ஊரில் மூன்று நாட்களுக்குமேல் இருந்து தொல்லை செய்வதேன்? என்று கிளம்பினர்கள். சுவாமிகளோ, "ஐயா, ஜனங்களை மடமைப் படுகுழியிலிருந்து வெளியேற்றும் தர்ம சேவைக்காக ஆயுள் முழுதும் வேண்டுமானாலும் துறவி ஒரு ஊரில் தங்கலாம்." என்று பதிலுரைத்தார். இதற்குள் ஜயபுரி மன்னன் அழைக்கவே, தயானந்தர் அங்கே சென்று, டாகுர் தோட்டத்தில் தங்கினர். அரசர் அவரை அழைத்தார். சுவாமிகள் சென்றும் அவர் காணவில்லை, ஏனே? கோட் சொல்லிகளின் வேலைதான். தெரியாதா! சுவாமிகள் அங்கே வல்லபப் புரட்டுகளைக் கண்டித்தார். கோபால் சிங் என்ற வல்லபதாஸன், நாற்பது பேருடன் வந்து ஆத்திரமாகத் தாக்கினன். சுவாமிகள் பிரம்மசாரி பலத்தால் அத்தனை பேரையும் முண்டித் தள்ளி, "பலாத்காரத்தைக் காட்டினல் ஆபத்து வரும், கவனம்" என்று மூண்டாவைத் திரிகி விட்டார். வல்லபப் புரட்டர் பயந்தோடினர். சுவாமிகள் அங்கிருந்து ஆக்ரா சென்றார் (1—11—1886). அங்கே லாரென்ஸ் தர்பார் நடத்தினர். ஏராளமான கூட்டம்! தயானந்தர் பாகவதத்தையும், போலி மதப் புரட்டுகளையும், குரு பீடங்களின் அட்டூழியங்களையும் கண்டித்து, எச்சரிக்கைகள் வழங்கி, மதுரைக்குச் சென்றார். அங்கே தமது குருநாதருக்கு இரண்டு மோகராக்களும் மஸ்லினும் அளித்து வணங்கி, ஆசி பெற்று, ஹரித்வாரம் கும்பமேளத்தில் வேதக்கொடி நாட்ட ஜீமூதமாகச் சென்றார்.

## 31. கும்பமேளத்தில் சத்தியக்கொடி

12—3—1867; தயானந்தர் ஸப்தஸ்ரோவரில் பத்துக் குடில்கள் கட்டி, பதினறு துறவிகளுடன், பாகண்ட கண்டனக் கொடி நாட்டினர். அந்த ஊர் ஹரித்வாரத்திலிருந்து ஆறுமைலில் உள்ளது. சுவாமிகள் அங்கே வந்த பெருவாரியான கூட்டங்களுக்கு வேத உண்மையை கர்ஜித்தார். ஹிந்து தருமத்தில் படர்ந்த போலி நடைகளைக் கண்டித்தார். உரு வணக்கம், அவதாரவாதம், கிருஷ்ணலீலை, நெற்றிப் பூச்சு, யாத்திரைகள் எல்லாம் மூடக்

கொள்கைகள் என்று தைரியமாக விளக்கினார். "மூடக் கொள்கைகளை ஒழியுங்கள்; உண்மையை அறியுங்கள்" என்று ஏராளமான அறிக்கைகளை விநியோகித்தார். அனார்ஷ நூல்களைத் தூக்கியெறிந்து, ரிஷிவாக்குகளையே படிக்கச் சொன்னார். அன்பர் தரும் கனிகளையும் மிட்டாய்களையும், பொது ஜனங்களுக்கு அள்ளித் தந்தார். காசி பண்டிதர் விசுத்தானந்தர் புருஷஸூக்தத்திற்கு விளக்கம் சொல்லத் தொடங்கினார். "ப்ராஹ்மணஸ்ய முகம் ஆஸீத்..." என்று வரும் வாக்குகளுக்கு அவர் "பிராமணன் பிரம்மத்தின் முகத்திலிருந்து பிறந்தான், க்ஷத்ரியன் தோளிலிருந்து, வைசியன் தொடையிலிருந்து, சூத்ரன் காலடியிலிருந்து பிறந்தான்" என்று அர்த்தம் செய்தார். தயானந்தர் "ஐயா மூடும் வாயை; முகத்திலிருந்தும் காலிலிருந்தும் யாராவது பிறப்பதுண்டா? பிறப்பது யோனியிலிருந்துதான். இந்த வேத வாக்கின் பொருள் பிரம்மதேஜஸ் உள்ள அந்தணர் முகம்போல்வர், க்ஷத்திரியர் தோள் போல்வர், வைசியர் தொடைபோல்வர், சூத்ரர் கால்போல்வர்; இவர்களெல்லாரும் சமுதாய உடலின் பயனுள்ள அங்கங்களே" என்றார். மகாநந்தசாமி என்பவரை தயானந்தர் வேதமார்க்கத்தில் திருப்பினார்.

கும்பமேளக் கூட்டத்தில் ஹிந்துதருமம் எப்படி இழிந்து அழிந்துபோனது என்பதை அறிந்தார் தயானந்தர். துறவிகளிடையே போலித்தனமும், பித்தலாட்டமும், பிச்சைத்தனமும், மிரட்டலும் கண்டார். ஜனங்கள் மூடக் கொள்கைகளில் பிடிவாதம் கொண்டு, உண்மையை மறந்து, துன்மார்க்கத்திற் செல்வதைக்கண்டு வருந்தினார். கடவுளுக்கும் மனிதனுக்கும் இடையே எத்தனை விக்கிரகங்கள், எத்தனை அவதாரங்கள், குருபீடங்கள் எத்தனை போலிவேஷங்கள் மறைத்து நிற்கின்றன. குருவுக்கு குரு சண்டை, துறவிக்குத் துறவி பொறாமை; பண்டிதனுக்குப் பண்டிதன் மண்டைக்கருவம்பிடித்த தர்க்கவாதம். பொது ஜனங்களை இந்தப் போலிகள் கடவுள் பெயரால் கொள்ளையடித்தனர். சில சாமியார்களுக்கும் குருமாருக்கும் அழகான பெண்களே குறி; சிலருக்கு ஊரை ஏமாற்றிப் பணம் பிடுங்குவதே குறி; சிலருக்கு வாய்வேதாந்தம் பேசி வயிற்றை நிரப்புவதே வேலை. சிலருக்கு கிருஷ்ணலீலையே தொழில்...இப்படி இந்தியா வேத தருமத்தை மறந்து, படுமூடப்படுகுழியில் ஆழ்ந்து கிடப்பதைத் தவிர்க்க எழுந்த ஒரே ஒருவர் தயானந்தரே.

தயானந்தர் ஒரு நாள் கால நிலையைப் பற்றிப் பேசியபோது, கருணை மேலீட்டால் "ஸர்வம் வை பூர்ணம் ஸ்வாஹா" என்றார். இன்றுடன் எல்லாம் துறந்து வேத தர்ம பிரசாரமே செய்வேன். உண்மைக்கே உயிர்ப்பேன்" என்றார். உடனே தம் கையிலிருந்த மஸ்லின், முப்பத்தைந்து ரூபா, மஹாபாஷ்யம் மூன்றையும் தயாராம் மூலம் குரு விரஜானந்தருக்கு அனுப்பினார். ஒரு கோவணம் கமண்டலம் தவிர மற்றதெல்லாம் உதறித்தள்ளினார். காற்றைப்போலச் சுயேச்சையாக தருமப் பிரசாரத்திற்குக் கிளம்பினார். மௌனமாயிருந்து பார்த்தார். ஆனால் அவதார லீலைகளையும் மூடக் கொள்கைகளையும் கண்டு மனம் குமுறி, மீண்டும் பொய்யைக் கண்டித்து, உண்மை முழக்கம் செய்யத் தொடங்கினார். அவர் மௌனமாயிருக்கப் பிறக்கவில்லை. ஜே ஜே என்று கும்பமேளக்கூட்டம்: காசி நாசிக், பூனா, நதியா முதலிய இடங்களிலிருந்து பெரிய பெரிய கோடையிடி புலவர்களும், துறவிகளும் வந்து கூடிய கட்டத்தில், உருவையும் குருவையும் கடவுளாகத்தொழுது காணிக்கை வைக்கும் கூட்டத்தில், மூடக் கொள்கைகள் நிரம்பிய பாமர ஜனக்கூட்டத்தில், ஞானமலைபோல் கம்பீரமான வேத ஒளியுடன் நின்றார் நமது சுவாமிகள்...சுவாமி விவேகானந்தர் சிகாகோவில் வெற்றிபெற்றதுகூட அதிசயமில்லை. அங்கே எல்லாரும் படித்தவர்கள். விஷயம் தெரிந்தவர்கள். இங்கே எத்தனையோ பொய் மூட்டைகளைக் கட்டிய போலிகளும், படிப்பில்லாத பாமர ஜனங்களும் கூடிய கும்பமேளத்தில் தயானந்தர் கம்பீரமாக வேதகர்ஜனை செய்து, அத்தனை பேர் உள்ளத்திலும் ஒரு புதிய உணர்ச்சியை உண்டாக்கியதே வியப்பாகும்!

"ஆரியவர்த்த மஹாஜனங்களே, வேதகாலத்தில் நீங்கள் இருந்த பெருமை யென்ன? இன்று நீங்கள் போன போக்கென்ன? உங்கள் கண்ணில் கண்மூடி நம்பிக்கைகள் கட்டப்பட்டுள்ளன. உங்கள் கைகால்களில் அடிமைச் சங்கிலி கனக்கிறது. நீங்கள் கல்வியில்லாமல், தக்க தொழிலறிவில்லாமல், உரிமையிழந்து, பெருமையிழந்து, தாழ்ந்து வருந்துகிறீர்கள். இனி நீங்கள் உய்யவேண்டுமானால், அச்சத்தை விடுங்கள், மூடப் பிடிவாதத்தை ஒழியுங்கள். போலித் துறவிகளை நம்பாதீர்கள். அவதாரப்புரட்டுகளை அடியோடொழியுங்கள். சிம்மம் போலத் தலை நிமிர்ந்து, வேதகர்ஜனை செய்யுங்கள். சத்திய தருமத்தைப் பரப்புங்கள். துர்பலத்தை நீக்கி, ஆத்ம பலமும், தேக பலமும் பெறுங்கள், பிரம்மசரியம் காத்து வீறுபெற்றுக் கல்வியும் கலையும் தேர்ந்து,

கர்ம வீரர்களாக, ஞான தீரர்களாக வாழுங்கள்." என்று இடி முழக்கம் செய்தார். பலர் சீறிச் சதி செய்தனர். பலிக்கவில்லை. சிலர் உண்மை யுணர்ந்து வேதமார்க்கத்தை அறிந்து நடக்கத் தொடங்கினர்.

## 32. கங்கை வழியே

உடலை ஆட்டும் வட இந்தியக் குளிரில், ஒரு கோவணத்துடன், நமது வீரத்துறவி கங்கைக்கரை வழியாக நடந்தார். அவர் யாரையும் உணவு கேட்பதில்லை. பசித்தால் தியானத்தில் உடலை மறந்துவிடுவார். ஒரு தரம் மூன்றுநாள் பசியுடன் இருந்தார். ஒரு விவசாயி மூன்று கத்தரிக்காய் தந்தான்; அதை உண்டு அந்த ஊர் ஜனங்களுக்குத் தருமோபதேசம் செய்தார். மற்றொருநாள் முஜாபர் நகரில் இரண்டு நாட்கள் பண்டிதர்களுடன் வாதாடிவிட்டு முகம்மது புரியில் புத்தரைப்போல் ஓர் அரசமரத்தடியில் தியானித்தார். பிறகு குருமுக்தேச்வரத்திற்கு வந்தார். ஆற்று மணலில் தியானத்தில் படுத்திருந்தார். மூன்றுநாள் அன்னபானமில்லை. மூன்றும் நாள் ஒருவர் தந்த பாதி சப்பாதியை உண்டு பசி தீர்ந்து, கர்ணவாசத்திற்குச் சென்றார். அங்கே சில சாதுக்கள் பாமர ஜனங்களுக்கு "கம்பனியும் பயனில்லை; சிந்தியாவும் உதவாக்கரை; நன்றாய் உண்டு குடித்து புகைப்பிடித்து பகவரைக் கொல்லு" என்ற பொருள் உள்ள ஹிந்தி மந்திரத்தை உபதேசித்தனர். இந்தக் குரு உபதேசத்தால், பலர் குடிக்கவும் கஞ்சாப் போடவும் தொடங்கினர். தேசத்தை அடிமைத்தளையிலிருந்து நீக்கமட்டும் யாரும் முன்னுக்கு வரவில்லை. நானாசாகெபு இரத்தப் போர் புரிந்து சுதந்தரத்தை நாட்ட முயன்றபோது, இந்த பங்கிமிய்யா சாதுக்களெல்லாம் இருந்த இடம் தெரியவில்லை."ஊர்ச் சோற்றைத் தின்று பங்கியடிப்பது, துறவா? பிரம்மசாரியக்கல்வி கற்று, தீரனுவதே தேசத்திற்கு நன்மை" என்று தயானந்தர் உபதேசித்தார். அந்த ஊரில் வைதிகப் பிராமணர் மற்ற வகுப்பினரை "வேதம் படிக்கக்கூடாது, கேட்கக்கூடாது, பூணூல் போடக்கூடாது, க்ஷத்திரியர் கூடக் கலியாணத்தின்போதே பூணூல் போடவேண்டும்" என்று சொல்லிப் பூணூல் ராஜ்யம் செலுத்தியதைப் பலமாகக் கண்டித்தார். பருகாபாதில் சுவாமிகள் கேள்விகளுக்கு ஆணித்தரமான பதிற் சொல்லி, விக்கிரக ஆராதனையைக் கண்டித்தார். சிலர் சூரியநமஸ்காரம் கங்காபூஜை முதலியவை தெய்வபூஜையாகும் என்று வாதாடினர். தயானந்தர் கங்கையின் பெயரால் பண்டாக்கள் பண்ணும் அக்கிரமங்களைக் கண்டித்தார். சூரியன் கங்கை எல்லாம் ஜடம்; கடவுள் சைதன்யம். சைதன்ய

வஸ்துவைத்தான் வணங்க வேண்டும் என்று உபதேசித்தார். அதைக்கேட்ட சிலர் வேதமந்திரங்களால் பரமாத்மனை உபாசித்து, ஜடப்பொருள் வணக்கத்தை ஒழித்தனர். புராணப் பொய் மூட்டைகளை சுவாமிகள் பலமாகக் கண்டித்து, அவற்றால் வந்த போலித்தனங்களையும் மூடக்கச்சந்திகளையும் அம்பலமாக்கி, எல்லாரும் பரிசுத்தமான வேதோபநிஷத்து வாக்குகளையே கற்று நிற்கச் செய்தார்.

நந்தராம் என்ற நாத்திகன், ஜனங்களுக்கு, சாமி இல்லை, வேதம் பொய் என்று மேடையதிரப் பேசி வந்தான். அவனை அடக்கத் தயானந்தர் இக்கரைக்கு வந்தார். ஆள் அக்கரைக்கு ஓடி மறைந்தான். கடவுளுண்மையும், வேத நெறியும் விளக்கி, தயானந்தர் மறுபடியும் பொது ஜனங்களுக்கு உறுதிவரச் செய்தார். ஜனங்களும் அரண்டகுள்ளி நந்திராமைக் குப்பைபோல் ஒதுக்கித் தள்ளினர்.

டீகாராம் என்னும் கோயில் பூசாரி சுவாமிகளின் வேத விளக்கத்தைக் கேட்டதும், உருவணக்கத்தை விட்டொழித்து அருவாக இறைவனைத் தியானித்தார்.

பகவன்தாஸ் என்பவர் தயானந்தரின் உரு-மறுப்பை வெறுத்தார்; அவர் சில நாட்கள் தயானந்தருக்கு உணவு தந்தார்; அதை நிறுத்தி விட்டார்; அம்பாதத்தர் என்ற புலவரை வாதாடச் சொன்னார்; புலவர் வாதம் தயானந்தரிடம் பலிக்க வில்லை. புலவர் உண்மை யறிந்து பணிந்து வேதத்தையே பின் பற்றத் தொடங்கினார். ஏராளமான க்ஷத்ரியருக்கு சுவாமிகள் பூணூல் போட்டு காயித்திரி மந்திரமும் உபதேசித்து வேத தர்மத்தை அனுஷ்டிக்கச் செய்தார். ஒரு இஸ்லாமியர் "நானும் ஹிந்துவாக முடியுமா?" என்று கேட்டார் "அஹா! நீரும் வேதத்தை நம்பிப் பின் பற்றினால் ஹிந்துவாகலாம்" என்றார்.

## 33. ஓர் அறை விட்டார்

சுவாமிகள் கர்ணவாசத்திலிருந்து சாசிக்கு வந்தார். ஓங்கார் தாஸ் என்ற பயில்வான் அவர் காலைப் பிடித்துவிட விரும்பித் தன் முழுப்பலத்தையும் வைத்து அழுத்தினான். அவன் பலம் அந்த இரும்புரன் பெற்ற வலிய கால்களைத் தூக்கக் கூட முடியவில்லை; தசைகள் இறுகிப்பருத்திருந்தன.

கங்காப்பிரசாது என்பவர் அங்கே பலருக்குப் பூணூல் மாட்டி விட்டார். சுவாமிகள் "வேத நம்பிக்கையும் சந்தியா உபா

சனையும், நல்லொழுக்கமும் கொண்டவருக்கே பூணூல் தகும். தகுதியில்லாமல் சும்மா நூலை மாட்டுவதிற் பயனில்லை" என்றார். கையில் கங்கணமும், கழுத்தில் தாவடமும், நெற்றிப்பூச்சும் அனாவசியமான ஆடம்பரங்கள் என்று விளக்கினார். பலர் இவற்றை நீத்தனர்,

வந்தான் ஓர் ஏகாத்மவாதி :—சந்திர சிங். "நான் ஆன்மா; நானும் கடவுளும் ஒன்று. கடவுள், உலகம் நான் எல்லாம் நானே. நீரும் நானும் ஒன்றே. எல்லாம் பிரம்மமே" என்று சள சளத்தான். சுவாமிகள் "அப்பா நீயே கடவுளானால், கடவுள் செய்யும் ஐந்தொழிலையும் செய்வாயா?" என்று கேள்வி கேட்டு மடக்கினார். ஆள் இன்னும் "யான்யாரோ அவனே நீ; அவனே கடவுள்" என்று கல கலத்தான். இனிப் பேச்சில் பயனில்லை என்று சுவாமிகள் அவனுக்கு ஓர் அறை கொடுத்தார்; ஆளுக்கு ரோஷம் வந்தது "ஹூம் என்னையா நீர் அடித்தீர்—சும்மா விடுவேனா உம்மை? நீர் யார் என்னை அறைய?" என்று கிளம்பினான். "ஐயா, பிரம்மம் பிரம்மத்தை அடித்தது. நீயே நான் நானே நீ என்றீரே; அப்படியானால் அடித்த நானும் அடிபட்ட நீரும் ஒன்றே;" என்று ஏகான்மவாதத்தைக் குத்திக் காட்டினார். அந்த அறை ஆளை மாற்றியது. நானே கடவுள் என்பதை அவன் விட்டு "கடவுள் கடவுளே; அவனருளால் நான், நீ, உலகம் எல்லாம் உள்ளன" என்றுணர்ந்து, நல்ல மாணவனானான்.

அங்கே ஒரு பஞ்சு வியாபாரி "சாமி, நான் படிப்பில்லாதவன்; எனக்கும் கதி மோட்சமுண்டா?" என்று கேட்டான். "படிப்பைப் பற்றிக் கவலையில்லை, நேர்மையாயிரு; யாரையும் ஏமாற்றாதே; கடவுளை நம்பு; ஒழுங்காக நட; பரோபகாரம் செய்; உனக்குக் கதி மோட்சம் உண்டு" என்றருளினார் சுவாமிகள்.

சுவாமிகள் உள்ளும் புறமும் தெளிவானவர்; களவற்ற படிகம் போன்றவர்: தியான சீலர். அவர் மரத்தடியிலேதான் பெரும் பாலும் தங்கியிருப்பது; தியானத்தில் ஆழ்ந்திருப்பார்; வேத தர் மத்திற்கு விரோதமான செயலைக் கண்டால், உடனே பாய்ந்து சென்று கண்டித்துத் திருத்துவார்.

## 34. இருபது மணங்கு

பிரம்மசாரி க்ஷேமகரணர் விக்கிரகங்களில் மோகம் கொண்டவர்; அவர் இருபது மணங்குள்ள உருக்களை ஒரு குதிரைமேல் ஏற்றிச் சென்று, போனவிடமெல்லாம் பூஜை ஆராதனை தடபுடலாகச்

செய்து வந்தார். அவரிடம் ஏராளமான சிவலிங்கங்கள் இருந்தன. ஒரு நாள் மஹாதேவர் ஆலயத்தில் அவர் நமது சுவாமிகளுக்கு பிக்ஷை செய்தார். சுவாமிகள் "பிரமசாரியே, உனக்கேன் இந்தச்சுமை? இத்தனை கற்களையும் செம்புருக்களையும் குதிரைமேல் ஏற்றிக்கொண்டு ஏன் அலைகிறாய்? இதனால் இம்மியும் பயனில்லை; காலத்தை இதில் வீணாக்காதே; வேத தர்மத்தைக் கற்று நட; உரு வணக்கம் அவதாரம், தலயாத்திரை, முதலியவை மூடக் கொள்கைகள்" என்று விளக்கினார்.

கிருஷ்ணானந்தர் என்ற துறவி, சுவாமிகளை எதிர்த்து வாதாடினார். துறவி "என்ன அப்படிச் சொல்லுகிறீர்; 'தர்மம் தாழ்ந்து அதர்மம் மிஞ்சிய போதெல்லாம், நானே அறத்தை உய்விக்க வருகிறேன்' என்று பகவான் கீதையில் சொல்லியது பொய்யா? அவதாரம் உண்மை. அவதாரம் எப்போது உண்மையோ, அப்போது அர்ச்ச வடிவுகளும் உண்மையே" என்று வாதாடினார். சுவாமிகள் "துறவியே, கடவுள் பிறப்பதில்லை, இறப்பதில்லை; அவர் ஒப்புயர்வற்ற ஒருவர் என்றால், எப்படி ஒருத்தி வயற்றில் கருவாகி வளர்ந்து பிறக்க முடியும்? உடலில் வருவதும் போவதும் ஆத்மா. பரிசுத்தமான ஆத்மாக்களே கடவுள் அருளால் உலகிற்குப் பொது நலம் செய்கின்றனர்; கடவுள் ஒன்றே; அதற்கு நாமரூபபேதமில்லை. ஆகாசம்போல் அஃது எங்கும் நிறைவு. அதைச் செம்பிலோ மண்ணிலோ உருச் செய்து வணங்குவது முழு மூடத்தனம்" என்றார். துறவி திருந்தினார்; பிரம்மசாரியும் உண்மையை உணர்ந்து தன் லிங்கங்களையும் விக்கிரகங்களையும் கங்கையில் வீசியெறிந்து, இருபது மணங்கு பாரத்தை ஒழித்து, விடுதலை பெற்றான்.

## 35. அறிந்த துறவி

அனுப் ஷஹர் ஹரிவல்லபர் என்றால் சாமானியம் அன்று— மணங்குக் கணக்காக அவரிடம் விக்கிரகங்கள் உண்டு. அத்தனையும் வண்டியில் ஏற்றி வந்து, ஒரு சிம்மாசனத்தில் வைத்து,தடபுடலாக பூஜை நடத்தி, இந்தச் சந்நிதியில் வாதாடுவோம் வாரும் என்று தயானந்தரை அழைத்தார். இரண்டாயிரம் ஜனங்கள் முன், ஆறு நாள் விவாதம் நடந்தது. ஹரிவல்லபதாஸ், புராண மழை பொழிந்து தீர்த்தார். சுவாமிகள் வேத மழை பொழிந்து, "புராணப் பொய்களை நம்பாதீர்; உருத்தொழுகை மூடக் கொள்கை, வாமாசார—தாந்திரம் ஆபாசக் களஞ்சியம்; கட்குடி, கைக்குடி, விபசாரம், திருட்டு, பொய், வஞ்சம், சூது, போலித்

தனம்—இவையெல்லாம் ஒழிக! வேத உண்மை விளங்குக'' என்று விறு விறுப்பான சமுஸ்கிரதத்தில் பேசினார். "உமக்கேன் சுவாமி இந்த வம்பெல்லாம். நீர் சாது; சும்மா இருமே; யார் எக் கேடு கெட்டாலென்ன?'' என்றார் புலவர் இந்திரமணி. "அறிந்த துறவிகள் சும்மா இருந்துதான் நாடுகெட்டது. வேத தருமத்தை மறைத்து மூடக் குப்பைகள் குவிந்தன. அவற்றை ஒழித்து, மீண்டும் தூய உண்மையை விளக்குவது நமது கடமை. கடமையைச் செய்வது துறவிக்குப் பெருமை'' என்றார் தயானந்தர்.

டாகுராணி ஹம்ஸா என்ற விரதசீலை, சுவாமிகள் உபதேசங்களை உணர்ந்து, உருவணக்கத்தை விட்டாள். அவளுக்கு சுவாமிகள் காயத்திரி மந்திரத்தை உபதேசித்தார். பெண்களும் யக்ஞோபவீதம் தரித்து, காயத்ரி ஜபம் செய்யச் சொன்ன மகான் தயானந்தரே. யோக பலத்தினாலும் தேகபலத்தினாலும் சுவாமிகளின் எழில் பெற்ற தோற்றமும், எளிய வாழ்வும், குளிர் வெயிலைத் தாங்கும் வைராக்கியமும், வேத ஞானமும், வீர வுறுதியும் கண்டு வியக்காத நல்லாரில்லை.

வெள்ளைக்கார கலெக்டர்களும், பாதிரிமாரும் கோவணந் தவிர வேறொன்றும் அணியாத சுவாமிகள், குளிரை எப்படித் தாங்குகிறார் என்று வியந்தனர். சுவாமிகள் முழங்காலில் கட்டைவிரலை அழுத்தினார்; வேர்வை சொட்டியது. யோக சக்திக் கனலால் குளிரையும் பனிவாடையையும் சுவாமிகள் வென்றார். கலெக்டர்களும் வெள்ளைப்பாதிரிகளும் சுவாமிகளின் வைராக்கியத்தைக் கண்டு வியந்தனர். ஒழுக்கம் என்றால் தயானந்தரே. அவர் மனமொழி மெய்த்தூயர், எளிய, நேரிய வாழ்வினர். அவாவற்ற செல்வர்.

நந்தகிஷோர் என்னும் அன்பர், சுவாமிகளுக்கு அழகான மலர்கள் கொண்டுவந்தார். சுவாமிகள் "இவை திருட்டுப் பூக்கள்; எனக்குதவா'' என்றார். அன்பர் மறுத்தார். "தோட்டக்காரன் உத்தரவில்லாமல், நீ இம்மலரைக் கொய்தாயல்லவா?'' என்று மகான் கேட்டு விட்டார். "ஆம்'' என்று ஒப்புக்கொண்டார் அன்பர். "இந்த மலரால் ஏழைத் தோட்டக்காரன் பிழைக்க வேண்டும்; அவனைக் கேளாமல் நீ பறித்தது, கொள்ளையாகும்; பதுரும்பானாலும் பிறர் சொத்தை நாம் தொடக்கூடாது'' என்று உபதேசித்தார் மகான்.

## 36. முரடர் கொடுமை

உண்மையை உண்மை, பொய்யைப் பொய் என்று கூறும் வீறுபடைத்தவர் தயானந்தர். 1863-சித்திரையில், அவர் ஸோரன் என்ற வராஹ மூர்த்தி தலத்திற்கு அருகே யிருந்த காடியா கட்டத்திற்கு வந்தார். அது பெரிய விஷ்ணுஸ்தலம். பட்டை நமாங்கள் ஏராளம்! அங்கே பலதேவகிரிகோசாயி பிரபல பக்தர், பலவான். அவர் சுவாமிகளைக் கண்டு வணங்கி, பிக்ஷையும் செய்தார். சுவாமிகள் அவருக்கு பாகவதப் புராணங்களை எடுத்து விளக்கி, வேத தர்மத்தை உபதேசித்தார். அது உதிசா டாகுருக்குப் பிடிக்கவில்லை. டாகுர் நிம்பார்க்க தாஸர், பாகவதத்தைக் குறைகூறும் தயானந்தரை வெட்டிக் கொல்ல அவர், வாளுடன் மூன்று முரடரை அழைத்துவந்து மிரட்டினார். சுவாமிகளைக் கண்டபடி வைது, கடுஞ்சின வாளை ஓங்கினார். சுவாமிகள் எழுந்து அடுத்த அறையிற் புகுந்தார். டாகுர் பலதேவகிரியைத் தாக்கினார். பலதேவர் பலதேவரே—சரியான பயில்வான்! டாகுரை ஒரேயடியாகத் தூக்கி ஆற்றில் தள்ளினார். முரடரை முதுகில் பலமாகக் குத்தி விரட்டினார். முரடர் ஓட்டமெடுத்தனர். டாகுர் ஆற்றில் நீந்திவந்து மறுபடியும் வாளைச் சுழற்றினான். இதற்குள் ஜனங்கள் வந்து தடுத்து, டாகுரைக் கண்டித்தனர். சுவாமிகள் பலதேவரின் வீரத்தைப் புகழ்ந்து "பகைவனை அடக்க பலம் வேண்டும்; க்ஷத்திரிய பலம் வேண்டும்" என்றார். ஆம், பலம் வேண்டும்; தர்ம விரோதிகளை, பொறாமைப் பேய்களை, ஆததாயிகளை அடித்து வீழ்த்தும் சக்தி நமக்கு வேண்டும். வீட்டில் புகுந்த விஷப் பாம்பை நசுக்கி யெறியத் திறன் வேண்டும். தயானந்தர் வீர தீரராக விளங்கி, பலத்திற்கு வழி காட்டினார்.

சாஸ்திர வாதத்திலும் சரி தேக பலத்திலும் சரி, தயானந்தருக்கு இணையில்லை.

அங்கதராமன் என்ற சாஸ்திரி அவருடன் இலக்கண—வாதம் புரிந்து தோற்றுச் சீடரானார். பலதேவகிரி சுவாமிகளின் பேரன்பராகி அரிய துணை செய்தார். அங்கதராம் சுவாமிகளுடன் மஹாபாரதம் படித்தார். சுவாமிகள் பல இடைச் செருகல்களை எடுத்துக் காட்டினார். சுவாமிகளின் அரிய ஆராய்ச்சிகளை அங்கதராம் போற்றினார். அவர் கொள்கைகளை சுலோகமாகப் பாடினார். ஒரு சுலோகம் அடியில் வருமாறு :—

ருத் ராக்ஷ துளஸீ காஷ்ட
மாலா திலக தாரணம் |
பாஷண்டம் விஜா நீயாம்
பாஷாணாதி கார்Sசனம் ||

(உருத்திராக்ஷம், துளஸீமாலைகள், நெற்றிப்பொட்டு வைத்தல், கல்லைக் கடவுளென்று வணங்குதல் இவையெல்லாம் அநாசரிகம், பாகண்டம்.)

## 37. வாளை முறித்தார்

வைஷ்ணவ குருவான அரங்காசாரி ஜனங்களுக்கு நாமம் போட்டு, சிஷ்யர்களாக்க அந்தப் பக்கம் பிரசாரம் செய்து வந்தார். ஆனால் தயானந்தர் வந்ததும் பிரசாரத்தை நிறுத்தி, அவர் இருக்கும் ஊருக்கே வருவதில்லை. ஆனால் அவர் சிஷ்யர்கள் தொல்லை செய்தனர். ஆசாரியின் சிஷ்யர் கரண்சிங் ஒரு நாள் வந்து "ராமலீலை நடக்கிறது. சுவாமிகள் வரவேண்டும்" என்று அழைத்தான்.

சுவாமிகள்: "அப்பனே நீ க்ஷத்ரியனானால் இந்தப் பொம்மலாட்டத்தைப் பொறுப்பாயா? உன் முன்னோரான ராம லட்சுமணர் இப்படிப் பொம்மையாகி, தைதா என்று கூத்தாடுவது என்ன அவமானம்! வீரனாகிய நீ மூடக் குப்பையில் விழுவாயா? உனது நெற்றியில் பட்டை நாமம் போடுவதேன்?" என்று கண்டித்தார்.

சிங்: "நான் வைஷ்ணவன்; ஸ்ரீ சூர்ணம் திருமண் இடாதவன் சண்டாளன்.

சுவாமிகள்: அப்படியானால் உன் அப்பன் வைஷ்ணவனில்லை; உன் பாட்டன் பட்டை நாமம் போடவில்லை; அவர்கள் சண்டாளர்களா?

கரண்சிங்கிற்குக் கோப வெறி ஏறியது. "ஹா என் திருமண்ணையும் முன்னோரையும் பழிக்கிறாயா? உன்னை வெட்டிப் போடுகிறேன்" என்று கண்டபடி திட்டிக் கத்தியை உருவி ஓங்கினான்.

சுவாமிகள்: அப்பனே, நீ சண்டை போட வேண்டுமானால் ஜெயபூர்—ஜோட்பூர் ராஜாக்களுடன் வாள் வீசு; உண்மைப் போர் புரிய வேண்டுமானால், உன் குரு ரங்காசாரியை அனுப்பு. வாதாடுவோம். நான் அஞ்சா உண்மையே பேசுவேன்; அதற்

காக நீ என்னைக் கொல்ல விரும்பினால் உன் வாளை வீசு........." என்றார்.

காண்சிங் கண்கள் சிவந்தன; வாய் வசைமாரி பொழிந்தது. "நீ போலி, பாஷண்டன்; உருவணக்கத்தையும் ஸ்ரீ சூர்ணத்தையும், வைஷ்ணவ சம்பிரதாயத்தையும் பழிக்கும் அதிகப் பிரசங்கி; இதோ என் குருவின் பெயரால் உன்னை ஒழிக்கிறேன்" என்று கழுத்தில் குறி வைத்து வாளை வீசினான். சுவாமிகள் "அப்படியா" என்று சிங்கம்போல் எழுந்தார். மின்வேகத்தில் வாளைப் பறித்தார். இரண்டு துண்டாக ஒடித்தெறிந்தார்—சுவாமிகளின் பலத்தையும் தைரியத்தையும் கண்டவர் வியந்தனர். காண்சிங்கைக் கண்டித்தனர். அவன் மேல் போலீஸில் புகார் செய்ய வேண்டினர். "அவன் என்னைப் புண்படுத்தவில்லை; க்ஷத்திரியன்; அவன் கடமையைச் செய்தான்; பிராம்மணன், என் கடமையைச் செய்தேன்; பொறுப்பது சிறப்பு—அறமே என்னைப் பாதுகாக்கும்.

தர்ம ஏவ ஹதோ ஹந்தி
தர்மோ ரக்ஷதி ரக்ஷித: ।
தஸ்மாத் தர்மோ நஹந்தவ்யோ
மாநோ தர்மோ ஹதோவ்யதீத் ॥

கொலைகாரனை தர்மமே கொல்லும்; காப்பவனை அறமே காக்கும். அறத்தை யாரும் அழிக்க முடியாது" என்ற சுவாமிகள் உபதேசத்தைக் கேட்டு, எல்லாரும் வியந்து நின்றனர். காண்சிங் வீடு சென்றதும் காய்ச்சலாய்ப் படுத்தான். சினமும் ஆத்திரமும் உடல் நலத்தைக் கெடுத்தன. "சுவாமிகளுக்குச் செய்த அபசாரமே இப்படி வந்தது" என்றனர் பண்டிதர்கள். காண்சிங் தன் குற்றத்தை உணர்ந்தான். சுவாமிகளுக்கு மிட்டாய்கள் அனுப்பினான்; அவர் அனைத்தையும் திருப்பி யனுப்பினார்; மனச்சாட்சி அவனைக் குத்தியது; ஆனால் மூடப் பிடிவாதம் இன்னும் சின வாளைப் பிடித்துச் சதி செய்தது.

சரத்பூர்ணமியன்று காண்சிங் கங்கா ஸ்நானம் செய்யப் போனான். சுவாமிகள் பெரிய கும்பலுக்கு முன் வேத உண்மைகளை விளக்கினார். ஹிந்து மதத்தில் படர்ந்த மூடக் கொள்கைகளையும், அவதாரப் பொய்களையும், உருவணக்கத்தின் அநாகரிகத்தையும், போலிகளின் ஆஷாடபூதித் தனத்தையும் பலமாகக் கண்டித்துப் பேசினார். சிலர் மதித்தனர்; சிலர் கொதித்தனர்; காண்சிங் எரியலையானான்; சுவாமிகளை நேரே எதிர்க்கத் தைரிய

யில்லை. சில பைராகிகளை ஏவி, அவரைக் கொல்லத் தூண்டினான். பைராகிகள் மறுக்கவே, மூன்று முரடரை வாளுடன் அனுப்பி; அவர் கழுத்தை வெட்டச் சொன்னான். முரடர் நள்ளிரவில் வந்தனர். காவற்காரன் உறங்கினான். சத்தம் கேட்டு சுவாமிகள் எழுந்து வந்தார். "ஹூம்" என்று உறுமினார். அதுவே போதும்; கொலைகாரர் குண்டோட்டமாக ஓடினர். அவரை அணுக அவர்களுக்குத் தைரியமில்லை.

காவற்காரன் கேதார்சிங், "சுவாமி. இந்த இடத்தை விடுப் போவது நல்லது; இது சதிக்காடு" என்றான். சுவாமிகளோ "அச்சமில்லை; சாதுகள் வீடுகளிலும் முழைகளிலும் பதுங்குவதில்லை; கடவுள் அவர்களைக் காப்பார்.

நைநம் சிந்தந்தி சஸ்த்ராணி
நைநம் தஹதி பாவக: |
நசைநம் க்லேதயந்தி ஆப:
ந சோஷயதி மாருத: ||

ஆத்மாவை அம்புகள் சிதையா, தீ எரிக்காது, நீர் நனைக்காது காற்று உலர்த்தாது" என்றார். கேட்டவர் இத்துறவியின் நெஞ்சுரத்தைப் பாராட்டினர். எனினும் காட்டுமிராண்டிக் கொலைகாரரிடமிருந்து சுவாமிகளை பாதுகாக்க முயன்றனர். கரண்சிங்கைக் கண்டித்து, ஊரைவிட்டுப் போகச் சொன்னார்கள். அன்பன் கிஷன்சிங்" நான் க்ஷத்ரியன்; நீ க்ஷத்ரியனானால் வாடா !. உருவுவாளை ஒரு கை பார்ப்போம்" என்று மீசை முறுக்கினான். சுவாமிகள் இடைபுகுந்து, "க்ஷத்திரியரும் க்ஷத்திரியரும் எனக்காகச் சண்டை போட நான் விரும்பவில்லை" என்று சமாதானம் சொன்னார். "இங்கிருந்தால் உதை தவறாது" என்று சிலர் மிரட்டினர்; நிலைமையை உணர்ந்து கரண்சிங் ஊரைவிட்டே ஓடினான். சுவாமிகள் கர்ணவாசத்தில் ஐந்து நாட்கள் வேத உண்மையைப் பிரசாரம் செய்து, சார்தோலுக்குச் சென்றார். அங்கிருந்த க்ஷத்திரியர் சுவாமிகளின் சிஷ்யரானார்கள்.

## 38. பிச்சைக்கு வரவில்லை

சுவாமி கைலாச பர்வதம் ஆக்ராவில் தயானந்தருடன் இருந்தவர்; அடக்கமான ஞானி. அவர் ஒரு குகையில் இருந்தார். தயானந்தர் அவரைக் கண்டு, "ஹே! கைலாச பர்வதமே, நீ ஒரு குகையில் எப்படி அடங்கிக் கிடக்கிறாய்—வா வெளியே" என்றார்.

கைலா : வெளியே வேலை யென்ன ? உள்ளே லயிப்பதே இன்பம்.

சுவாமி : கைலாசமே, எழுந்து நில் ; வா ; வேத தருமம் பாழானது ; போலி மதங்களின் அட்டூழியம் ஆரிய நாட்டைப் பாழ் படுத்தியது. ஆஷாடபூதிகளும், வேஷதாரிகளும், வஞ்சப் பதர்களும் ஜனங்களின் மதியை மயக்கி, வயிற்றை வளர்க்கிறார்கள். இவர்களை அடியோடொழித்து, வேத தருமத்தை நிலை நாட்ட எனக்குத் துணை செய்ய வா.........பருவதமே.

கைலா : ஊஹூம் ! நமக்கேனையா இந்த வம்பு ; யார் எக் கேடு கெட்டாலென்ன ? உமது வேத ஞானத்தையும், துறவையும், வைராக்கிய சீலத்தையும் நான் போற்றுகிறேன். ஆனால் பிறரைக் கண்டிப்பது நம் அமைதிக்குக் கெடுதல். அதில் நான் தலையிட மாட்டேன்!

சுவாமி : அப்படியானால் பருவதமே, தலையை உள்ளே இழுத்துக் கொண்டு குகையிலேயே கூகை போல் ஒளிந்து கொண்டிரு ; நான் போகிறேன்.

கைலா : சுவாமி, பிக்ஷை சாப்பிட்டுச் செல்லலாம்.—தயவு செய்யுங்கள்.

சுவாமி : பருவதமே, உன்னிடம் பிச்சை கேட்க நான் வரவில்லை ; வேத தர்மத்திற்காக உன் உதவியைக் கேட்க வந்தேன் ; தர்மப் பிரசாரத்திற்கு உதவாத துறவியால் ஒரு பயனுமில்லை. நான் சென்று வருகிறேன்.

அத்துடன் சுவாமிகள் தமது கடமையைப் பார்க்கச் சென்றார். கைலாச பருவதமும் முழையில் முடங்கி அடங்கியது.

ஊருக்குள் சென்றதும் சுவாமிகள் ஒரு கூட்டத்தில் வேதப் பிரசாரம் செய்தார்.

" சந்நோ தேவி ரபிஷ்டயே " என்ற மந்திரத்தை விளக்கி, விக்கிரகாராதனையைக் கண்டித்தார். கேட்ட சிலர் உருவணக்கத்தை விட்டனர். சுகானந்த அயோத்யாப்ரசாது என்னும் அறிஞரும் இன்னும் பலரும், விக்கிரஹங்களை கங்கையில் விட்டெறிந்து, வேத மந்திரங்களால் நிர்க்குணப்ரம்மோபாசனை செய்தனர். இவ்வாறு பொதுஜன வாழ்வில் வேத தர்மானுஷ்டானத்தைத் தூண்டிக்கொண்டே, சுவாமிகள் சபாஷ்பூருக்கு வந்தார் (11—9—1868). அப்போது தமது குரு விரஜானந்தர்

இறந்த செய்தி கேட்டு, "ஆரியாவர்த்தத்தின் வியாகரண சூரியன் அஸ்தமித்ததே" என்று வருந்தினார். விரஜானந்தரின் கட்டளையை நிறைவேற்ற இன்னும் தீவிரமாக முயன்றார். வேதப் பிரசாரம் செய்யாமல், ஊர்ச் சோற்றைத் தின்று, பங்கியடித்து, வாழ்வையே சோம்பேறி மடமாக்கும் போலித் துறவிகளையும், மதத்தின் பெயரால் ஆடம்பரம் செய்து, உலகை ஏமாற்றும் சம்பிரதாயிகளையும், அவதார வாதிகளையும் மூடக் கொள்கைகளையும் பலமாகக் கண்டித்தார். இரண்டு முரட்டுப் பயிராகிகளுக்கு ஆத்திரம் வந்து விட்டது. அவர்கள் கங்காசிங்கிடம் "ஐயா! கொடுங்கள் வாள்; இந்தச் சாமியாரை வெட்டிச் சாய்க்கிறோம்" என்றனர். கங்காசிங் சுவாமிகள் சொல்லுவதெல்லாம் கண்ணுக்கு மெய்யாகக் காணும் உண்மைகளே; உள்ளதைச் சொன்னால் உடம்பெரிச்சல்தான். அதற்கென்ன செய்வது? நமது சமுதாயத்தில் படிந்த குறைகளை அவர் ஒருவரே எடுத்துக் காட்டுகிறார். எத்தனையோ மடாதிபதிகளும், பீடாதிபதிகளும் சுகமாக, பொது ஜனங்களின் பணத்தை அனுபவித்து உண்டுறங்கித் தமக்கே வாழ்கிறார்கள். தயானந்தர் ஒருவரே முற்றிலும் சுயநலமில்லாமல் பிறர்க்கென்று வாழ்கிறார். அவரை ஏன் கொல்ல வேண்டும்? உங்கள் பொய்யையும், போலித்தனங்களையும் கொல்லுங்கள். இனி இப்படி சுவாமிகளை தூஷித்தால், உங்கள் தலை கீழே உருளும்; கபர்தார்" என்று கண்டித்தார். பைராகிகள் பின்னும் சூழ்ச்சி செய்தனர்.

கங்காசிங், இன்னொரு க்ஷத்திரியருடன் சுவாமிகளுக்கு விஷயத்தைச் சொல்லி, அவர் உயிருக்கு ஆபத்து வராமல் காவல் காத்தார். மயாராம் உதாசி, "உமக்கேன் சுவாமி உலகோர் வம்பு? நீரேன் உருவணக்கத்தையும், அவதாரத்தையும், நெற்றிப் பூச்சையும், தாவடத்தையும் கண்டித்து ஆபத்தில் மாட்டிக் கொள்ள வேண்டும்? பேசாமல் என்னைப் போல் சுகவாசியா யிருமே" என்றார். "ஐயா, என் சுகம் வேதப் பிரசாரமும், அதற்காக உயிரைப் பலிதானமாக்குவதுமேயாகும்" என்றார் தயானந்தர்.

## 39. அஞ்சா நெஞ்சுரம்

சுவாமிகள் பத்து நாள் நரதொலியிலிருந்தார். உரு வணக்கத்தைக் கண்டித்துப் பேசினார். ராமபுரி கோசாயி போன்ற புலவர்களுடன் பலர் விக்கிரஹங்களையும், சாளக்ராமங்களையும் கங்கையில் எறிந்தனர். எங்கே திருநாட் கூட்டமானாலும் அங்கே தயானந்தர் சென்று, வேதக் கொடியை நாட்டினார். ஒரு

கோவணமே, அவர் அணி; வேத நூலே உடைமை; தரையே படுக்கை; சில சமயம் வைக்கோலைப் பரப்பி, அதன்மேல் படுப்பார்; நடுக்கும் குளிரிலும் போர்வையில்லை. தானாக வந்ததே உணவு; யாரையும் யாசிப்பதில்லை; சாதிபேதம் பார்ப்பதில்லை; பொதுக் கோயில் அல்லது மரத்தடிகளில் தங்குவது. சுவாமிகள் சகோடா மேளத்திற்குச் சென்றார். பலமாக வேதப் பிரசாரம் செய்தார். எல்லோரும் பிரசங்கம் கேட்டனர்; யாரும் பிக்ஷை செய்யவில்லை. ஆதலால் நாள் முழுதும் பட்டினியிருந்தார். மறுநாள் பலதேவ சிங் ஏதேச்சயாக உணவு கொண்டுவந்தார்; சுற்றியிருந்தவருக்கும் தந்து, சுவாமிகள் உண்டார். அப்போது ஒரு வெள்ளைப் பாதிரி சுவாமிகளுடன் வாதாடவந்து, கண்ட கேள்விகளை யெல்லாம் கேட்டார். சுவாமிகள் ஆணித்தரமாக பைபிளைக் கொண்டே பதிற் சொல்லி, எதிரியின் வாயை அடக்கினார். சில மௌல்விகள் வந்து வாதாடினர். தயானந்தரின் அருவணக் கத்தை அவர்கள் மெச்சிச் சென்றனர். உமாதத்தர், புராண தத்தர் போன்ற பண்டிதர்கள் பாரதம் மனுஸ்மிருதி முதலிய பழையநூற்கோட்பாடுகளுடன், விக்கிரகாராதனையைப் போற்றி வாதாடினர். தயானந்தர் வேத ஆதாரம் காட்டி, அவர்கள் வாயை அடக்கி வென்றார். அஹம்தொலி மௌல்வி சுவாமிகளின் ஞானச் செல்வத்தை வியந்து போற்றினார். ஒரு பாதிரி "ஐயா நான் பாபி; என் பாபத்திற்கு மன்னிப்புண்டா?" என்று வினவினான். பாபத்திற்கு மன்னிப்பில்லை. அதன் பலனை அனு பவித்தே தீரவேண்டும். கண்ட தீமைகளை யெல்லாம் செய்து விட்டுக் கடவுளை மன்னிப்பு கேட்டுத் தப்பலாம் என்று பார்க் கிறீர்? தீங்கற்ற நல்வழியில் நடப்பதுதான் பரிகாரம்" என்றார் சுவாமிகள்.

## 40. பாப உணவே கூடாது

சுவாமிகள் கம்பில் என்ற ஊரில் வேத-விளக்கம் செய்து, ஃக்ருல்லாபூர் சென்றார். அங்கே சொக்கையலால் தோட்டத்தில் இருந்துகொண்டு, மஹாபாரதம் சாந்திபர்வத்தைக் கொண்டு வேத தருமத்தை விளக்கினார். அங்கிருந்து பரூகபாது சென்று, சேத் ஜகந்நாதின் விச்ராம் கட்டத்தில் தங்கியிருந்தார். ஜகந்நாதன் சுவாமிகளின் அன்பனாகி, அவர் வகுத்தபடி ஸம்ஸ்காராதிகளைச் செய்தான். அப்போது அவனுக்குப் பிறந்த குழந்தைக்கு சுவாமிகள் புருஷோத்தம நாராயணன் என்று பெயரிட்டார். ஜகந்நாதன் சுவாமிகளுக்குப் போர்வை தந்தான்; அவர்

மறுத்தார்; கோவணத்துக்குமேல் வேறொன்றையும் அணியவில்லை. ஒருநாள் சுகவாசி லால்சதா என்பவன் சாப்பாடு தந்தான்; சுவாமிகள் மகிழ்ச்சியுடன் உண்டார். "என்ன பிராமணச்சாமி, இதர சாதி சமைத்ததை உண்பதா?" என்று சில பிராமணர் ஏசினர். "பிறரை வருத்திவந்த உணவு, அசுத்த உணவு—இவை இரண்டே தீமையாகும், சாதர் நேர்மையாகப் பாடுபட்டுழைத்துண்பவர்கள், அவர்கள் தந்தது நல்லுணவாகும்" என்றார் தயானந்தர்.

## 41. கடவுளே பாதுகாப்பு

தயானந்தர் உபதேசங்களால் மூடப்பழக்கங்கள் பறந்தோடின. பலர் உருத்தொழுகையை விட்டனர். சில பிராமணர்கள் வாதாடித் தோற்றனர். வேறு சிலர் மீரட்டிலிருந்து ஸ்ரீ கோபால் என்ற பண்டிதரைக் கொண்டுவந்து வாதாடச் செய்தனர். பண்டிதர் மஹாபாரதத்தில் "தேவதாப்யர்ச்னஞ்சைவ ஸமிதா தானமேவச" (தேவார்ச்சனையும் சமிதாதானமும் வேண்டும்) என்ற சுலோகத்தைக் கொண்டு சண்டமாருதமாகப் பேசினர்! சுவாமிகள், "ஹவனம் செய்யும் அறிஞரைப்போற்ற வேண்டும்" என்பதே அதன் பொருள் என்பதை விளக்கினர். பண்டிதர் சும்மா விட்டாரா? கிருஷ்ணலால் என்ற சீடரைக் காசிக்கு அனுப்பினர். அவர் சாளக்ராம் பண்டிதரிடம் விஷயத்தைச் சொல்லி, விக்கிரகாராதனை வேத சம்மதமே என்று சீட்டெழுதி வாங்கி வந்தார். "இதோ பாரும் வேத சாட்சி; காசிப் புலவர் அத்தாட்சி" என்று பண்டிதர் காட்டினர். தயானந்தர் அதை சுக்கக்காகப் பிய்த்துக் கண்டனம் செய்து, உண்மையான வேதக் கருத்தை உபதேசித்தார். இச்சீட்டின் உண்மையறிய பன்னலால் என்பவர் காசிக்கு ஆள் அனுப்பினர். அது பழைய சீட்டின் வடிவமே; ஞானிகள் உருத்தொழுகை செய்ய வேண்டியதில்லை என்பதைக் காசிப் புலவரும் ஒப்பினர். உடனே உரு வணக்கத்தைவிட்டுத் தான் கோயில் கட்ட வைத்திருந்த பணத்திற்கு, ஒரு பாடசாலை கட்டிக் கல்வியறம் செய்தார்.

டாகுர்தாஸ் கும்பலுக்குக் கோபம் வந்துவிட்டது. உடனே சுவாமிகளை அடித்துக் கொல்லக் குண்டர்களை அனுப்பினர்கள்; சேத் ஜகந்நாதன், "சுவாமிகளே கவனம்; உயிருக்கு ஆபத்து; எங்கள் பாதுகாப்பில் பத்திரமான இடத்தில் இரும்" என்றான். "அப்பனே; எத்தனையோ பகைவர் என்னைக் கொல்ல வந்தனர்.

அப்போது காத்த கடவுள் இப்போதும் பாதுகாப்பார் ; வேறு காவலை நான் விரும்பவில்லை. நீயும் உன் ஆட்களும் எத்தனை நாள் என்னைக் காக்க முடியும்?" என்று தமது கடைமைச் செய்தார் தயானந்தர். பாபு கோவார்த்தனதாஸ் ஒரு குண்டனை அனுப்பித் "தீட்டுடா சாமியாரை" என்றான். குண்டன், "கங்கையில் முழுகினால் பாபம் போகுமா இல்லையா?" என்று கேள்வி போட்டான். "இல்லை உடலுக்கு முழுகுவதால் பாபம் போகாதப்பா ; அதை அனுபவித்தே தீர வேண்டும்" என்றார் சுவாமிகள். குண்டன், "கங்கையைப் பழிக்கிறாயா?" என்று ஒரு பழஞ்செருப்பை சுவாமிகள் மேற் வீசினான். சுற்றி யிருந்த சாதர் அவனைப் பிடித்து புடைத்தனர். சுவாமிகள் குறுகிட்டு, "அவன் அறியாமையால் அப்படிச் செய்தான் ; அறிந்தவர் மன்னிக்க வேண்டும். பலவான்கள் எளியரிடம் இரக்கம் காட்ட வேண்டும்" என்று ஆளை விடுதலை செய்து அனுப்பினார். இப் பொறுமை சுவாமிகளின் பெருமையை விளக்கியது.

பன்னாலால் நாட்டிய பாடசாலையில், பல மாணவர் சேர்ந்து, தயானந்தர் முறைப்படி வேத கல்வி கற்றனர். ஜகந்நாதன் மாணவருக்கு அன்னதானம் செய்தான். சுவாமிகள் வாலிப ருக்கு பிரமசரியத்தை உபதேசித்தார். ஒரு வாலிபன் விபசாரச் சாக்கடையில் விழுந்தான். சுவாமிகள் அவனை திருத்தி, ஒழுங் காக நடக்கச் செய்தார். இல்லறத்தாரும் மக்கட்பேறு கருதியே முறையறிந்து நல்ல வீரிய பலத்துடன் கூட வேண்டும் என்று உபதேசித்தார்.

சுவாமிகளின் கட்டுமஸ்தான உடலே பிரமசரிய பலத்தைக் காட்டியது. ஒருநாள் சில வஸ்தாதுகள் வந்து, "சுவாமிகளே! உடற் பயிற்சி செய்யும் ; சக்திமானா யிருப்பீர்" என்றனர். "ஐயா, இதோ என் ஈரக் கோவணத்தைப் பிழிந்து தருகிறேன், அதில் ஒரு சொட்டுத் தண்ணீர் வரச் செய்யுங்கள், உங்கள் பலத் தைப் பார்ப்போம்" என்று தந்தார். பயில்வான்கள் அதை முறுக்கிப் பிழிந்தும் பலிக்கவில்லை. சுவாமிகள் அதை அழுத்திப் பிழிந்தார். தண்ணீர் சொட்டியது. சுவாமிகளின் கையுரனைப் பயில்வான்கள் வியந்து சென்றார்கள்.

## 42. தைன் அத்தாட்சி

இவ்வாறே வேத உண்மைகளை விளக்கி, ஜலாலாபாது, கன்னோசி, மாதாபூர் முதலிய பல இடங்களைச் சுற்றி, பலர் உருத் தொழுகையை விடச் செய்து, தயானந்தர் கான்பூர் சேர்ந்தார். அங்கே தர்பாரிலால் கட்டிடத்தில் வசித்து, வேதப் பிரசாரம் செய்தார். ஹலதர் என்பவர் உருத் தொழுகையை ஆதரித்து வாதாடினார்; மஹா பாரதத்தில் ஆதாரம் காட்டினார். ஏகலைவன் துரோணாச்சாரியார் சிலையை வணங்கி, வில் வித்தை கற்ற கதையைச் சொன்னார். சுவாமிகள் "ஏகலைவன் கதை ஆதாரமாகாது. வேதமே ஆதாரம்" என்று வேதப் பாசுரங்களைப் பொழிந்து, கடவுள் நிர்க்குணம், நிராலம்பம், நிர்விஷய கைவல்யம், சுத்த சச்சிதானந்தம் என்று நிலை நாட்டினார். லக்ஷ்மண பண்டிதர் "கடவுள் எங்கும் இருக்கிறார்; கல்லிலும் இருக்கிறார். ஆதலால் கல்லையும் கடவுளென்று தொழலாம்" என்றார். சுவாமிகள் அசேதனமான கல்லைத் தொழுவதேன்? கடவுள் நெஞ்சந்தோறும் இருக்கிறார்; உம்முள்ளேயே தியானத்தால் வணங்குமே" என்றார். பண்டிதர் வாய் அடங்கி விட்டது. இந்த விவாதத்திற்கு, துணைக் கலெக்டர் தைன் என்னும் வெள்ளையர் நடு வகித்து "சுவாமி, தாங்கள் உருவை நம்பாவிடில், பிறகு எதை நம்புகிறீர்?" என்று கேட்டார். "பரமாத்மாவை நம்புகிறேன்" என்றார் ஞானி: தைன் தயானந்தர் சொல்வதே சரி என்று தீர்மானித்தார். ஹலதர் தோற்றார். பொறாமைக்காரர் உள்ளூர் பத்திரிகையில்—தயானந்தர் தோற்றார்; ஹலதர பண்டிதரே வென்றார்—என்று புளுகினர். அன்பர் இதைத் தைனுக்குத் தெரிவித்தனர். தைன் உடனே அச் செய்தியை மறுத்து, இவ்வாறு எழுதித் தந்தார்: "கனவான்களே, குறித்த தர்க்கத்தில், பக்கிரி தயானந்த சரஸ்வதியே வென்றார். அவர் சொல்லே வேத சம்மதம்; அவர் பக்கமே சரி என்பதற்கு, வேண்டுமானால் காரணம் காட்டுகிறேன். தங்கள், W தைன்—(கான்பூர். 7-8-1869)" இதன் பிறகு பலர் விக்கிரகங்களைக் கங்கையில் விட்டெறிந்தனர்.

## 43. கல்லெறி

ஹலதர பண்டிதர், "மஹா ஜனங்களே, விக்கிரகங்களை அப்படி எறியாதீர்கள்; கோயில்களில் வையுங்கள்" என்று அலறினார். சுவாமிகளுக்குத் தொல்லை செய்தார். சுவாமிகள் அதற்கும் தயாரானார். ஒரு நாள் மோஹன்லால், விஷ்ணுலால்

என்னும் அறிஞர் வந்து, "சுவாமிகளே! குண்டர்கள் 'ஆபத்து' வேறிடம் ஓடும்" என்றார், "வருவது வரட்டும்" என்று துறவி தைரியமா யிருந்தார். உடனே சுவாமிகள்மேல் காலிகள் கல் லெறிந்தனர். ஒரு குண்டன் குண்டாந்தடியால் அவரைப் புடைத்தான். சுவாமிகள் தடியைப் பிடித்திழுத்து, ஆளைக் கங் கையில் தள்ளினார். குண்டர்கள் கும்பலாக வந்தனர். சுவாமி கள் சடக்கென்று ஒரு மரக் கிளையை ஒடித்துச் சிலம்பம் வீசி, குண்டர்களை நொய்ய நொருக்கிக் கீழே வீழ்த்தினார். "டேய்! சாமியார் பொல்லாதவர்" என்றனர் குண்டர். "நான் சும்மா இருப்பேனென்று நினைத்தீர்கள்? வாருங்கள் வகையாகத் தருகிறேன்" என்று மறுபடியும் மரக்கிளையைச் சுழற்றினார். குண்டர்கள் அலறி ஓடினர். சுவாமிகள் உடனே கங்கையில் குதித்து நீண்ட நேரம் நீந்தினார். சூரிய குமார சர்மா என்பவன், சுவாமிகள் மேல் கல்லெறிந்தான். சுவாமிகள் நூல்களையும் கிழித்தெறிந்தான்: பிற்காலம் அவன் உண்மையை உணர்ந்து, ஆரிய சமாஜியானான். சுவாமிகள் 'இராமாயண பாரத இடைச் செருகல்களை நீக்கி நல்ல பதிப்புகள் வெளியிட வேண்டும்' என் றார். பிரமசரியத்தையும், தேகப் பயிற்சியையும், பிராணாயாமப் பயிற்சியையும் வற்புறுத்தினார். பாலிய விவாகத்தைக் கண்டித் தார். தன்னைப் பெறும்போது தந்தைக்கு 42, தாய்க்கு 40 வயது. அதனாலே தாம் திடமாயிருப்பதாகச் சொன்னார்.

சுவாமி கயிலாசபருவதம் கான்பூருக்கு வந்தார். தயானந் தர் தாம் இருக்குமிடத்திற்கு அவரை அழைத்தார். "ஹூ அது காயஸ்தாள், சூத்திரர்கள் இருக்குமிடம், நான் பிராமண சந்யாசி, வரமாட்டேன்" என்றார் பருவதம், "அப்படியானால் மிலேச்சர் ஆளும் தேசத்தில் ஏன் இருக்கிறீர்?" என்று தயானந்தர் கேட்டு விட்டார்.

## 44. பழைய வழக்கம்

ஒரு பிராமணன் சுவாமிகளைத் தினம் வைதான். சுவாமிகள் "அப்பனே!! உன் வேலையை நீ நடத்து; என் அன்பு வேலையை நான் நடத்துகிறேன்" என்று தினம் இனிய மிட்டாய்களைத் தந்தார். பிராமணன் இந்த அன்பு மயத்தை வைதோமே என் றுணர்ந்து, அவர் காலில் விழுந்து, "சுவாமி! நான் பரம துஷ் டன்; தாங்கள் பரம சாது; என் பிழையை மன்னிக்க வேண்டும்" என்று இறைஞ்சித் திருந்தினான். இப்படிப் பொறு

மையுள்ள அன்பினுல் சுவாமிகள் புலவரைத் திருத்தினர். மற்றொரு பிராமணன் மோட்சம் வேண்டினன் : "அப்பனே ! பொய்யை விடு, உருக்களைத் தொழாதே ; உண்மையைப் பயில், வேதம் படி ; சந்தி ஜபம் செய் ; குழந்தைகளுக்குக் கல்வி கற்பி" என்றார். அவன், "சுவாமி ! உரு வணக்கம் பழைய வழக்கமாயிற்றே ; எப்படி விடுவேன் ?" என்று வினவினன். "அப்பனே ! திருட்டும் பழைய வழக்கந்தானே, நீ திருடி அகப்பட்டுச் சிறை செல்வாயா ?" என்றார், ஆள் கப் சுப். சுவாமிகள் கான்பூரில் மூன்று மாதம் இவ்வாறு வேத சேவை செய்து, காசிக்குப் புறப்பட்டார். அன்பர் அழகான கோவணம் தந்தனர். வேண்டாம் சுமை, பந்தம், என்று கட்டிய கோவணத்துடன் தயானந்தர் கிளம்பினர்.

## 45. காசியில் தயானந்தர்

காசி கலா நிலயம் ; வேதபீடம் ; சாஸ்திர பவனம் ; காசிப் புலவர் முடிவை இந்தியா முழுவதும் ஒப்பும். அப்படிப்பட்ட காசியை வேத தர்மத்திற்குத் திருப்பவே தயானந்தர் வந்தார் (1869 அக்டோபர்). அப்போது தசராத் திருநாள் நடந்தது. சுவாமிகள் கங்கைக் கரையில் இருந்துகொண்டு கூட்டங்களில் நின்று, வேத தர்மத்தை வீறிட்டு, உருவணக்கத்தைப் பலமாகக் கண்டித்தார். அவருக்கு உணவளித்த மஹாராஜா ஈசுவரிப் பிரசாது நாராயணசிங் ஒரு பண்டிதர் மூலம், விக்கிரக கண்டனத்தை விட்டால், சுவாமிகளுக்கு மாதம் நூறு ரூபா தருவதாகச் சொன்னர். "உன் சிரசையே தந்தாலும், என் கடமையை விடமாட்டேன் ; பொய்யைப் பொய்யென்று சொல்ல அஞ்சேன்" என்று தயானந்தர் பதின் மடங்கு வீறுடன் வேத கோஷம் செய்தார். பண்டிதர்கள் அவரைப் பதம் பார்த்து, அவர் அறிவை உள்ளுக்குள் வியந்து, பயந்து வாயடங்கினர். தயானந்தரை எதிர்க்க யாரும் துணியவில்லை. அவரைக் கேட்ட பலர், உருத் தொழுகையைவிட்டு வேத மந்திரங்களையே ஜபிக்கத் தொடங்கினர். ஆனுல் தயானந்தர், பண்டிதப் புலியான ராஜாராம் சாஸ்திரியாரை வாதுக்கழைத்தார். சாஸ்திரியார் ஒரு கத்தியை நடுவில் வைப்போம், நீர் தோற்றுல், உமது மூக்கை அறுப்பேன்" என்றார். "மெத்தச் சரி ஐயா ; ஒரு கத்தி என்ன—இரண்டு கத்தி யிருக்கட்டுமே. நீர் சாஸ்திரார்த்தத்தை விட்டு, சஸ்திரத்துடன் கிளம்பினுல், அதிலும் ஒரு கை பார்க்கலாமே" என்றார். சாஸ்திரி கப்சுப் !

பிறகு மஹாராஜாவே புலவர்களைக் கூப்பிட்டு ஊக்கி, தயானந்தருடன் வாதம் நடத்தச் செய்தார். 16—11—1869, செவ்வாய்க்கிழமை காசி ஆனந்தபாகில், ஐம்பதினுயிரம் பேர் கூடினர். கூட்டத்தை போலீஸ் ஒழுங்குறுத்தியது, இருபத்தேழு மஹா பண்டிதர்களும் இரண்டு பாதிரிமாரும் வந்திருந்தனர். தயானந்தர் ஒரு பீடத்தில் கம்பீரமாய் அமர்ந்தார். அவருக்கு எதிரே தாராசரண் முதலிய புலவர் புலிப்பாய்ச்சலில் இருந்தனர். காசி ராஜா வந்து அவர்கள் பக்கத்தில் அமர்ந்தார். உரு வணக்கத்திற்கு வேதத்தில் ஆதாரமுள்ளதா? என்பது விஷயம். தயானந்தர், "உரு வணக்கத்தை ஆதரிக்கும் வேத வாக்கைக் காட்டுமே" என்று தாராசரணைக் கேட்டார். அவர் பதிற் சொல்ல முடியவில்லை, பண்டிதர்கள் பேச்சை மாற்றினர். சுவாமி விசுத்தானந்தர் சாரீரக சூத்ரத்தைச் சொன்னர். வேத ஞானம் இல்லாத புலவர் தர்ம சாஸ்திரத்தில் ஆதாரம் உள்ளது என்றனர். "தர்மம் என்றால் என்ன?" என்று தயானந்தர் வினவினர். பாலசாஸ்திரி தானே கவனம் பண்ணி "இது வேத வாக்கு" என்றார். தயானந்தர், "இது வேதமில்லை—உமது கட்டுமானம்" என்றார். சில பண்டிதர் மனு வாக்குச் சொன்னர்.

> த்ருதி க்ஷமா தம : அஸ்தேயம்
> ஸௌசம், இந்த்ரிய நிக்ரக :
> தீர் வித்யா, ஸத்யமக்ரோதோ
> தசகம் தர்ம லக்ஷணம்.

"அதர்ம லக்ஷணம் என்ன?" என்று தயானந்தர் கேள்வி போட்டார். பதிலில்லை. ஒரு சாஸ்திரியார் வேத ஏட்டில் பிரதிமா (உரு) என்றிருக்கிறது. ஆதலால் உரு வணக்கம் வேத சம்மதம் என்று கூவினர் இன்னொருவர் வேதத்தில் புராணம் என்ற சப்தம் புராணக் கதைகளையே குறிக்கும். புராணங்கள் உருத்தொழுகையை ஒப்பும்—என்று கதறினர். சுவாமிகள் விளக்கு வெளிச்சத்தில் ஏட்டைப் பார்த்தார். புராணன் என்பதற்குத் தொல்லோன் என்பதே பொருள் என்று வாதித்தார். இச்சமயம் பண்டிதர்கள், "சாமியார் தோற்றார் தோற்றார், நாங்கள் வென்றோம் வென்றோம்" என்று கைதட்டி இடிமுழக்கம் செய்துகொண்டே வெளியேறினர்: உடனே குண்டர்கள் தங்கள் வேலையைத்தொடங்கினர். தயானந்தர் மேல் கல்லும் களிமண் உருண்டைகளும் வந்து விழுந்தன. கொத்தவால் இரகுநாதப் பிரசாதர் தமது போலீஸ் வீரருடன் கூட்டத்தைக் கலைத்து, குண்டர்களை ஓட்டினர். பண்டிதர்

களின் நடத்தையைக் கண்டு தயானந்தர் வருந்தினர். பண்டிதர்களோ ஊரெங்கும் தயானந்தரைத் தாம் தோற்கடித்ததாகப் பறை சாற்றித் தீர்த்தனர். சுவர்களிலெல்லாம் தங்கள் கையெழுத்திட்ட வெற்றி அறிக்கையை ஒட்டினர். உருத்தொழுகை வேதசம்மதம் இல்லை என்பதும் அவர்களுக்குத் தெரியும். ஆனால் அதை வெளிப்படையாக ஒப்புக் கொண்டால் கோயில் வேலை, புரோகிதம், அரசர் சலுகை எல்லாம் போய்விடும்; பிழைப்பு நடக்காது என்று பயந்தே, பண்டிதர்கள் உண்மையை மறைத்தார்கள். கல்கத்தா இந்துப் பிரகாசம் தயானந்தரை இவ்வாறு மெச்சியது. "தயானந்தர் விக்ரக ஆராதனையை மண்டையில் அடித்தார்; வேத உண்மைகளையே அவர் ஏற்கிறார். கட்டுக்கதைகளான சுயநலப்புராணப் பொய்களைக் கண்டிக்கிறார். காசிப் பண்டிதர்கள் அவர் கேள்விகளுக்குப் பதிற் சொல்ல முடியாமல் தோற்றனர். புராணத்தில் ஒரு வரியைக் காட்டித் தாமே வென்றதாக ஜம்பமடித்தனர். தயானந்தரே வென்றார். வேதத்தில் உருவணக்கமில்லை. தயானந்தர் பண்டிதர்களை மீண்டும் தர்க்கத்திற்கு அழைத்தும், யாரும் வரவில்லை. பிறகு தயானந்தர் வேதக் கோட்பாடுகளுடன் சத்திய தர்மத்தை விளக்கி, ஒரு துண்டுப் பிரசுரம் வெளியிட்டார்."

இம்மாதிரியே கல்கத்தா தத்துவ போதினி, ரோஹில் கண்ட் அக்பார், பயனீர், கிரிஷ்டியன் இன்டலிஜன்ஸ் முதலிய பத்திரிகைகள் தயானந்தருக்கே வெற்றி கூறி மெச்சி எழுதின. தயானந்தர் ஐந்து தடவை காசிக்கு வந்து பண்டிதர்களை விவாதத்திற்கு அழைத்தும் அவர்கள் வரவில்லை. அதற்கு மாறாக, பண்டிதர்கள் தயானந்தரை பிருஷ்டன் என்று தூற்றி, ஒதுக்கி, அவரிடம் சென்றவர்களையும் தள்ளி வைத்தனர். சிலர் "நீர் துறவி; நாங்கள் இல்லறத்தார்; துறவிகளுடன் வாதாடுவது சரியில்லை" என்று மழுப்பினர். காசி மன்னர் முதலில் பண்டிதருடன் சேர்ந்து தயானந்தரை அவமதித்தார்; பிறகு தமது பிழையை வருந்தினர். ஆறுவது தடவை தயானந்தர் காசியில் பிஹாரிலால் கோசாயி தோட்டத்தில் தங்கியபோது, சாது ஜவஹர் தாஸை அனுப்பி, அவரை வரவழைத்துத் தமது பொன்னணையில் வைத்து, வெள்ளி மாலை சூட்டி, அடி வணங்கிக் குறை யிரந்து, உபசரித்தார். தயானந்தரும் கருணையுடன் அரசர் பிழையை மன்னித்தார். மறுநாள் மன்னர் சுவாமிகளுக்கு ஊறுகாயும், மிட்டாய்களும் அனுப்பினர். ஈச்வரசிங் என்ற பண்டிதர் தயானந்தரின்

வேதப் புலமையை வியந்து, பரம சாந்த மனதை அறிந்து "இவர் பெரிய புலவர் மட்டுமன்று; இவரே மஹாத்மா, மஹா புருஷர்" என்று மெச்சினர். "சட் இவரா; பார் இவர் புலமையை அம்பல மாக்குகிறேன்" என்று ஐம்ப மடித்து, மஹா பாரங்கதரான ராம சாமி மிஸ்ரா ஒரு கத்தியுடன் கிளம்பி வந்தார்.

தயானந்தர்: வித்வான் வரவேண்டும்;

மிஸ்ரா: அதெல்லாம் இருக்கட்டும் ஐயா. வாரும் வாதத்திற்கு; இதோ சூரி; தோற்றவர் மூக்கை அறுப்போம்.

தயா: ஐயா இன்னொரு சூரியும் கொண்டு வாரும்; தோற்றவர் நாக்கையும் அறுக்கலாம்; பொய்யருக்கு நாக்கெதற்கு? மூக்கு ஒரு குற்றமும் செய்யவில்லை; எலும்பில்லாத நாக்கே கண்டபடி பிறழ்கிறது.

மிஸ்ரா தயானந்தருடன் சிறிது பேசிப் பார்த்து, இவருடன் வாய் போட முடியாது என்று சென்று விட்டார்.

ஒரு நாள் ஒரு வஞ்சப் பதர் "சுவாமிகளுக்கு நிவேதனம்" என்று மிட்டாய் தந்தான். "பசியில்லை" என்று அவர் மறுத்தார்: "தாம்பூலமாவது ஏற்றருள்க" என்று வெற்றிலைப் பொட்டணம் தந்து, உடனே ஓட்டமெடுத்தான். சுவாமிகள் அதனுள் கூர்ந்து பார்த்தார்; அத்தனையும் நஞ்சு; சுவாமிகளை நஞ்சு வைத்துக் கொல்லச் சூழ்ச்சி செய்தான். வஞ்சப் பதர்! காசி குண்டர் மிரட்டினர். வாளுக்கும் நஞ்சுக்கும் அஞ்சாச் சிங்கமா மிரட்டலுக்கு அஞ்சும்! "குண்டர் வரட்டும்! பார்க்கிறேன் ஒரு கை" என்று முண்டாவைத் தட்டினர். ஒரு குண்டனும் கிட்ட வரவில்லை. ஒரு மாதம் காசியிலிருந்து பார்த்து, தயானந்தர் மிர்ஜாபூர் சென்று, பிறகு பிரயாகைக்கு வந்தார். மறுபடியும் கங்கைக் கரை வழியே தர்மப் பிரசாரம் செய்து சுற்றினர்.

## 46. பல நிகழ்ச்சிகள்

தயானந்தரின் மூச்செல்லாம் செயல்; செயலெல்லாம் வேத விளக்கமே. தினம் ஏதாவது சம்பவம் நடந்தது; அத்தனையும் எழுதப் புத்தகம் போதாது. காந்திஜீயின் வாழ்வைப் போலவே தயானந்தர் வாழ்வும் அரிய பெரிய நிகழ்ச்சிப் படலமாகும். சில நிகழ்ச்சிகளை மின்வெட்டாகக் குறிப்போம்.

அப்போது அலஹாபாதில் கும்ப மேளம் (5-2-1870). புத்தகப் பண்டிதர்களும், போலித் துறவிகளும் ஏராளமாகக் கூடி

யிருந்தனர். சுவாமிகள் கங்கைக் கரையில் ஒரு கோவணத்துடன் திரிந்தார். ஐயா உம் உடலுக்குக் குளிரில்லையா?" என்று சிலர் கேட்டனர். "ஐயா முகம் குளிருகிறதா? இல்லை; ஏன்? அதை மூடுவதில்லை. அது போல் உடம்பையும் பழக்கினால் குளிர் தோன்றாது" என்றார் தயானந்தர். இரண்டு வைதிக ஆசாரிகள் நெற்றியில் குறுக்கும் நெடுக்கும் இழுத்துக் கொண்டு வந்தனர். சுவாமிகளின் சூனிய நெற்றியைக் கண்டு முகம் சுளித்தனர். "ஐயா தங்கள் சூனிய நெற்றியைப் பார்க்கப் பிடிக்க வில்லையே; வேதம் படித்த துறவி இப்படிப் பாஷண்டியாகலாமா?" என்று விளாசினர். சுவாமிகள்' "ஆசாரியர்களே! நீங்கள் துவாதச நாமமும் இழுத்துக் கொண்டு கண்ணாடி பார்க்க அரைமணி நேரமாவது பிடிக்குமே; நேரத்தை இந்த அனுவசியமான பூச்சில் ஏன் வீணாக்குகிறீர்கள்? இந்த நாமத்தால் என்ன பயன்? நெற்றிக்கு இட்டுக் கொள்வது வேத சம்பந்த மில்லை; அது இயற்கைக்கு விரோதம். நெற்றிக்குக் கோடிழுத்து, பொட்டு வைத்து அழகு செய்வதை விட காயத்ரி ஜபம் செய்தால் பலனுண்டே" என்றார் சுவாமிகள். "அதிகப் பிரசங்கி சுவாமிகளே, எங்கள் ஊரா யிருந்தால் உம்மை வெட்டிப் புதைத்து விடுவார்கள்" என்றார் ஒரு ஆசிரியர். "என்னை வெட்டிப் புதைத்தாலும் மூடக் கொள்கைகளை ஆதரிக்க மாட்டேன். போலித்தனத்தைப் பொய் என்றே தைரியமாகச் சொல்லுவேன்" என்றார் தயானந்தர். இதைக் கேட்ட ஒரு வைதிகர் மட்டும் நெற்றிக் கோடுகளை உடனே அழித்தார்! இன்னொரு வேதியர் புருஷசூக்தத்தை மட மட வென்று கொட்டியளந்து, "பாரும் இதில் உருவணக்கத்திற்கு ஆதாரம் உள்ளது; அதுவே ப்ரம்மா, விஷ்ணு, சிவம், ருத்ரன் என்ற வார்த்தைகள் வேத காலத்திலும் உருவணக்கம் இருந்ததைக் குறிக்கிறது" என்றார், சுவாமிகள் இந்த மந்திரத்தின் பொருளை விளக்கினார் 'வேதரிஷிகள் நிர்க்குணப் பிரம்மோபாசிகள்; மேகத்தில் மின்னல் தவழ்வதுபோல் இதய மத்தியில் விளங்கும் சூக்ஷ்மவஸ்துவே சுத்தாத்மாப் பிரம்மம்; அதுவே ஆக்கும் பிரம்ம சக்தி, காக்கும் விஷ்ணுசக்தி, மாற்றும் சிவ சக்தி' என்று அதன் பெருமையைப் போற்றினார். "புருஷன் என்பதே ஹ்ருதயப்ரஹ்மமே; அதன் பெருமையை விளக்குவதுதான் புருஷசூக்தம்" என்றார். வேதியர் "இன்றே, வேதப் பொருளை அறிந்தேன்" என்று நன்றி செலுத்தினார். மற்றொரு புலவர் பதினெட்டுப் புராண சாரமும் உரு

வணக்கமே: இராமன் கண்ணன் போன்ற அவதார புருஷர்களே உருவணக்கம் செய்திருக்கிறார்கள்" என்று பாய்ந்தார். பாகவதத்தைப் புரட்டிக் காட்டினார். சுவாமிகள் புராணப் பொய்களைப் பலமாகக் கண்டித்தார். அற்புதப் புளுகுகளைக் கட்டுக்கதைகள் என்று நகைச்சுவையுடன் விளக்கினார். பாகவதத்தின் லீலைகளைத் தாக்கினார். "கண்ணனை பாரதத்தில் பாரும்; இராமனை வால்மீகி ராமாயணத்தில் பாரும்" என்றார். இராமாயணம், பாரதம், மனு, வேதம்-இவையே ரிஷி வாக்குகள் என்று விளக்கினார். இவற்றை அனர்த்தம் செய்து கொண்டு, நாடு போலி வணக்கத்தால் கெட்டதைக் கண்டித்தார். ஒரு காசிப் பண்டிதருக்கு மூக்கு விடைத்தது; வாரும் வாதத்திற்கு என்றார். "சரி வாரும்" "நீரே என் இடத்திற்கு வர வேண்டும்." "சரி" என்று வந்தார் தயானந்தர்; ஆளைக் காணவில்லை! இப்படி முன்னே சபதம் கூறிச் சொல்லை வழியே ஓடிப்போன எட்டுப் புலவர் பலர். இன்னொரு பண்டிதர் தர்க்கத்திற்கு அழைத்து "உம்மை சக்கை புரட்டுகிறேன் பாரும்" என்றார். சுவாமிகள் "சபை கூட்டுமே" என்று அவரிடம் சென்றார். "இப்பொழுது முடியாது; பிற்காலம் பார்த்துக் கொள்வோம்" என்று பண்டிதர் தப்பினார்.

அலஹாபாது கும்பமேளத்தில், சுவாமிகளைத் தரிசிக்க ஒரு நல்லறிஞர் வந்தார்.—பிரம்மசாமஜத் தலைவர் தேவேந்திரநாத தாகூர். பிரம்ம சமாஜம் உருத் தொழுகையைக் கண்டித்து வேத மந்திரங்களால் இறைவனை வணங்கும் முறையை சுவாமிகள் போற்றினார். தாகூருக்கும் சுவாமிகளின் அறிவும் துறவும் அருட்பணியும் பிடித்திருந்தன. "கல்கத்தா ஆங்கில மோகம் பிடித்தலைகிறது; அங்கே உடனே ஒரு சமஸ்கிரதக் கல்லூரி நாட்டி, வைதிக தர்மம் நாட்டில் பரவப் பணி செய்யும்" என்றார் தயானந்தர். "சுவாமிஜீ கல்கத்தாவிற்கு அவசியம் வரவேண்டும்; அப்போது எல்லாம் ஏற்பாடு செய்வோம்" என்று தேவேந்திரர் விடைபெற்றார்.

இவ்வாறு சுவாமிகள் தைரியமாக மூடக்கொள்கைகளையும் அன்னிய மாயங்களையும் கண்டித்து உண்மையை விளக்கினார். வேத தர்மத்திற்காக உயிரையும் தரத் துணிந்தார். பிறமதம் புகுந்தவர்களை சுத்திசெய்து தர்மத்தில் கொண்டு சேர்த்தார்; இது சில பாதிரிகளுக்கும் மௌல்விகளுக்கும் பிடிக்கவில்லை. ஒரு முஸல்மான் அவரைக் கொல்ல வந்தான்; சூழ்ச்சி பலிக்கவில்லை. சரியான சமயத்தில் மாதவசந்திர சக்கரவர்த்தி என்னும் சீடர் வந்து

சுவாமிகளை வேறிடம் அழைத்துச் சென்றார். சில ஆங்கில-மோகம் பிடித்த வாலிபர், இதோ கிறிஸ்து மதம் புகப் போகிறார்கள்; அவர்களை சுவாமிகள் அன்புடன் அழைத்து "வாலிபர்களே. நமது வேத தர்மத்தைக் கேளுங்கள்; இதுவே மனிதனுக்கு தெய்வத்தன்மை தரும் சுத்த தர்மம்" என்று விளக்கினார். வாலிபர் உடனே சுவாமிகளின் சீடரானார். மாதவபாபு என்ற பிராமணர், ஆங்கிலமும் பார்சியும் கற்றவர்; மெத்தப் படித்தவர்; அவர் அன்னிய மோகத்தில் விழுந்து, ஒரு துருக்க-வேசையை வைத்துக் கொண்டு, அதுவே சுவர்க்கபோகம் என்று மயங்கி, வேத தர்மத்தையும், இந்து சமுதாயத்தையும் பழித்தார். பிரம்ம வித்தையை இழிவு செய்தார். அவர் 101 கிண்டல் கேள்விகளை தயார் செய்து, பண்டிதர்களையும், சாமியார்களையும் மிரட்டி வாதாடினார். வழக்கம்போலவே தயானந்தரிடமும் தன் கைவரிசைகளையும், வாய்வரிசைகளையும் காட்டினார். கேள்விகளுக் கெல்லாம் சரியான பதில் கொடுத்து; தயானந்தர் வேத தர்மத்தை மாதவருக்கு விளக்கினார். மாதவபாபு உடனே புதிய மனிதரானார். காயத்திரி உபாசனை செய்யத் தொடங்கினார். அவருக்காகவே சுவாமிகள் சந்தியா மந்திரங்களை எழுதித் தந்தார். ஊரெல்லாம் மாதவராவின் மனமாற்றத்தை வியந்தது. "எல்லாம் சுவாமிகள் கிருபை" என்றார் பாபு. அவர் ஒரு முஸல்மான் மேல் வழக்குத் தொடுத்திருந்தார். சுவாமிகள் வழக்கை விடாது நடத்தச் சொன்னார்; ஆனால் அது தோற்றது; அதில் ஏராளமான பொருளும் நஷ்டமானது. "சுவாமிகள் கிருபை இப்படி நஷ்டத்தில் முடிந்ததே" என்று சிலர் கிண்டல் செய்தனர். "ஐயோ, சுவாமிகள் கிருபைதான் என் பணச் செருக்கை ஒழித்தது; இப்போது மனம் நிம்மதியா யிருக்கிறது; பணச் சேதம் ஆத்ம லாபமாகப் பழுத்தது" என்றார் மாதவர்.

கும்ப மேளம் முடிந்தது; சுவாமிகள் மிர்ஜாபூருக்கு வந்து, விந்தியமலைச்சாரலில் வசித்தார். ஒரே கோவணமே ஆடை; தரையே படுக்கை; பாலே உணவு, வேதப் பிரசாரமே வாழ்வு! இரவு இரண்டு மணிக்கே எழுந்து அனுஷ்டானங்களை முடித்துக் கொண்டு சூரியோதயம் வரையில் தியானம் செய்து, பிறகு வேத தர்மத்தை விளக்கி வந்தார் மகான். கலெக்டர் ஜெங்கின்ஸன் கூட தயானந்தரின் வேத தர்மத்தைக் கேட்டு மகிழ்ந்தார். கலெக்டரின் ஆள் குருசரண் சௌத்ரி, தயானந்தரின் சிஷ்யராகி, வேதத்தைப் படித்தார். ஏராளமான ஜனங்கள் வந்து தாராள

மாக, மிடுக்கான கேள்விகளைக் கேட்பார்கள். சுவாமிஜீ வேதக் கோட்பாடுகளுடன் நிதானமாகச் சமாதானம் சொல்லி, மட மையை விலக்கி மெய்யறிவைத் துலக்கினார். குரு பீடங்களின் அகம்பாவ லீலைகளைக் கண்டித்தார். "ஹே! மூர்க்கர்களே, கண் மூடிப் பழக்கங்களை விடுங்கள். தூய வேத தர்மத்தையே பின் பற்றுங்கள்" என்று சுவாமிகள் கர்ஜித்தார். சில பிராமணர்கள் "மூர்க்கர்" என்ற சொல்லைக் கண்டித்து, சமஸ்கிரதத்தில் கடிதம் எழுதினார்கள். அக்கடிதத்தில் உள்ள பிழைகளை அம்பலமாக்கினார் சுவாமிஜீ.

கோவிந்த பட்டர் பாகவதத்தைக் கொண்டு சுவாமிகளின் வாயை அடக்கப் புகுந்தார். ஜயஸ்ரீ என்ற வைஷ்ணவ பக்தர் உருத்தொழுகைக்கு எதிராக வேதத்தில ஆதாரம் காட்டச் சொன்னார். "நதஸ்ய ப்ரதிமா அஸ்தி" முதலிய வரிகளை சுவாமிகள் காட்டினார். ஜயஸ்ரீ அதற்கு வேறு பொருள் கூறினார்; விவாதம் பெருகியது. ஒருவன் பின்னால் கை தட்டினான்; ஜயஸ்ரீயும் ஆத்திரங் கொண்டார். சுவாமிகள் கம்பீரமாக எழுந்து நின்று, "நான் உண்மையே சொல்லுகிறேன்; மூடக் கொள்கையைக் கண்டிக்கிறேன்; அதற்காக நீங்கள் பலாத்காரம் காட்டினால், நானும் ஒரு கை பார்ப்பேன்" என்றார். சபையில் குழப்பம் ஏற்பட்டது; பிறகு "அந்தியக் காலம்; எல்லோரும் சந்தி ஜபம் செய்து வரலாம்" என்று சுவாமிகள் சபையைக் கலைத்தார். கை தட்டிய பேர்வழி மன்னிப்புக் கேட்டுக்கொண்டான். சுவாமிகளும் அவனை மன்னித்தார்; பலர் அவர் கொள்கைகளை ஏற்றனர்.

## 47. சோடுகிரி மிரட்டல்

சோடுகிரி, பூதமஹாதேவர் கோயில் பூசாரி; நல்ல தடியன்; பயில்வான். சுவாமிகள் சிவலிங்கத்தைப் பழிப்பது அவனுக்குப் பொறுக்கவில்லை. வந்தான் ஆத்திரமாக.

சோ: உம்மைக் கொன்றுலென்ன?

சு: ஏன்?

சோ: நீர் சிவலிங்கத்தை ஏன் பழித்தீர்? லிங்கத்திலிருந்து தானே எல்லோரும் உண்டானார்கள்?

சு: நீரும் இந்தக் கல் லிங்கத்திலிருந்தே உண்டானீரோ? மூடப் பழக்கம்! பொய் வணக்கம்!

சோடுகிரி ஆத்திரம்கொண்டு சுவாமிகளை அடிக்க கையை ஓங்கினான்.

சுவாமிகள் ஒரு கல்லைத் தூக்கி, "கல்லைத் தொழும் ஐயாவே, நீர் ஏதாவது சேட்டை பண்ணினால், இந்தக் கல்லால் கொடுப்பேன்—கவனம்" என்றார். சோடுகிரி "சாமியார் சாமான்யமில்லை" என்று தெரிந்து கொண்டான். சுவாமிகள் சர்வாந்தர்யாமியான பரம்பொருளை, ஒரு கல்லுருவிலோ கட்டிடத்திலோ சிறையிடுதல் முழு மூடத்தனம் என்று விளக்கினார். சோடுகிரி தன் கும்பலுடன் வாய் மூடிச் சென்றான். மறுநாள் அதே பேர்வழி தன் குண்டர்களை அனுப்பினான். சுவாமிகள் பொது ஜனங்களுக்கு வேத தர்மத்தை விளக்கினார். குண்டர் இடைப் புகுந்து குறும்பு செய்தனர். எழுந்தார் சுவாமிகள்; "கூலிக்கு மாரடிக்கும் காலிப் படைகளா! போகிறீர்களா என்ன?" என்று இடி முழக்கம் செய்தார். குண்டர் நடு நடுங்கி ஓடினர்.

## 48. வேத பாடசாலை (5—6—1870)

பிரம்மசாரிகளுக்கு வேதமும் சமுஸ்கிரதமும் கற்பிக்க தயானந்தர் மிர்ஜாபூரில் வேத பாடசாலை நாட்டிக் காசியிலிருந்து நூல்களை வாங்கி வைத்தார். தமது மாணவரான ஜுகல்கிஷோர், பலதேவப் பிரசாது முதலியவரை ஆசிரியராக நியமித்தார். படிப்பு ஆறாண்டுகள்; மாணவர் பிரம்மசரிய நிஷ்டையை அனுஷ்டிக்க வேண்டியது. சந்தி ஜபம் ஒழுங்காகச் செய்ய வேண்டும்; தவறினால் சாப்பாடு மண்ணுதான். வழியில் இருக்கும் பூவை எடுத்தாலும் இது திருட்டு என்று சுவாமிகள் தண்டிப்பார். ஆறாண்டுகள் படித்துக் கல்வி முற்ற முடிந்தே வெளியேற வேண்டும். இப்பாடசாலைக்கு குருசரண் சௌத்ரி இடமும் செலவும் தந்தார்.

இந்த வேத பாடசாலையை நல்ல முறையில் நடக்க ஏற்பாடு செய்துவிட்டு, கங்கைக் கரை வழியாகக் காசிக்குச் சென்றார். அங்கே மறுபடியும் வேத விருத்தமான வழக்கங்களைக் கண்டித்தார்; வைதிகரை வாதத்திற்கு அழைத்தார்; யாரும் துணிந்து வரவில்லை. வேதாந்திகள், "உலகமே பொய், நீயும் பொய்" என்று சங்கரரின் விவேக சிந்தாமணியைக் கொண்டு மாயா வாதம் பேசினார்கள். தயானந்தர் உலகம் பொய் என்ற பொய்யைக் கண்டித்து, அதனால் நாட்டுக்கு வந்த தீமையை விளக்கிப் பேசினார்; துண்டுப் பிரசுரம் வெளியிட்டார்.

## 49. காளையை அடக்கிய காளை

காசிகஞ்ஜில் தயானந்தர் ஒரு வேத பாடசாலை நாட்டி அதில் மனுவும் வேதமும் ரிஷி நூல்களும் போதிக்கத் தக்க ஆசிரியரையும் அமர்த்தினர். வெளியூர் மாணவருக்கு அதில் இனமாகச் சாப்பாடும் நடந்தது. அடிக்கடி பரிசோதகர் மூலம் பள்ளிக்கூட நடப்பை சுவாமிகள் அறிந்தார். ஒருநாள் சுவாமிகள் செல்லும் வழியில் இரண்டு காளைகள் கொம்பால் முட்டிச் சண்டை போட்டன; ஜனங்கள் பயந்து வேறு வழிகளில் சென்றனர். சுவாமிகள், "ஹாம்" என்று பாய்ந்து வெறி பிடித்த மாடுகளின் கொம்புகளைப் பிடித்து விலக்கினர்;' காளைகள் இந்த ஆணிக்கு அஞ்சி ஓட்டமெடுத்தன. சுவாமிகளின் பலத்தையும், தைரியத்தையும் ஊரார் மெச்சி வியந்தனர்.

## 50. முகம்மது வியந்தான்

காசிபூரிலிருந்து திடீரென்று புறப்பட்டு சுவாமிகள் அனுப்ஷஹருக்குச் சென்றார். வழியே ஒரு கோயில் பூசாரி "வாரும் தர்க்கத்திற்கு" என்றான்—"இதோ வாரும்" என்றார் சுவாமிகள்; "இரும் வருகிறேன்" என்று சொன்னான் பூசாரி; பிறகு ஆள் மட்டும் வரவில்லை; பயம்! அனுப்ஷஹரில் ராம் லீலா திருநாள் மும்முரமாக நடந்தது; நம்மவர் வேஷம் போட்டுக் குதித்தனர்; ஆண்கள் பெண்வேடம் கட்டி ராம்லாலா காதலால் உருகினர்; சுவாமிகள் நகை ததும்ப இந்த மூடக் கொள்கைகளைக் கண்டித்தார்; தகசில்தார் கலியாண சிங் சீறிச் சினந்து, சையது முகம்மது என்ற தகசில்தாரை அனுப்பி "இந்தக் குறும்புக்காரச் சாமியை விரட்டு வெளியே" என்றார். முகம்மது சுவாமிகளைக் கண்டு பேசினர். சுவாமிகள் புராணப் பொய்களையும், கல் வணக்கத்தையும் கண்டித்தார். வேதாந்திகள் "நானே கடவுள், எனக்கு அன்னிய மில்லை" என்னும் அஹம்பாவத்தைக் கண்டித்து, கடவுளுக்குச் சமான மில்லை; அது அரு; தியானமும் தோத்திரமுமே அதை வழி பட வழிகள்—என்று விளக்கினர் இவை முகம்மதுக்கு மிகவும் பிடித்திருந்தன. தகசில்தாரிடம் "அவர் பெரியவர், அறிவாளி" என்று சொன்னர். மறுநாள் முகம்மது வந்தபோது, சுவாமிகள் அக்கால கோர்ட்டுகளின் அட்டூழியங்களையும் அதனல் ஏழைகள் திவாலாகும் கொடுமைகளையும் பற்றிப் பேசி, நமது நாடெங்கும் பஞ்சாயத்து மூலமே வழக்குகளைத் தீர்க்க வேண்டும் என்றார்.

சோடுகிரி ஆத்திரம்கொண்டு சுவாமிகளை அடிக்க கையை ஓங்கினான்.

சுவாமிகள் ஒரு கல்லைத் தூக்கி, "கல்லைத் தொழும் ஐயாவே, நீர் ஏதாவது சேட்டை பண்ணினால், இந்தக் கல்லால் கொடுப்பேன்—கவனம்" என்றார். சோடுகிரி "சாமியார் சாமான்யமில்லை" என்று தெரிந்து கொண்டான். சுவாமிகள் சர்வாந்தர்யாமியான பரம்பொருளை, ஒரு கல்லுருவிலோ கட்டிடத்திலோ சிறையிடுதல் முழு மூடத்தனம் என்று விளக்கினார். சோடுகிரி தன் கும்பலுடன் வாய் மூடிச் சென்றான். மறுநாள் அதே பேர்வழி தன் குண்டர்களை அனுப்பினான். சுவாமிகள் பொது ஜனங்களுக்கு வேத தர்மத்தை விளக்கினார். குண்டர் இடைப் புகுந்து குறும்பு செய்தனர். எழுந்தார் சுவாமிகள்; "கூலிக்கு மாரடிக்கும் காலிப் படைகளா! போகிறீர்களா என்ன?" என்று இடி முழக்கம் செய்தார். குண்டர் நடு நடுங்கி ஓடினர்.

## 48. வேத பாடசாலை (5—6—1870)

பிரம்மசாரிகளுக்கு வேதமும் சமுஸ்கிரதமும் கற்பிக்க தயானந்தர் மிர்ஜாபூரில் வேத பாடசாலை நாட்டிக் காசியிலிருந்து நூல்களை வாங்கி வைத்தார். தமது மாணவரான ஜுகல்கிஷோர், பலதேவப் பிரசாது முதலியவரை ஆசிரியராக நியமித்தார். படிப்பு ஆறாண்டுகள்; மாணவர் பிரம்மசரிய நிஷ்டையை அனுஷ்டிக்க வேண்டியது. சந்தி ஜபம் ஒழுங்காகச் செய்ய வேண்டும்; தவறினால் சாப்பாடு மண்ணுதான். வழியில் இருக்கும் பூவை எடுத்தாலும் இது திருட்டு என்று சுவாமிகள் தண்டிப்பார். ஆறாண்டுகள் படித்துக் கல்வி முற்ற முடிந்தே வெளியேற வேண்டும். இப்பாடசாலைக்கு குருசரண் சௌத்ரி இடமும் செலவும் தந்தார்.

இந்த வேத பாடசாலையை நல்ல முறையில் நடக்க ஏற்பாடு செய்துவிட்டு, கங்கைக் கரை வழியாகக் காசிக்குச் சென்றார். அங்கே மறுபடியும் வேத விருத்தமான வழக்கங்களைக் கண்டித்தார்; வைதிகரை வாதத்திற்கு அழைத்தார்; யாரும் துணிந்து வரவில்லை. வேதாந்திகள், "உலகமே பொய், நீயும் பொய்" என்று சங்கரரின் விவேக சிந்தாமணியைக் கொண்டு மாயா வாதம் பேசினார்கள். தயானந்தர் உலகம் பொய் என்ற பொய்யைக் கண்டித்து, அதனால் நாட்டுக்கு வந்த தீமையை விளக்கிப் பேசினார்; துண்டுப் பிரசுரம் வெளியிட்டார்.

## 49. காளையை அடக்கிய காளை

காசிகங்ஹில் தயானந்தர் ஒரு வேத பாடசாலை நாட்டி அதில் மனுவும் வேதமும் ரிஷி நூல்களும் போதிக்கத் தக்க ஆசிரியரையும் அமர்த்தினார். வெளியூர் மாணவருக்கு அதில் இனமாகச் சாப்பாடும் நடந்தது. அடிக்கடி பரிசோதகர் மூலம் பள்ளிக்கூட நடப்பை சுவாமிகள் அறிந்தார். ஒருநாள் சுவாமிகள் செல்லும் வழியில் இரண்டு காளைகள் கொம்பால் முட்டிச் சண்டை போட்டன; ஜனங்கள் பயந்து வேறு வழிகளில் சென்றனர். சுவாமிகள், "ஹாம்" என்று பாய்ந்து வெறி பிடித்த மாடுகளின் கொம்புகளைப் பிடித்து விலக்கினார்; காளைகள் இந்த ஆணிக்கு அஞ்சி ஓட்டமெடுத்தன. சுவாமிகளின் பலத்தையும், தைரியத்தையும் ஊரார் மெச்சி வியந்தனர்.

## 50. முகம்மது வியந்தான்

காசிபூரிலிருந்து திடீரென்று புறப்பட்டு சுவாமிகள் அனுப்ஷஹருக்குச் சென்றார். வழியே ஒரு கோயில் பூசாரி "வாரும் தர்க்கத்திற்கு" என்றான்—"இதோ வாரும்" என்றார் சுவாமிகள்; "இரும் வருகிறேன்" என்று சொன்னான் பூசாரி; பிறகு ஆள் மட்டும் வரவில்லை; பயம்! அனுப்ஷஹரில் ராம் லீலா திருநாள் மும்முரமாக நடந்தது; நம்மவர் வேஷம் போட்டுக் குதித்தனர்; ஆண்கள் பெண்வேடம் கட்டி ராம்லாலா காதலால் உருகினர்; சுவாமிகள் நகை ததும்ப இந்த மூடக் கொள்கைகளைக் கண்டித்தார்; தகசில்தார் கலியாண சிங் சீறிச் சினந்து, சையது முகம்மது என்ற தகசில்தாரை அனுப்பி "இந்தக் குறும்புக்காரச் சாமியை விரட்டு வெளியே" என்றார். முகம்மது சுவாமிகளைக் கண்டு பேசினார். சுவாமிகள் புராணப் பொய்களையும், கல் வணக்கத்தையும் கண்டித்தார். வேதாந்திகள் "நானே கடவுள், எனக்கு அன்னியமில்லை" என்னும் அஹம்பாவத்தைக் கண்டித்து, கடவுளுக்குச் சமானமில்லை; அது அரு; தியானமும் தோத்திரமுமே அதை வழிபட வழிகள்—என்று விளக்கினார் இவை முகம்மதுக்கு மிகவும் பிடித்திருந்தன. தகசில்தாரிடம் "அவர் பெரியவர், அறிவாளி" என்று சொன்னார். மறுநாள் முகம்மது வந்தபோது, சுவாமிகள் அக்கால கோர்ட்டுகளின் அட்டூழியங்களையும் அதனால் ஏழைகள் திவாலாகும் கொடுமைகளையும் பற்றிப் பேசி, நமது நாடெங்கும் பஞ்சாயத்து மூலமே வழக்குகளைத் தீர்க்க வேண்டும் என்றார்.

பிறகு நமது நாட்டில் நடக்கும் பசுக் கொலைகளையும், பலி களையும் கண்டித்தார். கங்கைக்கரை நெடுகக் கசாப்புக்கடைகள்! அவற்றினின்று ஆடு மாடுகளின் கொலை - ரத்தமும், எலும்புகளும் கங்கையில் வந்து கலக்கின்றன. அதே கங்கையில் புண்ணியம் என்று குளிக்கிறார்கள். மனிதன் புலாலுணவால் மற்ற உயிர் களுக்குச் செய்யும் கொடுமையும், உருத் தொழுகையால் கடவுளுக்குச் செய்யும் கொடுமையும் ஒழிய வேண்டும்'' என்றார். முகம்மது உணர்ந்தார். "எங்கள் இஸ்லாம் உருத் தொழுகையைக் கண்டிக்கிறது என்றார்.'' "மசூதியையும் காபாவையும் வணங்கு வதும் உருவணக்கமே'' என்றார் சுவாமிகள். சாதிமத வேறுபாடு களைக் கண்டித்தார்.

அனுப்ஷகரில் புதிய உணர்ச்சி யுண்டானது; பலர் உரு வணக்கத்தை ஒழித்தனர்; வேதாந்தத்தைக் கடைப்பிடித்தனர். ஒரு நாள் வைதீகர்கள் சூரியனுக்காக கங்கையில் அர்க்கியம் விட்டனர். "ஐயா, கங்கைக்குத் தண்ணீர் விடுவது முட்டாள்தனம். இதோ இந்த செடிக்குத் தண்ணீர் விடும்; பலனுண்டு'' என்றார். மற்றொரு நாள் ஓர் நாசுகன் அன்புடன் ரொட்டி தந்தான். சுவாமிகள் பிரியமாகச் சாப்பிட்டார். "ஐயையோ அநியாயம்; பிராமணசாமி நாசுகன் ரொட்டியையா சாப்பிடுவது ?'' என்று வைதீகர் கூச்சலிட்டனர். "ஐயா, இது நாசுகன் ரொட்டி யில்லை, கோதுமை ரொட்டி! இந்தச் சாதி வகுப் புப் பித்தமிருக்குமட்டும் நமது சமுதாயம் உருப்படாது'' என் றார். முஹம்மதுக்கு உச்சிக் குளிர்ந்தது.

ஆனல் பகைவர் சேட்டையும பலமானது. வைதீக பிரா மணர் சபித்தனர். ஒரு பிராமணன் வெற்றிலையில் விஷம் வைத் துக் கொடுத்தான்; சுவாமிகளுக்கு மயக்கம் வந்தது; உடனே நௌலிக்கிரியையாலும், தௌதியாலும் விஷத்தை வெளியேற் றினார். முகம்மது அந்த பிராமணனைச் சிறை யிட்டார்' சுவாமிகள் தடுத்து, "சாகெபு, உலகம் மூட மடமை விலங்கால் கட்டுண்டிருக்கிறது; அந்த விலங்கை அறுத்தெறியவே நான் வந்தேன். மூடக் கொள்கைகளுக்கு அடிமையாகி நாடு கெடுகிறது. அதை விடுதலை செய்யவே வந்தேன். ஜனங்களைச் சிறையிடுவது எனது நோக்கமில்லை; விடுதலையே எனது நோக்கம். கொடுமையை நன்மையால் மாற்றுவதே எனது நோக்கம்'' என்று விளக்கி, பிராமணக் கைதியை விடுதலை செய்வித்தார். தயானந்தர் தயானந்தரே!

முகுந்த சிங் என்ற ஜமீந்தார் சுவாமிகள் உபதேசத்தில் ஈடுபட்டு, உரு வணக்கத்தை விட்டதுடன், தனது ஜமீன் கோயில்களில் உள்ள விக்கிரகங்களேயும் கங்கையில் எறிந்தார். தன் ஊரான சலேசருக்கு சுவாமிகளை வரவேற்று உபசரித்தார் (14—11—1870). ஜனங்கள் இரண்டு மைல் வரையில் கூடியிருந்தனர். ஜமீன்தார் பல்லக்கில் ஏறச் சொன்னர்; தயானந்தர் பல்லக்கில் ஏற மறுத்தார்; ஆளை ஆட்கள் சுமப்பது அநீதி என்று நடந்தே வந்தார். உள்ளூர் புலவர்கள் வாதம் புரிய வந்தனர்; பேசாமல் சென்றனர். காசி இஸ்மேயில் ஆலி என்ற இஸ்லாம் பக்தர் சுவாமிகளின் கொள்கைகளை ஏற்றுப் போற்றினர். அந்த ஊரில் சுவாமிகள் ஒரு சமுஸ்கிருதப் பள்ளிக்கூடம் நாட்டி, குமார்ஸென் என்பவரை ஆசிரியராக நியமித்து; பள்ளிக்கூடத்தை நடத்திக் காட்டினர். முகுந்த சிங் அதன் செலவை மகிழ்வுடன் ஏற்றார். இவ்வாறு சென்றவிடமெல்லாம் சுவாமிகள் அறிவும், வேத நெறியும் ஓங்க அரிய பணிகளைச் செய்தார். அவர் பேச்செல்லாம் வேதம். மூச்செல்லாம் பரோபகாரமே. தாம் நாட்டிய பள்ளிக்கூடங்களை அவர் அடிக்கடி வந்து பரிசோதித்து ஒழுங்குறுத்தினர்.

இதன்பிறகு மறுபடியும் காசிக்குச் சென்று புலவரை விவாதத்திற்கு வர அழைத்தார். யாரும் வரவில்லை. சுவாமிகள் வங்காளத்தை நோக்கி நடந்தார்.

## 51. பீஹாரில் பிரசாரம்

16-4-1872-ல் சுவாமிகள் பீஹார் யாத்திரை தொடங்கினர் முகல்ஸராயில் பத்து நாள் தங்கினர். அங்கே ரெவரண்ட் லால் பிஹாரி என்ற கிருஸ்துவப் பாதிரி, "மனிதர் பாவத்தையெல்லாம் கிருஸ்து சுமக்கிறார்; மனிதர் பாவந் தீரவே தாம் பலியானர்" என்றார். "ஐயா, இப்படிச் சொல்லாதேயும், கிருஸ்து தான் எல்லாப் பாவங்களையும் தாங்குகிறாரே; நாம் தாராளமாகப் பாபம் செய்வோம் என்று ஜனங்கள் தீய வழியில் புகுவார்கள். ஒருவர் பாவத்தை இன்னொருவர் தாங்க முடியாது. கிருஸ்து மஹானே, தியாக சீலரே. ஆனல் அவரைச் சுற்றி எழுந்த கட்டுக் கதைகளை நாம் நம்ப முடியாது" என்றார்.

## 52. ஏகமே வாத்வதீயம்

தாம்ரனில் தாராதத்தர் இரண்டு பண்டிதர்களுடன் விவாதத்திற்கு வந்தார். அவர் சிவனுருவை உபாசிப்பவர்; தாந்திரப் பிரியர்.

துர் : சுவாமிகளே கடவுளும் ஆன்மாவும் ஒன்றா வெவ்வேறா?

சுவா : வெவ்வேறு; கடவுளுக்கு இணை எதுவுமில்லை.

துர் : "ஏகம் ஏவ; அத்விதீயம் ப்ரம்ம" என்பதின் அர்த்தம் என்ன? ஆத்மாவும் கடவுளும் ஒன்றே.

சுவா : இல்லை; அந்த வாக்கின் பொருள் ; "கடவுள் ஒன்றே; இரண்டன்று" என்பதே.

பிறகு பிராமணன் பிரம்மாவின் முகத்தில் பிறந்தான்-முதலிய வாக்கியங்களைச் சொல்லிக் கடவுளுக்கு உருவம் உண்டெனப் பண்டிதர் விவாதித்தார். அதே வாக்குகளைக் கொண்டே கடவுள் அரு என்று விளக்கினார் தயானந்தர். வைதிகர் திட்டினர்; ஒருவர் அவரது சமஸ்கிருத ஞானத்தை மெச்சி, ஒரு வேட்டியும் ஐம்பது ரூபாயும் தந்தார்.—சுவாமிகள் இரண்டையும் மறுத்து விட்டு, ஆரா நகருக்குச் சென்றார். அங்கே வேத தருமப் பிரசாரம் செய்தார். ஜில்லா மாஜிஸ்ட்ரேட் எச். டபிள்யூ. அலெக்சாந்தர் சுவாமிகளை உபசரித்து, இந்திய சமுதாயம் ஜாதி பேதத்தால் துண்டு பட்டுத் தளர்வதைக் குறித்தார். தயானந்தர் வேதத்தில் ஜாதியில்லை; வர்ண தர்மமும் குணகர்ம விபாகமே; ஒருவன் பிறவியினால் பிராமணனாகான் ; பிரம்ம வித்தையாலும் ஒழுக்கத் தாலுமே பிராமணனாவான். உண்மையான வேத வாழ்வில் ஒருமையும், அன்பும் துலங்கும்" என்றார். அலெக்சாந்தர் சுவாமிகளின் அறிவுத் திறனை வியந்து போற்றினார்.

டாகாவில் சுவாமிகளைச் சில குதர்க்கிகள் எதிர்த்தனர். தாந்திரிகள் சிலர் தூற்றினர். ஆனால் சுவாமிகள் தைரியமாக பஞ்ச மகார ஆபாசங்களை அம்பலமாக்கினார். துர்கா பாதம் மூர்க்கா பாதம், தர்க்க சங்கிரகம், நரக சங்கிரகம், கௌமதி குமதி என்று நகையாடினார். அவரை எதிர்த்து வாதாட வந்த வைதிகப் புலவர்கள் தமக்குள்ளேயே சண்டையிட்டுப் பிரிந்து சென்றனர். காலத்திற்குதவாத போலிப் பழக்கங்களையும் ஒற்றுமையைக் கெடுக்கும் மூடக் கொள்கைகளையும் சுவாமிகள் கண்டித்து, சமரஸ வாழ்வைத் தாமே வாழ்ந்து காட்டினார். சவுக்கம் கட்டிச் சமைப்பது, தீண்டாமை, பாராமை, வெளிப் பகட்டு இடம்பம், சாதிப் பித்தம், சமய வெறி—இவற்றை யெல்லாம் கண்டித்தார்.

## 53. வெள்ளையன் பணிந்தான்

சுவாமிகள் மாங்கீருக்குப் போன போது, வண்டி நள்ளிரவில் ஜமல்பூர் நிலையத்திற்கு வந்தது. ஒரே கோவணத்துடன்

சுவாமிகள் நிலைய மேடையில் அங்கு மிங்கும் உலாவிக் கொண்டிருந்தார்.

"இந்தக் கோவணாண்டியை வெளியேற்று. என் மனைவிக்கு இந்த அநாகரிக அம்மணக் காட்சி பிடிக்கவில்லை" என்றொரு வெள்ளைக்கார என்ஜினியர், நிலையக்காரருக்கு உத்திர விட்டார். நிலையக்காரர் சுவாமிகளிடம் ஓடி வரும் போதே அவர் தெரிந்து கொண்டார். "ஐயா கோவணத்துடன்—இங்கே" என்று இழுத்தார்.—சுவாமிகள் "அந்த ஐரோப்பியன், முழு அம்மணமாகத் திரிந்ததில் வெட்கப்படாத, ஆதாம்ஏவாளின் சந்ததியே என்று சொல்லும்" என்றார். நிலையக்காரர் (Station Master) "இவர் சுதந்திரத் துறவி; தயானந்த சரஸ்வதி, பெரிய புலவர்" என்று ஐரோப்பியரிடம் சொல்லவே, அந்தத் துரை "ஆ, இவரா அவர், பெரிய சீர்திருத்தத் துறவி!" என்று வியந்து சுவாமிகளை வணங்கி வண்டி நகரு மட்டும் பேசிக் கொண்டிருந்தார். இந்த மாதிரி தைரியம் நமக்கு வர வேண்டும்.

*4—10—1872;* மரங்கீரில் சுவாமிஜீ பலமான வேதப் பிரசாரம் செய்தார். அங்கே ஒரு சாது மடத்தில் தங்கினார். தானே வந்ததைப் புசித்தார்; ஒரு நாள் தம் சமயற்காரன் விறகுக்காக இன்னொருவரைக் கெஞ்சினான். "இனிப் பிச்சை கேட்டால் உங்களை விரட்டி யடிப்பேன்" என்று கண்டித்தார்.

பாகல்பூரில் அகர்வால் மஹாஜன் சுவாமிகளுக்குப் பால் தந்தான்; இரண்டு நாள் ஏற்றார். மூன்றாம் நாள் அதை மறுத்து விட்டார். ஏன்? "ஆண் குழந்தை வேண்டுமென்று இந்த அகர்வால் சாமியாருக்குப் பால் தருகிறான்; பிள்ளை வரம் தர நான் என்ன கடவுளா? இந்த மாதிரி வரத்தை உத்தேசித்து வரும் சாமான்களை ஏற்பது தீது" என்றார். இதைக் கேட்டதும் தன் எண்ணத்தை சுவாமிகள் எப்படியோ அறிந்து கொண்டாரே என்று அகர்வால் வியந்து போனான். சுவாமிகள் பிள்ளை வரத்தை விரும்பிவரும் பெண்களை அனுமதிப்பதில்லை; தாம் இருக்கும் ஜாகையில் பெண்கள் தனியே வரக்கூடாது என்பது கண்டிப்பான கட்டளை. சுவாமிகள் தாம் உண்ணு மிடத்தில் கிறிஸ்துவர் இஸ்லாமியர்களையும் தாராளமாக அனுமதிப்பார் ஆனால் காமசிந்தனை, சுய நலம் இரண்டையும் அனுமதிக்க மாட்டார். ஒரு நாள் உண்ணும் போது ஒரு மௌல்வி உள்ளே வரத் தயங்கினார். சுவாமிகள் "தாராளமாக வாருங்கள்" என்று மௌல்வியை அழைத்து எதிரே அமர்த்தினார். பல கிறிஸ்துவரும் இஸ்லா

மியரும் சுவாமிகளைக் கண்டு உபதேசம் கேட்டனர். அவர் உள்ளூர் பள்ளிக்கூடத்தில் அரிய சொற்பொழிந்து, சிராத்தம், சாதி வேறுபாடு, போலி ஆசாரங்களைக் கண்டித்தார். பர்டு வான் மன்னர் நான்கு பண்டிதர்களை விவாதத்திற்கு அனுப்பினர். பண்டிதர்கள் நியாய சாஸ்திரம் பேசினர்கள்; தயானந்தர் வேத அருவி பொழிந்தார். "சிரத்தையுடன் நல்ல பரோபகாரங்களைச் செய்வது தான் சிராத்தம்" என்றார். பண்டிதர்கள் வந்த வழியே சென்றார்கள். சுவாமிகளின் பிரசங்கத்தை உணர்ந்த ஒரு வாலிபன் முன் வந்து வணங்கி, "இப்படி இந்து தருமத்தை விளக்குவாரில் லாததாலே, நான் கிறிஸ்துவனானேன்" என்று வருந்தினன். சுவாமிகள் அவனுக்கு வேத தருமத்தைச் சொல்லி "அன்பா, பரதர்மத்தில் இருப்பதை விடச் சுதர்மத்தில் இறப்பது மேல்" என்ற கீதாவாக்கியத்தையும் விளக்கினர். சிலர் பண்டாக்களுக்குக் கன்னிகைகளைத் தானம் செய்வதைக் கண்டு வருந்தி, சுவாமிகள் ஒரு நாள் உபவாச மிருந்தார். மறு நாள் புரோகிதப் பண்டாக் களின் சுரண்டல் அட்டூழியங்களையும் போலித்தனங்களையும் அம்பலப் படுத்தி, கல்கத்தாவுக்குப் புறப்பட்டார்.

## 54. கல்கத்தாவில் தயானந்தர்

கல்கத்தா நவ நாகரிகச் சோலை. இந்தியாவின் புதிய இயக் கங்களெல்லாம் அங்கே தான் உருக் கொண் டெழுந்தன. 15—12—1872-ல் சுவாமிகள் கல்கத்தா வந்தார். பிரம சமாஜிகள் வரவேற்றார்கள். ராஜா சுரேந்திர மோஹன் டாகுரின் தோட் டத்தில் தங்கினர். பல அறிவாளர் சுவாமிகளின் வேத தர்மத்தில் ஈடுபட்டனர்.

ஹேமசந்திர சக்ரவர்த்தி நுட்பமான கேள்விகள் போட்டார்.

ஹே: சுவாமிகளே, சாதி வேற்றுமை நாட்டிற்குச் சாபமாக வந்ததே; அதை முன்னோர் ஏன் சம்மதித்தனர்?

தயா: வேதத்தில் சாதி வேறு பாடு கிடையாது. பிறவிக்குச் சாதியில்லை. குண கர்மங்களாலே தான் ஒருவன் மேன்மை பெறுகிறான். அறிந்த புலவனே அந்தணன்; வீரமுள்ள பலவானே க்ஷத்திரியன்; தொழில் செய்பவன் வைசியன், கல்வி கேள்வி யில்லாமல் சும்மா தேகப் பிரயாசையே படுகிறவன் தொண்டன். அவரவர் தகுதிக் கேற்றபடி எந்தப் படியிலும் இருக்கலாம்.

ஹே: சுவாமிகளே, கடவுளைக் காண்ப தெப்படி?

தயா: கண்ணால் காண்பதில்லை; சூக்ஷ்ம புத்தியால் உணரலாம். அஷ்டாங்க யோகத்தாலும் தியான சமாதி சாதனங்களாலுமே கடவுளை உணர முடியும். பதஞ்ஜலியின் யோக தரிசனத்தைப் படியும்.

ஹே: சாங்கியம் கடவுளை ஒப்பவில்லையே; தரிசனங்கள் முரண்படுகின்றனவே?

தயா: சாங்கியம் ஆத்மாவையும், மறு பிறப்பையும் ஒப்புகிறது; அது நாஸ்திகமில்லை. தர்சனங்களில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தத்துவத்தையே போதிக்கிறது: நியாயம் அணுக்களை, பூர்வ மீமாம்ஸம் ஒழுக்கத்தை, சாங்கியம் அணுச்சேர்க்கையை, யோகம் ஆத்ம ஞானத்தை, வைசேஷிகம் காலத்தை, வேதாந்தம் பிரம்மத்தைப் பற்றிச் சொல்லும். ரிஷிகள் வாக்குகளைச் சேர்த்துப் படித்தாலே உண்மை விளங்கும்." இந்த பதில் ஆதிப் பிரமசமாஜியான ஹேம சந்திரருக்குப் பெருமகிழ்ச்சியளித்தன.

## 55. கேசவ சந்திரர்

அந்தக் காலமே இராமகிருஷ்ண பரமஹம்ஸர் காளி கோயிலிருந்து புதிய சமரஸ வேதாந்தத்தை ஆவேசமாக உபதேசித்தார். கேசவ சந்தரசேனர், விஜய கிருஷ்ண கோசாயி போன்ற அறிஞர் அவரிடம் ஈடுபட்டிருந்தனர்.

ஒரு நாள் ஓர் அறிஞர் தயானந்தரைக் கண்டு பேசினார்; பேச்சு ரஸமாயிருந்தது: இடையே அந்த மனிதர் "சுவாமிஜீ நீர் கேசவ சந்திரரைப் பார்த்ததுண்டா?" என்று கேட்டார். "ஆம், பார்த்தேன் பார்க்கிறேன்" அவர் கல்கத்தாவில் இல்லையே—"கல்கத்தாவில் இல்லை; ஆனால் இதோ என்னெதிரில் இருக்கிறார்." என்று புன்னகைத்தார்; வந்த மனிதர் வியந்தார்; அவரே கேசவ சந்திரர்: "என்னை எப்படிக் கண்டு பிடித்தீர்?" என்று கேசவர் கேட்டார்.

"ஐயா உமது பேச்சும் கொள்கையும் விளக்கினவே; உம்மைப் போல் வேறு யார் இப்படிப் புலமையுடன் பேச முடியும்?" என்று சுவாமிகள் மெச்சினார். கேசவர் கிறிஸ்து இஸ்லாமிய வேத மதங்களை ஆராய்ச்சி செய்தார்; தயானந்தரோ வேத தர்மமே தர்மம், அஃது ஒப்புயர் வற்றது என்று விளக்கினர். கல்கத்தாவில் ஒரு சமுஸ்கிருதக் கல்வி சாலை நாட்டவும் முயன்றார். சில அரிய சொற்பொழிவுகளைச் செய்தார். தேவேந்திர நாத

தாகூர் பிரம சமாஜ ஆண்டு விழாவின் போது, தயானந்தரை உப சரித்துத் தமது வீட்டிலேயே இருக்க வேண்டினார்: "துறவி எந்த இல்லிலும் அபிமானித்துத் தங்கக் கூடாது" என்பதை விளக்கி சுவாமிஜீ விடை பெற்றார்.

கேசவ சந்திரர் தம் வீட்டிற்கு சுவாமிகளை அழைத்து உப சரித்து உபதேசம் கேட்டார். ஊரில் பிரசங்கங்களுக்கு ஏற்பாடு செய்தார். கேசவரே சுவாமிஜீயை, ஜனங்கள் அறிந்த இந்தி பாஷையிலேயே பேசும்படி வேண்டினார். அவரும் ஈசுவர சந்தர வித்யாசாகரரும் சுவாமிகளை ஆடையணியச் சொன்னார்கள்; அவரும் உடன்பட்டார். அவர் பிரசங்கத்திற்கு ஏராளமான கூட்டம்! அமிர்த பஜார், தர்மதத்வம், பிரம்மசமாஜப் பத்திரி கைகள் இன்னும் பல கல்கத்தா செய்தித்தாள்கள் சுவாமிஜீயை வியந்து பாராட்டின; அவற்றின் கருத்தைத் தருகிறேன்:—

"சுவாமி தயானந்த சரஸ்வதி கல்கத்தாவில் மூன்று மஹா ப்ரசங்கங்கள் செய்து, வேத தர்மத்தையும், கடவுளுண்மையை யும், மனிதர் கடமையையும் பற்றிப் பேசினார். நீரோடைபோல அவர் ஆரியம் சலசலத் தோடுகிறது. கேள்விகளுக் கெல்லாம் அவர் படபடவென்று பதிற் சொல்லுகிறார். சுவாமிஜீ பெரும் புலவர், யோகி, தினம் ஆறுமணி தியானிக்கிறார். எப்போதும் வேத ஆராய்ச்சியும் உபதேசமுமா யிருக்கிறார். கம்பீரமான தேஜஸ்வி; அவர் சாதாரணத் துறவியில்லை; நாட்டுக்கு வழி காட்டும் மஹான். அவர் நினைவு நிறைவேறுக!"

## 56. ஹூக்ளியில்

1—4—1873; சுவாமிஜீயை ஹூக்ளி மஹா ஜனங்கள் குதூ கலமாக வரவேற்றார்கள். பிருந்தாவன பாபு தோட்டத்தில் சுவாமிஜீ தங்கி; வேதப் பிரசாரம் செய்தார்; சில தர்க்கங்களும் நடந்தன. வர்ணாசிரமம், மூர்த்திபூஜை இரண்டையும்பற்றி நீண்ட நேரம் சுவாமிகள் பேசினார். கல்லூரித் தலைவர் லால்பி ஹாரி தே கூட சுவாமிகளிடம் ஈடுபட்டு அவரது கொள்கையை ஒப்பினார். தாராசரண் தர்க்கரத்னம், சுவாமிகளுடன் விக்ரக ஆராதனையை விவாதித்தார். "உருவில்லாமல் தியானம் கூடாது" என்றொரு வரியை ஒப்பித்து இது பதஞ்சலி வாக்கு என்றார்.

"ஐயா இது பதஞ்ஜலி வாக்கே யில்லை. வாசஸ்பதி வாக்கு" என்று மறுத்தார் தயானந்தர். தாராசரண் வாய் வரிசைகளைப் பலமாகக் காட்டியும் பலிக்கவில்லை. "ஐயா, உரு என்றால் கல்,

தயானந்தர் உடை தரித்தார்



புண்ணிய பூமி புது வாழ்வு பெற்றொளிரத்
தண்ணொளி வீசும் தணல்!

கட்டை, மரம், உலோகம் எல்லாந் தாம். இந்த உரு கண்ணால் காணு மட்டுமே; கனவில் மறந்து போகும். ஒரு மண் பொம்மையைப் பிடித்து வைத்து எல்லாம் வல்ல கடவுள் என்பது கொடிய முட்டாள் தனம்" என்றுசக்கையாக வெளுத்த பிறகு, "உபாஸனு மாத்ரமேவ ப்ரம மூலம்" "மூர்த்தி உபாசனையே வெறும் மயக்கம்" என்று தாரநாதர் இணங்கி விட்டார். பிறகு எல்லாரும் தனியே மாடிக்குச் சென்று பேசும் போது, "எனக்கு உரு வணக்கம் பிடித்தமில்லை; காசி மஹாராஜாவுக்காக நானும் தலையாட்ட வேண்டி யிருக்கிறது" என்ருர். "உமது ராஜாவைவிட உண்மை பெரிது; மனச் சாட்சி பெரிது" என்ருர் தயானந்தர்.

சுவாமிகளின் பரிசுத்த வாழ்வு, கல்வி யோகம், வாக்கு, அன்பு, அறிவு, ஆர்வம், வேதக்கலை, உண்மை ஒழுக்கம்—அனைத்திலும் கல்கத்தா அறிஞர் பெரு மதிப்பு வைத்தனர். சுவாமிகள் பத்து நாட்கள் ஹூக்ளியில் பேசினர். வர்ண தர்மம் தட்டுக் கெட்டதை நகைச் சுவையுடன் விளக்கினர். அழுக்கு மயமான ஒரு சமையல்காரன்; சந்தி ஜபமில்லை; புகையிலை போடுகிருன்—நடத்தை மோசம்; அவன் பிராமணனுக்குப் பிறந்ததால் பிராமணனுவான? மாட்டான். அறிவொழுக்கத்தினலேதான் அந்தண்மை துலங்கும் என்பதை விளக்கினர்.

பர்டுவானிலும் பாட்னவிலும் பிரசங்கம் செய்து சுவாமிகள் சப்ராவுக்கு வந்தார். "முன்னே வரட்டும் பெய்த்து விடுகிரேம்." என்று வீருப்புப் பேசிய பண்டிதப் புலிகள், "வந்தேன்; வாருங்கள்" என்று சுவாமிகள் விவாதத்திற்கு அழைத்ததும் பூனை போல் ஒடுங்கினர். ஜகநாத பண்டிதர் "இந்த வாயாடியைத் தூக்கி யடிப்பேன். ஆனல் விக்ரக தூஷணை செய்யும் இவன் முகத்தைப் பார்த்துப் பேசுவது பாபம் என்று தான் யோசிக்கிறேன்" என்ருர். "ஐயா என் முகத்தைப் பார்க்காமல் திரை போட்டுப் பேசுவோம் வாரும்" என்ருர் சுவாமிகள். வந்தார் பண்டிதர்—அவர் பாஷையிலேயே பிழை காட்டினர் தயானந்தர். பிரதிமா பூஜைக்கு ஆதாரமான ஒரு வேத வாக்கைக்கூடக் காட்ட முடியாமல் பண்டிதர் திணறிப் போய் தோற்ருர்; ஆனல் வைதிகர்கள் கைதட்டி வசை பொழிந்து எழுந்து சென்றனர். இவ்வாறு பீஹார் வங்கப் பிரயாணம் வெற்றி பெற்றது.

## 57. கான்பூர் கூச்சல்

சுவாமிகள் இக்காலம் நல்ல வேட்டி, அங்கவஸ்திரம் (அங்கி யுங்கூட) தலைப்பாகை—எல்லாம் அணிந்தார். "என்ன கோவணச் சாமி குடுத்துணி போடுது" என்றனர் சிலர். "ஐயா நான் எனது தர்மப் பிரசாரத்திற்காக ஐரோப்பியர், முஸ்லிம்கள், பெண் களிருக்கும் வீடுகளுக்குப் போக வேண்டியிருக்கிறது, ஆதலால் தகுந்த ஆடைகளை அணிகிறேன். முன்னே காற்றைப் போலக் கட்டில்லாதிருந்தேன்; இப்போது நூல்கள், எழுதுகோல் காகிதம் எல்லாம் வைத்திருக்கிறேன். அவ்வாறே ஆடைகளும் என்மேல் உள்ளன" என்றார்.

இக் காலம் சுவாமிகள் வேதக் கல்வியைப் பரப்புவதில் கருத் தூன்றினர். மிர்ஜாபூரில் நாட்டிய கலாசாலைக்குப் புதிதாக ரூ. 20 சம்பளத்தில் கஜாதரர் என்ற பண்டிதரை அமர்த்தி, நல்ல முறை யில் கல்வி யளித்தார். சாது ஜவஹர்தாஸைக் கொண்டு காசியில் ஒரு பாடசாலை நாட்டினர். அல்லஹாபாத்தில் வேதகோஷம் செய்து கான்பூர் சென்றார்.

கான்பூரில் பொது ஜனங்கள் வரவேற்றனர். பெரிய ராணுவ மைதானத்தில் மேடை கட்டி பிரசங்கத்திற்கு டாம்டாம் போட்டு, ஜனங்களை வரவழைத்தனர்—ஏராளமான கூட்டம்! கொத்த வால் சுல்டான் அஹமது தடபுடலாக "யார் உத்தரவு மேல் மேடை கட்டிக் கூட்டம் போட்டீர்கள் என்று மிரட்டினன்; கூட்டத்தில் முன்ஸிபும், ஸப்ஜட்ஜு இருப்பதைப் பார்த்து. "உங்க ளுக்காகச் சும்மா இருக்கிறேன்—இல்லாவிட்டால்" என்று ஜில்லா மாஜிஸ்டிரேட்டிடம் புகார் செய்ய ஓடினன். எப்படியாவது கூட்டத்தைக் கலைக்கவே சிலர் முயன்றனர். முன்ஸிப், நன்னுமல், சப்-ஜட்ஜ் க்ஷேத்ரநாதுடன் ஜில்லா மாஜிஸ்ட்ரேட் டேனியலைக் கண்டு விபரம் சொன்னதும், கூட்டம் நடக்கலாம் என்றார் டேனி யல். கொத்தவாலைக் காவல் காக்கச் சொன்னர். கொத்தவால் ஏமாற்றமும் ஆத்திரமும் கொண்டு, கூட்டத்தைக் கலைக்க ஒரு கலாட்டா ஜோடித்தான். பிரித்தாளும் சூழ்ச்சி இங்கே விளங்கி யது. மௌல்விகளையும் பண்டிதர்களையும் தூண்டிச் சத்தமிடச் செய்தான் கொத்தவால். சுவாமிகள் மேடையேறி "இறைவன் ஒருவன்; அருவன்; எல்லாம் தருவோன்; எல்லா உயிர்களுக்கும் தந்தை" என்ற வேத மந்திரத்தைக் கோஷித்தார். உடனே "பிஸ் மில்லாஹி இர்றஹ்மான்" என்று ஒரு மௌல்வியுடன் இஸ்லாமி

யர் கூச்சலிட்டனர். மறுபடியும் வைதீகர் 'விக்கிரகாராதனையே வேத சம்மதம்—போடா பாஷண்டி'' என்று பெருங் கூச்சலிட்டனர். சுவாமிகள் அவர்களுக்கு மேல் குரலெடுத்து, வேதமே சத்தியம் என்றார். உடனே இன்னொரு மேடை போட்டுக் கொண்டு மோஹன்கிரி என்பவர் "மஹா ஜனங்களே, இந்தச் சாமியார் பேச்சைக் கேளாதீர்கள். இவர் ஆங்கிலேயரின் கையாள். உங்களையெல்லாம் கிருஸ்து மதத்தில் சேர்க்க வேதப் போர்வையுடன் ஹம்பக் செய்கிறார்'' என்று பேய்த் தொண்டையால் கதறினர். உடனே கல்லெறி கல்மாரி! சுவாமிகள் அருகே ஒரு பெரிய செங்கல் விழுந்தது. அதைப் பந்து போலத் தட்டி விட்டார். "ஐயா உங்களுக்கு என் பிரசங்கம் வேண்டாமென்றால் வலுவில் திணிக்க மாட்டேன்'' என்று சுவாமிகள் சென்றார்; அப்போது போலீஸ்காரர் "பிரசங்கம் நடக்கட்டுமே; நாங்கள் கூட்டத்தை ஒழுங்கு செய்வோம்'' என்றார்கள். "நல்ல ஒழுங்குதான்'' என்று சுவாமிகள் சென்றார். மறு நாள் ஜில்லா அதிகாரியே போலீஸிற்கு உத்திரவுபோட்டு, கூட்டம் முறையாக நடந்தது. சுவாமிகள் பொது நிலயங்களிலும் நாடக மேடையிலும், க்ஷேத்ரநாத பங்களாவிலும் பல சொற்பொழிவுகளாற்றி வேத தர்மத்தை நிலைநாட்டினார். பலர் சுவாமிகள் உபதேசங்களைப் பின் பற்றி உபநிஷத் படித்தனர். பேச்சை விட சுவாமிகளின் வாழ்க்கையே பலரை வசீகரித்தது. அவர் மூன்று மணிக்கே எழுந்து நடந்து, தேக சுத்தி செய்து கொண்டு சூரியோதயம் வரையில் தியானிப்பதும், பிறகு வேதப்ரவசனம் செய்வதும், மத்தியில் கங்கையில் நீண்ட நேரம் நீந்துவதும், பசி கண்டதும் தூய வுணவு கொள்வதும், புட்களுக்கும் நாய்களுக்கும் மீன்களுக்கும் ரொட்டித் துண்டுகள் தருவதும், இரவில் பால் மட்டும் பருகுவதும், எப்போதும் தியானசீலரா யிருப்பதும், காயத்திரி ஜபிப்பதும், தம் தேவைக்கு மேல் எதையும் வைத்துக் கொள்ளாத எளிமையும், பிரமசரிய வைராக்கியமும் ஜனங்களை வசீகரித்தன. இவ்வாறு கான்பூரில் ஜயக் கொடி காட்டி, சுவாமிகள் லக்னோ சென்றார்.

## 58. லக்னோ டாம் டாம்

லக்னோவில் சுவாமிகள் வந்ததுமே ஒரு சல சலப்பு உண்டானது; வைதிகர் நாடி பட படத்தது. அவர்கள் லாலா கஜாதரப் பிரசாது என்ற செல்வனைத் தூண்டினர். அவன் கங்காதர சாஸ்திரியாரைத் தயார் செய்து தர்க்கம் வைத்தான்; இவர் உள்ளு

காஸிக் கல்லூரியில் ஆரியப் புலவர்; வேத வித்து என்று புகழ் பெற்றவர்.

சுவாமிகள் தர்க்கத்திற்குத் தயாராக வந்து விட்டார். இரண்டு பீடங்கள் ஜோடிக்கப் பெற்றன. சாஸ்திரியாருக்கு உயர்ந்த பட்டு மெத்தைகள் வைத்த பீடம்; சாமிகளுக்குச் சாதாரண வெள்ளைத் துணி போட்ட தாழ்ந்த பீடம். சாஸ்திரியார் பட்டும் சால்வையும் பள பளக்க—வெகு ஆடம்பரமாக வந்து, ஜம் என்று தமது பீடத்தில் அமர்ந்தார். சிஷ்யர்கள் ஜய கோஷத்துடன் அவரை வரவேற்றனர். சுவாமிகள் இயல்பாக வந்து தம் இடத்தில் அமர்ந்தார் சாஸ்திரியார் "வேதத்தில் உருத் தொழுகை உண்டு" என்றொரு வாக்கை எடுத்துக் காட்டினார். "அது எங்கே யிருக்கிறது காட்டும்" என்றார் துறவி. "கல்கத்தா பதிப்பில் இருக்கிறது; உமக்கென்ன தெரியும்? இந்து தருமத்தைக் கெடுக்க வந்தீர்—ஹூ ஹூ"—என்று தடபுடல் சமஸ்கிருதத்தில் கிளம்பி, வசைமாரி பொழிந்தார் சாஸ்திரியார். தயானந்தர், இனி எளிய நடையில், வேத தர்மத்தை விளக்கினார். சாஸ்திரியார் பொறுமை யிழந்து, கடுமொழி பேசி—சீறிச் சினந்து—சட்டென்று எழுந்து விருட்டென்று சென்றார். அவர் சிஷ்யர்கள் "சாஸ்திரிக்கு ஜே! சாமியாருக்கு ஜூ! சாமியார் தோற்றுப் போனார்" என்று கைதட்டிச் சத்தமிட்டு கலாடா செய்து கூட்டத்தைக் கலைத்தனர். லாலா பிரசாது சாஸ்திரிக்கு ஒரு ரதம் தந்தார். அதில் ஏறி "தயானந்தர் தோற்றார்—நான் வேதக் கொடியை நாட்டினேன்" என்று வீண் பறை முழக்கி ஊரைக் கலக்கினார்—சாஸ்திரியார். தயானந்தர் இதுவும் ஒரு கூத்து என்று சிரித்தார்—ஆனால் ஊரில் உண்மையை விளக்கப் புகுந்தார்.

சுவாமிகளின் அருமை யறிந்த பாபுகேதாரி நாதர் ஒரு பெரிய பங்களாவில் பிரசங்கம் வைத்து சுவாமிகளைக் கௌரவித்தார். சுவாமிகள், காசியில் தாம் நாட்டக் கருதிய வேத பாடசாலைக்குப் பணம் வசூலித்துக் கொண்டு, பருகாபாதுக்குச் சென்றார்.

## 59. கிறிஸ்துவர் கையாள்!

பருகாபாதில் ஏகப்புகார்! தயானந்தர் வேதப் போர்வையில் கிறிஸ்து மதப் பிரசாரமே செய்கிறார். கிறிஸ்துவர்களிடம் பெருந்தொகை வாங்கிக் கொண்டே, இவர் இந்துக்களின் உருத் தொழுகையைக் கண்டிக்கிறார் என்று ஊரில் கூச்சல் கிளம்

பியது. ஒரு பெரிய செல்வர் தமது மகள் கலியாணத்திற்குச் செய்த பணிகாரங்களைக் கொண்டுவந்து சுவாமிகளுக்குத் தந்து, தாம் செய்த இடம்பச் செலவுகளையும், பிராமண போஜனங்களையும் புகழ்ந்தார்: சுவாமிகள் "ஐயா இவ்வளவு பணத்தை இடம்பக் கூத்தாடி விட்டீரே. சும்மா சாப்பிட்டுத் தொந்தி தள்ளும் பிராமணருக்கு விருந்து வைத்துப் பலனென்ன? நமது நாடு கல்வி யறிவில்லாது இருள் மூண்டிருக்கிறது; தொழிலறி வில்லாது, சோம்பலும் வறுமையும் மிஞ்சிக் கிடக்கிறதே. அத்தனை பணத்தையும் கொண்டு, வேத தர்மப் பிரசாரத்திற்காக ஒரு பாடசாலை வைத்திருந்தால் நன்மையாகுமே" என்று சொல்லி கலியாணப் பணிகாரத்தையும் திருப்பித் தந்து விட்டார். "பார்த்தீரா, இந்தச் சாமியாருக்கு ஹிந்து தர்மாசாரத்தில் அபிமானமே யில்லை; இவர் கிறிஸ்துவர் உடந்தையே" என்று வைதிகர் மீண்டும் கூச்சலிட்டனர்.

இதன் உண்மையை அறியக் கிளம்பி வந்தார் பண்டித விசுவேச்வர தயாள சாஸ்திரி. சுவாமிகள் நிஷ்டையிலிருந்தார்; நிஷ்டை கலைந்த பிறகு சாஸ்திரியார் கேள்விகளை அடுக்கினார். தயானந்தர் வேதக் கோட்பாடுகளுடன் பதிற் சொன்னார். பிறகு மெல்ல பைபிளைப்பற்றிப் பேசி "ஏசுநாதர் தேவகுமாரரா? கணவனே இல்லாத கன்னி வயிற்றிற் புகுந்து வெளிவந்தவரா?" என்று கேட்டார். சுவாமிகள் இந்தக் கொள்கையைக் கண்டித்தார். மதங்களிற் புகுந்த மூடக் கொள்கைகளையும் போலி நடைகளையும், புராணப் புளுகுகளையும் கண்டித்தார். தூய வேத தருமத்தை உபதேசித்தார். சாஸ்திரியார் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து "தாங்கள் கிருஸ்துவர் கையாள் என்று ஊரில் சிலர் பொய் கட்டி விட்டனர்; இன்றே தாங்கள் வேத ஜோதி என்றறிந்தேன். வந்தனம்" என்று விடை பெற்றுச் சென்றார். அவர் ஊரார் ஐயத்தை மாற்றி உண்மையை விளக்கினார். சுவாமிகள் அங்கே வேதக் கொடியை நாட்டியதுடன் ஊரில் ஆடு மாடுகள் ஆயிரக் கணக்காகக் கொலையுண்பதைக் கண்டித்தார். பசு வதையைச் சட்டத்தின் மூலம் நீக்கச் சொல்லி அவர் உதவி கவர்னரை நேராகக் கண்டு பேசினார். கவர்னரும் அதைப் பற்றி லண்டனிலுள்ள இந்தியா ஆபீஸுக்கு எழுதினார்.

பிறகு சுவாமிகள் காசி கஞ்சுக்கு வந்து வேத பாடசாலையைப் பார்வையிட்டு அதற்குத் தேவையான செழிப்புகளைத் தந்து, அலிகாருக்குச் சென்றார்.

## 60. ஜயகிஷன் தாஸ்

அலிகாரில் ஓர் உத்தம பக்தன் வாய்த்தான், ராஜா ஜயகிஷன் தாஸ். இவன் தயானந்தரை யானைமேலேற்றி ராஜ புத்திரர் குதிரைப் படை சூழ மங்கள வாத்தியங்களுடன் வரவேற்றுபசரித்துத் தனது மாந் தோட்டத்தில் இருக்கச் செய்தான். சுவாமிகள் நல்ல வசதியுடனிருந்து அரிய காரியங்களைச் சாதித்தார். அங்கே மாலை தோறும் வேதப் பிரசங்கம் நடந்தது ; ஊர் முழுதும் கருத்துடன் கேட்டது. புத்திசாகர் என்ற பண்டிதர் பல கேள்விகள் கேட்டு ஐயந் தெளிந்தார். ஸர் சயது அஹமத்கான் சுவாமிகள் கொள்கையை அப்படியே ஒப்பினார். "எங்கள் இஸ்லாமும் வேதத்தைப் போலவே அரு வணக்கம் செய்வது ; இரண்டுக்கும் உரு வணக்கம் உவந்ததில்லை; தாங்கள் பேசுவது மிகப் பொருத்தமானது" என்றார். ஆனால் ஹவனம் செய்வது எப்படிக் காற்றைச் சுத்தி செய்யும்; நெருப்பில் துளி நெய் விட்டால் என்ன பயன்?" என்று கேட்டார். "சாகெபு, ஒரு படி பருப்பு வேகும் போது ஒரு சிறிது பெருங்காயம் விட்டால் கமகமக்கிறதே, அது போல சிறிது நெய் ஹவனம் செய்தாலும், அதன் மணம் சுற்றத்தைத் தூய்மையாக்கும்" என்றார் தயானந்தர்.

ஒரு நாள் சுவாமிகள் அன்பருடன் அமர்ந்து வேத தர்மத்தின் பரிசுத்தத்தையும், பிற்காலம் அதிற் புகுந்த போலித்தனங்களையும் விளக்கினார். அப்போது பங்கியடித்துப் போதை யேறிய ஒரு பைராகி, ருத்ராக்ஷங்களைப் போட்டுக் கொண்டு, நெற்றியில் பட்டை யடித்துக் கொண்டு, 'பம் மஹாதேவா' என்று வந்து "தயானந்தன் யார்? எங்கே யிருக்கிறான்?" என்று கேட்டார். அன்பர் தயானந்தரைச் சுட்டிக் காட்டினர். "இந்தச் சூனிய நெற்றியா? கழுத்தில் ருத்ராக்ஷ மில்லையே" என்று பைராகி முகம் சுளிப்பதை சுவாமிகள் அறிந்து, "என்ன பைராகி, கழுத்து நிரம்ப என்ன?" என்று கேட்டார்.

"என்னவா? ருத்ராக்ஷம்—இதைப் போட்டால் சகலபாவமும் போகும்; அஷ்டைஷ்வர்யமும் கூடி வரும்" என்றார் பைராகி. 'ஐயா ருத்திரன் கண்களைப் பிடுங்கி மாலை போட்டுக்கொண்டீரே—என்ன பாபம்" என்று சிரித்தார். அன்பரனைவரும் சிரித்தனர்.

பைராகி கண் சிவந்து "டே, எனது ருத்ராக்ஷத்தைப் பழித்தாயா! நீ நரகக் குழியில் விழுவாய்" என்று வசை மாரி பொழிந்து சென்றான். சுவாமிகள் போலித் துறவிகளையும் வேஷ

தாரிகளையும் கண்டித்து வேதத் துறவறத்தைத் தெளிவாகச் சொன்னார். "துறவிகள் ஊரை ஏமாற்றிப் பிழைக்காமல், ஊருக்கு அருட் பணியும் வேதசேவையும் செய்தே வாழவேண்டும்" என்று வற்புறுத்தினார். சாமவேத கானம் செய்து அதன் ஆத்மீக உண்மைகளை விளக்கினார். சுவாமிகள் உபதேசம் அன்பர் உள்ளத்தில் பதிந்தது. வேதத்துடன் தேச பக்தியையும் சுவாமிகள் உபதேசித்தார். அன்னிய ஆடைகளை விட்டுச் சுதேசி ஆடைகளை அணியச் செய்தார். டாகுர் பூபால சிங்கர் ஆடம்பரமாக அன்னிய ஆடை அணிந்து வந்தார். "டாகுர், தாங்கள் இனிச் சுதேசி ஆடைகளையே கட்ட வேண்டும், அதனால் நமது நாட்டுப் பணம் நாட்டுக்கே பயனாகும்" என்றார். டாகுர் அவ்வாறே செய்தார்.

1907-ல் காங்கிரஸ் சுதேசிப் பிரசாரம் செய்யுமுன்பே 1874ம் ஆண்டில் அதைச் செய்தார் நமது தீர்க்கதரிசி. ஜயகிருஷ்ண தாஸ் உள்ளம் பூரித்தது. "சுவாமிஜீ, தங்கள் உபதேசங்களை எல்லாம் ஒரு நூலாகத் திரட்டி வெளியிட வேண்டும்" என்றார். "ஒரு சத்திய நூல் உதிக்கும்" என்று சுவாமிகள் உறுதி கூறினார். பிற்காலம் எழுந்த சத்தியார்த்தப் பிரகாசத்தை ஜயகிருஷ்ண தாஸே முழுப் பொறுப்பும் ஏற்று வெளியிட்டார்.

## 61. பிருந்தாவனத்தில் வெற்றி

22-1-1874; சுவாமிகள் ஹாத்ராஸ் வந்தார். ஜயகிஷன்தாஸ் அவருக்கு இருக்க இடம் அமைத்துத் தந்தார். இந்த ஊர் உரு வணக்கத்திற்கும் குண்டர்களுக்கும் பெயர் போனது. சுவாமிகள் விஷ்ணு தயாளு கோயில் தோட்டத்தில் வசித்தார். வந்த நாளே உருத் தொழுகையைப் பலமாகக் கண்டித்தார். கோயில் பூசாரிகள் கொதித்தெழுந்தனர்; பிராமணர் "இந்தச் சாமியார் ஒழிக!" என்று கிளர்ச்சி செய்தனர். குண்டர் பேய்க்கூர லெடுத்தனர். 'எங்கள் பிழைப்புப் போயிற்றே' என்று பண்டாக்கள் மண்டையில் அடித்துக் கொண்டனர். சுவாமிகள் எதற்கும் அஞ்சாமல், ஐந்து நாட்கள் அந்த ஊரில் பொய்யொழுக்கங்களைக் கண்டித்து, வேத தர்மத்தைப் பிரசாரம் செய்து, மதுரைக்குச் சென்றார். மதுரை, வைதிகபுரி என்பது அவருக்குத் தெரியும். ராஜா உதித் நாராயண சிங் அவரை வரவேற்று மரியாதை செய்தார். பாது காவலுக்கு நாலைந்து ஆட்களுடன் உதித் நாராயணன் சுவாமிகளை பிருந்தாவனத்திற்கு அனுப்பினார். மதுரா டிபுடி கலெக்டர் தேவிப்பிரசாதர், பிருந்தாவனத்தில் உள்ள சர்க்கார் உத்தியோ

கஸ்தருக்கு எழுதி, சுவாமிகளுக்குத் தக்க பாதுகாப்பு சௌகரி யங்கள் அளித்தார். இவ்வளவு பாதுகாப்பு எதற்கு?

பிருந்தாவனத்தில் ரங்காசாரி பகல் தீவர்த்தி போட்டுப் பரம குருவாக விளங்கினர். அவர் சிஷ்யன் கரண் சிங்; சுவாமிகளின் ஜன்ம விரோதி; பிருந்தாவனம் தேர்த் திருநாள், கண் கொள்ளாக் காட்சி; வைஷ்ணவ உலகமே அங்கே வந்து கூடும்; பிருந்தாவனத் தில் வசிப்பதே முக்தி என்பது அவர்கள் நம்பிக்கை.

தயானந்தர் இதுதான் சமயமென்று பிருந்தாவனத்தில் வேதக் குரலை உயர்த்தி இடிமுழக்கம் செய்தார். ஒவ்வொரு நாளும் மாலை நான்கு மணி முதல் 6 மணி வரையில் பிரசங்கமும் தர்க்கமும் நடத்தினர். விக்கிரகாராதனை, நெற்றிப் பொட்டு, துளசி மாலை, புராணப் புளுகு அனைத்தையும் வேத விருத்தம் என்று கண்டித்தார். அரங்காச்சாரிக்குக் கடிதம் எழுதித் தர்க் கத்திற்கு அழைத்தார். திருவிழாவுக்குப் பிறகு வருவதாக அவர் பதிலெழுதினர். தயானந்தர் பிரசங்கத்திற்குத் திரளான ஜனங் கள் கூடினார்கள். ராஜா உதித் நாராயண சிங் கருத்துடன் கேட்டார். கேட்டு வரும் போது, காரண் சிங் வழி மறித்து, "அந்தப் பாஷாண்டி பேச்சை என் கேட்டீர்?" என்று தயானந்த ரைத் திட்டி நொருக்கினன்; ராஜா "எனது குருவைத் தூற்றினல் விழும் உதை—உஷார்" என்று எச்சரிக்கைச் செய்தார். கரண் சிங் அத்துடன் அடங்கிப் போய் அரங்காச்சாரியைத் தூண்டினன்.

திரு நாள் முடிந்தது; தயானந்தர் தயாரானர். ஆனல் ரங்காச் சாரி எங்கே? நோய் என்றனர்; நோய் தீரட்டும் என்றிருந்தார் சுவாமிகள். ஆனல் நோய் அரங்காச்சாரியை வைகுண்டத்துக்குக் கொண்டே போய் விட்டது! அவரைத் தயானந்தர் வென்றிருந் தால் பெரிய காரியம் சாதித்திருப்பார். பிருந்தாவனத்தில் வைதி கப் புலிகள் கல்லும் மண்ணும விட்டெறிந்தும், சுவாமிகளின் சண்டமாருதம் நல்ல பயனளித்தது. ஜயகிரி சன்யாசி போன்ற வர்கள் உருக்கலைத் தூக்கி யெறிந்தனர். அரசரும் கோசாயிகளும் தயானந்தர் பேச்சைக் கருத்துடன் கேட்டுப் புத்துணர்ச்சி பெற் றனர். பலர் வேத வழி நாடினர். அரங்காச்சாரி சிஷ்யர்களின் எதிர்ப் பிரசாரமும் மிரட்டலும் பலிக்க வில்லை. சுவாமிகள் ஜயக் கொடி நாட்டி மதுரைக்கு வந்தார் (14-3-1874). ஆனல் மதுரை யில் பகைவர் தொல்லை அதிகரித்தது. ஒரு நாள் பிரசங்கம் நடந்த போது, சுவாமிகளை அவமானப் படுத்தவே பகைவர் ஒரு சாராயக்

கடைக்காரனையும் கசாப்புக்காரனையும் அனுப்பினர். இருவரும் "சாமியாரே உமது சாராயக் கணக்கைத் தீரும், கறிக் கணக்கைத் தீரும்;" என்று கூச்சலிட்டனர். பிரசங்கம் முடிந்ததும் தயானந்தர் இருவர் தலைகளையும் பற்றி "உங்கள் கணக்கை இதோ தீர்க்கிறேன்" என்று மோதி உடைத்தெறியப் போனார். "ஐயோ சாமி! மாப்பு! இனி உங்களிடம் சேட்டை செய்ய மாட்டோம்; எங்களை இன்னார் அனுப்பினார்." என்று சொல்லி ஆட்கள் தப்பித்துக் கொண்டார்கள். சுவாமிகளை வாளாலும் ஈட்டியாலும் குத்திக் கொல்ல முரடர் சூழ்ச்சி செய்தனர்: நேரே வந்து மிரட்டினர். வைதிகர் கூச்சலிட்டனர். ஒன்றும் பலிக்க வில்லை. மதுரையில் ஜயக் கொடி நாட்டி, சுவாமிகள் முரசானுக்குச் சென்றார். முரசானில் மண்டைக் கருவம் பிடித்த பண்டிதர்களுக்குச் சரியான பதிற் சொல்லி விட்டு, சுவாமிகள் வேதப் பிரசாரம் செய்து கொண்டே காசிக்குச் சென்றார்.

## 62. இந்தியில் பேசினார்.

காசி தசாஸ்வமேத கட்டிடத்தில் தயானந்தர் வேத பாடசாலை நாட்டினார். அதற்குப் போதிய பணமும் வசூலித்துத் தந்து தக்க வித்வான்களையும் ஆசிரியராக நியமித்தார். அஷ்டாத்யாயி, நிகண்டு, நிருக்தம், தாது பாடம், பூர்வ மீமாம்சம், வைசேஷிகம் நியாயம், பதஞ்சலி, வேதாந்தம், தசோப நிஷத்து, மனு ஸ்மிருதி, காத்யாயன கிருஹ்ய சூத்திரங்கள், வேதம்—இவை பாடசாலையில் கற்பிக்கப் பட்டன. சாதி வேறுபாடு கிடையாது; எல்லாரும சேர்ந்து படிக்கலாம். சுவாமிகள், காசி சப்ஜட்ஜான சய்யது அஹமதுகான் பங்களாவில் பிரசங்கம் நடத்தினார். கலெக்டர் ஷேக்ஸ்பியர் சுவாமிகளைக் கண்டுபேசினார். இஸ்லாமியரும் கிருஸ்துவர்களும் கூட சுவாமிகளின் வேத விளக்கத்தைப் போற்றினர். காசியில் ஒரு மாதம் தங்கி சுவாமிகள் பிரயாகைக்குச் சென்றார்.

பிரயாகையில் வீராவேசப் பிரசங்கங்கள் முழங்கின; கல்லூரிப் புலவர் காசி நாத சாஸ்திரி, மாக்ஸ்முல்லர் விரிவுரையை வைத்துக் கொண்டு, வேதத்தில் இயற்கை வணக்கம், அக்னி, சூரிய வணக்கம் உள்ள தென்றார். தயானந்தர் அதை மறுத்து, சும்மா பாஷை தெரிந்தால் போதாது, வேத தர்மானுஷ்டான மில்லாமல் எழுதிய விரிவுரைகள் பேபல்கோபுர - வேலையாகத்தான் முடியும் என்றார். பண்டிதப் புயல் மறுபடி வீசியது. அவர்கள் கல்லைத் தொழுவதால் மூளையும் கல்லாகி, உண்மை யறிவே நுழைய மாட்டேனென்கிறதே என்று தயானந்தர் வருந்தினார். தயானந்த

ரைப் பார்ப்பதே பாபம் என்று பகைவர் அச்சடித்து வழங்கினர். அதுவே பெரிய விளம்பரமாய், ஆயிரக்கணக்கான பேர் அவரைப் பார்க்க நெருங்கினர். ஆனால் சுவாமிகள் தம்மை அவதாரம் குரு என்று யாரும் வணங்கச் சம்மதியார். "இந்தப் பொய்த் தொழுகையால் ஒரு பயனு மில்லை; ரிஷி ஞானத்தைச் சாதனஞ் செய்து பயன் பெறுங்கள்" என்று வற்புறுத்தினர். கோஷாபடுதா, பெண்ணடிமை, சாதகம், புரோகிதம், பண்டாரமாயம்—அனைத்தையும் கண்டித்து, யாரும் யாருக்கும் அடிமையில்லாமல், எல்லோரும் தலை நிமிர்ந்து நடக்கச் செய்தார் தயானந்தர். இதெல்லாம் பிடிக்காத எதிரிகள், மீண்டும் தயானந்தரைக் கொல்லத் துணிந்தனர். ஒரு நாள் தயானந்தர் அன்பருடன் பேசிக் கொண்டிருந்தார். சட்டென்று "இதோ ஒரு வேடிக்கை" என்றார். ஒரு சிறுவன் பரம பக்தியுடன் மிடாய் கொண்டுவைத்து, "சுவாமிகள் உடனே சாப்பிட வேண்டும்" என்றான். "அப்பனே! நீ கொஞ்சம் சாப்பிடு, பிறகு நான் உண்பேன்." என்றார். ஆசாமி விழித்தான்; ஒரு நாய்க்கு ஒரு துண்டு எறிந்தார்; நாய் தின்று மயங்கி விழுந்தது. இந்த மிட்டாய் விஷங்கலந்தது என்று விளக்கினர்.

அந்த ஆளைக் கைது செய்ய வேண்டுமென்றனர் அன்பர். தயானந்தர் அவனை மன்னித்து, தர்மோபதேசம் செய்தனுப்பினர். இக்காலமே தயானந்தர் உப்பு வரி கூடாதென்று சில அதிகாரிகளிடம் பேசி வந்தார். மகாத்மாஜீ பிற்காலம் உப்பு மறுப்பு இயக்கம் நடத்தினர். ஒரு நாள் ஒரு சாமியார் "ஐயா, பிறருக்கு நன்மை செய்வதைவிட்டால் உமக்கு மோட்ச முண்டு" என்றார். 'ஐயா, நான் என் மோட்சத்தைப் பற்றிக் கவலைப் படவில்லை; இந்த ஜனங்களின் வறுமை, பிணி, துயர்களைக் கண்டு நான் வருந்துகிறேன். இவர்களுக்குத் தொண்டு செய்வதே என் கதிமோட்சம். அதற்காக நான் எத்தனை பிறவி வேண்டுமானாலும் எடுக்கத் தயார். பொது ஜனங்கள் சுதந்திரம் பெறும் போது நானும் முக்தி பெறுவேன்" என்றார் கரும யோகி.

சுவாமிகள் இக் காலம் இந்தியிலேயே பேசியதால், கூட்டம் அதிகமாக வந்தது.

1874-ல், அக்டோபரில் சுவாமிகள் ஜபல்பூருக்கு வந்தார். சர்க்கார் கமிஷனர் கிருஷ்ண ராவ் சுவாமிகளை அன்புடன் உபசரித்தார். அவரே சுவாமிகளுக்கு நல்லுடைகள் தந்து, அணியச் சொல்லிப் புகைப் படம் பிடித்தார். அன்று முதல் சுவாமிகள் உலகுடன் ஒத்து, நல்ல ஆடைகளை அணிந்தார்.

சுவாமிகள் நாசிக் பஞ்சவடி முதலிய தலங்களுக்குச் சென்று மூடக் கொள்கைகளைக் கண்டித்து தூய அரிய தருமத்தை விளக்கினார். ரிஷி ஞானத்தின் பெருமையைச் சொன்னார். நாசிக் மஹா ஜனங்கள் சுவாமிகளுக்கு ஆடைகள் தந்து மரியாதை செய்தார்கள்- இந்துப்பிரகாசம் அவரை மிகவும் புகழ்ந்தது.

## 63. ரூபாய் 1000

"சேர்ந்து செல்க ; சேர்ந்து மொழிக ; உங்கள் மனம் ஒன்றுருக ; கொள்கை பொதுவாகுக ; எல்லாரும் இன்புற வேண்டி உங்கள் உள்ளம் ஒன்றுருக, நன்றுருக."

இது வேத வாக்கு; வேதம் பிரிவினையை ஒப்புவதில்லை; வகுப்பு வாதம் வேதத்தில் கிடையாது. கண்மூடித்தனமான பழக்கவழக்கங்கள் இல்லை. நமது சமுதாயத்தைக் கெடுத்துக் கேலிக் கூத்தாக்கிய பிரிவினைக் கூத்துகளெல்லாம் பிற்காலம் எழுந்தவை. அவை நமது நாடு அன்னியருக்கு அடிமையானதால் வந்த தீவினைகள். நம் உறக்கத்தின் மேல் படர்ந்த விஷப்பூண்டுகளே அத்தீமைகள். அவற்றைப் பறித்தெறிந்து, பாரத சமுதாயத்தை ஆத்ம தீரர்குலமாக்க எழுந்த ஒருவர் மஹாத்மா தயானந்த சரஸ்வதியே.

தயானந்தரின் இடிமுழக்கத்தைக் காசியில் கேட்டார் அத்வைதி ஜானகிராமதாஸ். உடனே அவரை பம்பாய்க்கு அழைத்துப் பிரசாரம் செய்ய ஏற்பாடு செய்தார். அவருடன் லக்ஷ்மணதாஸ், தர்மாசி முதலிய அன்பர் ஒத்துழைத்தனர்.

தயானந்தர் என்றதுமே வல்லபக்கும்பல் பதறிப் போனது ; "டே ! இவர் சந்யாசி வேஷம் போட்ட அசல் வெள்ளைக்காரன், நம்பாதே ! இவன் பாதிரிமார் கையாள் ; சமுஸ்கிரதம் பேசிச் சிலுவை மாட்டும் மிஷநரி, விஷமநரி—இவன் பக்கா ஆசாமி—நானா சாகெபுவின் ஆள்—புரட்சி செய்துவிட்டு, போலீஸை ஏமாற்ற இப்படி வேடம் போடுகிறான்" என்றெல்லாம் புளுகு மூட்டைகளைக் கட்டி விட்டனர். எதிரிகள் முதன்மையாக வைணவர்கள், கொடிய விரோதிகளானார்கள். கூட்டங்களில் பேய்க்கூரலெடுத்துச் சத்த மிட்டனர். சுவாமிகள் எதற்கும் அஞ்சவில்லை.

நீச்சு வீரன் வெள்ளத்திற்கு அஞ்சுவானா? எதிர்ப்பு வந்து மோத மோத சுவாமிகளின் உற்சாகமும் அதிகரித்தது. முடிவில் வல்லப குரு கோஸ்வாமி ஜீவன்ஜீ, தயானந்தரைக் கொலைசெய்யத் துணிந்தான். அவன் சுவாமிகளின் பரிசாரகன் பலதேவனுக்கு, ஐந்து ரூபாயும் ஐந்து சேர் மிடாயும் தந்தான். "பலதேவ், உன்

எஜமானனைக் கொல்; ஆயிரம் ரூபா கைமேல்" என்று எழுதித் தந்தான்.

பலதேவன் வந்ததுமே சுவாமிஜீ விஷயத்தை அறிந்தார். அவர் முகத்தைப் பார்க்கும் போதே ஆள் நடுங்கிப் போனான். மனச்சாட்சி படபடத்தது.

சு. பலதேவா! கோசாமியிடம் போனாயா?

பல. ஆம், மஹராஜ்.

சு. அவன் என்ன சூழ்ச்சி சொன்னான். இந்த மிட்டாய் தந்தானாக்கும்.

பல. ஆம், மஹராஜ். இந்த நஞ்சு மிடாய் தந்து தங்களைக் கொன்றால், ரூ. 1000 தருவதாக இதோ எழுதித் தந்திருக்கிறான்.

சுவாமிகள் அந்தக் கடிதத்தை மளக்கென்று போலீஸில் காட்டினால் ஜீவன்ஜீ கண்ணன் பிறந்த இடத்திற்குப் போவார். மகா கருணாமூர்த்தியான தயானந்தர் "பலர் நஞ்சுவைத்தனர்; என்னை முன்னே நஞ்சு ஒன்றும் செய்யவில்லை; இன்னும் ஒன்றும் செய்யாது" என்று கடிதத்தைக் கிழித்தெறிந்து, இனி அந்த இடத்திற்குப் போகாதே" என்று நிறுத்தினார். பலதேவன் சுவாமிகள் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டான். விட்டானா ஜீவன்ஜீ—இருபது பணியாட்களை அனுப்பினான். பணியாட்கள் வைது திட்டித் தாக்கினர்; சுவாமிகள் சிரித்து விரட்டினார். மறுபடியும் சில பரமதடி குண்டர் வந்து தடிசுழற்றினர்; பயில்வான்சாமி ஒரு ஹுங்காரத்துடன் "என்ன செய்தி—வாருங்கள்—" என்று முண்டாத் தட்டினார்; குண்டர் பயந்து பறந்தோடினர்—ஆ இப்படி இந்தக் கால அதர்ம குண்டர்களை எதிர்க்க ஹிந்து சமுதாயம், பலம் பெற்றிருக்க வேண்டும்! பலம், வீரம், தைரியம், திண்மை, உண்மை—இவையே நமக்கு வேண்டும். இவையே வேத ரிஷிகள் வளர்த்த செல்வம்.

## 64. நண்பர் பகை

"என் வழிக்கு வா, இன்றேல் சா" இதுதான் உலகின் பிடிவாதம். பெரிய பெரிய மூளைகளில் கூட இந்தப் பிடிவாதம் புகுந்து வம்பு செய்கிறது. இந்து ஜாதி வேற்றுமைக் கந்தலானதற்கு, இந்தப் பிடிவாதமே காரணம். சுவாமிகள் சொல்லும் உண்மையை அறியாத பலர் பகைவரானர். சுவாமிகளை பம்பாய்க்கு அழைத்து வந்த ஜயகிஷன் ஜீவன்ராம் அத்வைதி;

ஏகாத்ம வாதி; ஜீவ ஜக பரம் ஒன்றென்பவர்; அஹம் ப்ரம்மம், அகங்கார ப்ரம்மமாகி, வாய்ச் சண்டை போட்டுப் பொழுதைக் கொலை பண்ணுவதில், சுவாமிகளுக்கு அருவருப்புண்டு. அவர் கடவுள் ஒப்புயர்வற்ற ஒன்றே; மனிதன் கடவுளுக்கு நிகராக முடியாது—என்று விளக்கினர்—அஹம் பிரம்மக் கும்பலுக்குக் கண் சிவந்தது. ஜயகிஷன் நானே பிரம்மமா யிருக்கும்போது எனக்கு அன்னியமே கிடையாது 'நான் நானே, நானே நான்' என்று கிளம்பி, சுவாமிகளைத் தூற்றினன். அறிஞரையும் பத்திரிகைகளையும் அவரைத் தாக்கி யெழுதத் தூண்டினன்.

டாக்டர் பண்டர்காரும் விஷ்ணு பரசுராமும்—பம்பாயில் இரண்டு வட மொழிப் புலவர்; இருவருக்கும் உருத் தொழுகையில் நம்பிக்கை யில்லை—பிரம்ம சமாஜிகள்; ஆனல் வேதம் பல தெய்வங்களை வணங்குகிறது என்றே நம்பி, அதையும் அருள் வாக்காக ஒப்பவில்லை. இருவரும் தயானந்தரைக் கண்டனர். தயானந்தர் பண்டார்கரின் கலைத் தொண்டை மெச்சினர். ஆனல் பண்டர்காரின் "மார்க்க உபதேசிகையில்" குற்றம் கண்டுபிடித்தார். அவருக்கு வேதம் அருள்வாக்கே என்றும் விளக்கினர். விஷ்ணு புருஷராம் உரு வணக்கத்தின் எதிரி; மாதர் மறு மண நண்பர்; வேதமாவது கீதமாவது—எல்லாம் பழைய உளுத்துப் போன ஏட்டுச் சருகுகள்—என்று பேசுகிறவர்; முன் கோபப் பேர்வழி. தயானந்தர் இருவரையும் எதிர்த்து வாதாடி, வேதம் ஒரே கடவுளையே போற்றுகிறது—என்று விளக்கும்போது, விஷ்ணு புசுக்கென்று முன் கோபத்தைக் காட்டி "சீ! சீ!! கோவணாண்டி; உனக்கென்ன தெரியும்?" என்று திட்டத் தொடங்கினர். இந்தப் பிரகாசத்தில், கார சாரமாகத் தீட்டி விட்டார். "இந்தச் சாமியார் வெறும் போலி; ஹம்பக், அவர் சொல்வதெல்லாம் முழுப் புளுகு—இத்யாதி இத்யாதி..."

இந்தச் சலசலப்புக்கெல்லாம் சிங்கம் அஞ்சுமா? கௌவாஸ்ஜீ ஹாலில் தயானந்தர் வேதகர்ஜனை செய்தார் (25-12-1874). இரண்டு மணியிலிருந்து ஆறு மணி வரையில், இடி முழக்கம் செய்தார். விக்ரக ஆராதனையைப் பலமாகக் கண்டித்தார். தற்காலம் அரை குறை ஆங்கிலம் படித்து, வேத ரிஷிகளை அலட்சியம் செய்யும், அன்னிய மோகம் பிடித்த, ஹாட் பூட் பேர்வழிகளுக்குச் சாட்டை கொடுத்தார். வல்லபாசாரிக் கும்பல் விசார சாஸ்திரி என்பவரை, அசம்பாவிதமான கேள்விகள் கேட்கத் தூண்டியது. சுவாமிகள், கேள்விகளுக்குச் சரியான பதில் சொல்லும்போதே,

சொல்லுக்குத் தோற்ற குண்டர்கள், மல்லுக்குக் கிளம்பித் தடியைச் சுழற்றினர். சுவாமிகள் அதற்கும் தயாராகத்தான் நின்றார். அதற்குள் ஹால் மானேஜர் விளக்கை அணைத்தார்; சுவாமிகள் தந்திரமாகத் தப்பிச் சென்றார். குண்டர்கள் "இதோ சாமியார், அதோ சாமியார், அடிடா—முட்டுடா" என்று தடிகளைக் கொண்டு, நாலுமூலைத் தாக்கி விளையாடினர். தடி அவர்கள் மண்டையைப் பிளக்கத் தொடங்கியது, எல்லாரும் விழுந்தடித்தோடினர். சாமியாரைக் காணாது, குண்டரும் ஏமாந்து சென்றனர். விசார சாஸ்திரி "எப்படியானாலும் சாமியார் சாமியார்தான். அவரைப் போல் யாரும் பேச முடியாது" என்று வியந்தார்!

சாமியார் தடிக்கும் பயப்பட வில்லை. குண்டர்களுக்கும் பயப்படவில்லை. எதிரிகள் கலாட்டா பண்ணப் பண்ண, அவருக்கும் உற்சாகம் உச்சிக் கேறியது. மறுநாளும் அதே இடத்திற் கூட்டம் போட்டு "ஆரியர் மாட்சியும், வீழ்ச்சியும், எழுச்சியும்" என்பதைப் பற்றிச் சொல் மழை பொழிந்தார். அதில் இந்து மதத்தில் படர்ந்த புல்லுருவிகளையும், போலித் துறவிகளையும், குரு பீடங்களின் சுக போக லீலைகளையும் நகை ததும்ப வர்ணித்தார்:

"ஹே, இந்து சமுதாயமே, வேத தர்மத்தை இழந்த ஏழையே, நீ எத்தனை புல்லுருவிப் புரட்டர்களால், கொடுமையாக வருந்துகிறாய்! கடவுள் பெயரைச் சொல்லிப் போலிக் குருமார் உன்னைச் சித்திர வதை செய்து தீர்த்தனர். எத்தனை பிச்சைத் துறவிகள்! எத்தனை அகங்கார பீடங்கள்; எத்தனை வகுப்புவாதங்கள்! எத்தனை காஷாய மொட்டைகள்! ஒரு பயனுமில்லாமல் ஊர்ச் சோற்றைத் தின்று சோம்பல் கொளித்துத் தூங்கும் இவர்களால், சமுதாயத்திற்கு என்ன பயன்? வேதத்தில் ஓர் வரி தெரியாதவர்கள், புராணப் புரட்டுகளைச் சொல்லி, வயிறு வளர்க்கிறார்கள். அற்புதப் புருடாக்களை அவிழ்த்து உதறிப் பாமர ஜனங்களின் கண்ணைக் கட்டிக் காசு பறிக்கிறார்கள்! தேசம் நாசமாகிறது! ஆரிய ஜாதி மந்தை மந்தையாகப் பிற மதம் புகுவதைப் பாருங்கள்! பொது ஜனங்களுக்கு வேத தர்மத்தைச் சொல்லி, அவர்களை ஆரிய சமாஜத்தில் திருப்பி ஆதரிக்க நாதனில்லையே—எங்கும் போலித்தனங்கள். பொறாமைச் சண்டைகள்; சமுதாயத்தில் ஆயிரம் மூடக் கொள்கைகள்; கல்வியில்லாத மடமை; ஹா! ஆரிய வர்த்தமே—எப்படி யிருந்தாய்; நீ எப்படி வீழ்ச்சி யடைந்தாய்!"

இவ்விதமான ஆவேசப் பேச்சு, சிலர் நெஞ்சைத் தொடாமல் இல்லை; ஆனால் பலர் நெஞ்சு இன்னும் கல்லாகவே யிருந்தது. சிலர் விக்கிரகங்களைத் தூக்கி மும்பாதேவிக் குளத்தில் எறிந்தனர்; சேவக்லால் என்பவர் தமது விக்கிரகங்களைச் காட்சி சாலைக்கு அனுப்பி விட்டார். மறுநாள் தயானந்தர் பிரமசரிய குருகுலக் கல்வியைப் பற்றி, மிக வுருக்கமாகப் பேசினார்—"தற்காலக் கல்வி பரதர்மச் சூழ்ச்சி; அது ஆங்கில ஞானம் தருகிறது. சுதேச பாஷையையும் கலைகளையும் மறக்கச் செய்கிறது. அடிமை வேலைக்கு ஆட்களைத் தயாராக்குகிறது. இது நமது வாலிபர் சக்தியைப் பிழிந்து உறுஞ்சுகிறது; வெறும் சக்கை - மனிதரையே காண்கிறோம். தற்காலம் ஆங்கிலம் வேண்டியதே—ஆனால் அதற்கு நமது வேதக் கலையை பலியிட முடியாது. ரிஷி ஞானத்தைப் பெறுங்கள்; பிரமசரிய குருகுலங்களை நாட்டுங்கள்; வீர தீர பராக்ரம சாலிகளை உண்டாக்குங்கள்." சுவாமிகள் செய்த அரிய சொற் பொழிவுகளின் சாரம், பம்பாய் கஜெட்டில் வந்தது. அதைக் கண்டு, அப்போது பரோடா திவானாயிருந்த, நமது தமிழ் நாட்டு அறிஞர் ஸர். டி. மாதவராவ் வந்து சுவாமிகளைக் கண்டார். இவர் ஹெர்பர்ட்ஸ்பென்ஸரைக் கரைத்துக் குடித்து ஆங்கில மோகங் கொண்டிருந்தார்; சுவாமிகள் இவருக்கு வேதக் கலையையும் ரிஷி ஞானத்தையும் உபதேசித்தார். மாதவராவ், "இது காறும் அறியாதன அறிந்தேன்—என் விழி திறந்தது" என்று சுவாமிகளை வணங்கினார்.

ஐயகிஷன் போலவே, இச்சாராம் அத்வைதி; இவர் "சுவாமிகளே! யோக வாசிஷ்டத்தைவிட, உமது உபதேசம் பெரிதா? சங்கரரைவிட நீர் பெரியவரா? அத்வைதமே உண்மை; என்ன சொல்லுகிறீர்?" என்றார். "இச்சாராம், நான் யாரையும் விடப் பெரியவன் என்று சொல்லிக் கொள்ளவில்லை; யாரையும் என் காலில் விழச்சொல்லவும் இல்லை; நான் குரு பீடத்தையும் விரும்பவில்லை. ஆனால் நான் கண்ட உண்மையை எல்லாருக்கும் சொல்ல எனக்கு உரிமையுண்டு; நான் வேத ரிஷிகளையே ஆதாரமாகக் கொண்டவன்" என்று சுவாமிகள் ஒரு நூல் எழுதினார். இரண்டு மாதங்கள் ஆராய்ந்தெழுதி "வேதாந்த த்வந்த நிவாரணம்" உருவானது. அத்துடன் முதல் இரண்டு வேத மந்திரங்களுக்கும் விரிவான பாஷ்யமும் எழுதினார்; "இவற்றை ஆட்சேபிக்கும் பண்டிதர்கள் வாருங்கள் விவாதத்திற்கு" என்றும் அழைத்தார்; யாரும் முன் வரவில்லை. ஆனால் வல்லபாசாரி மட்டும் பின்னால் ஒளிந்து வந்தார்—எதற்கு?

## 65—200 ரூ. குண்டர் !

இரவு; சுவாமிஜீ வேத ஆராய்ச்சி செய்கிறார்; சேத் சேவக்லால் கர்ஷன்தாஸ் அருகே யிருக்கிறார்; எங்கும் மௌனம், கதவு மெல்லத் திறந்தது; இரண்டு கறித்தலைகள் எட்டிப் பார்த்தன. இரண்டு குண்டர்கள் மெல்லப் புகுந்தனர்! அவர்கள் கையில் வாள் பளபளக்கிறது! "பகடோ"என்றான் ஒரு குண்டன்! சுவாமிகளும் பகடோ என்று வாயெடுத்தார்; சேவக்லால் குண்டரைச் சட்டென்று பிடித்துக் கொண்டார். சிறிது தாமதித்திருந்தால் வாள் கழுத்தில் பாய்ந்திருக்கும். "ஹூம்!" என்று சுவாமிகள் ஒரு சிங்கப் பார்வை பார்த்தார்; குடிகாரக் குண்டர் " அப்ப அப்ப மன்னிச்சிடுங்க" என்று கெஞ்சினர். " ஹூம்" எங்கு வந்தீர்கள்? யார் அனுப்பியது? சொல்லுங்கள் உண்மை!" என்றெழுந்தார் தயானந்தர். "சாமி அந்த படுபாவி வல்லபாசாரிதான் அனுப்பினான்" "எதற்கு?" "சாமி தலையை கொண்டு வர" "எவ்வளவு தந்தான்?" "ரூ. 200" "ஹ! ஆரிய சமுதாயமே! உன் மனம் எப்படிக் கெட்டுப் போனது! ரூ. 200-க்காக ஒரு சாதுவைக் கொலை செய்யத் துணியும் உன் கொடுமை என்னே" என்று தயானந்தர் வருந்தினார். குண்டர் " சாமி, இனி இந்தப் பக்கமே வரமாட்டோம்" என்று ஓடி மறைந்தனர். மறுநாளே சுவாமிஜீ வல்லபர் வண்டவாளங்களை யெல்லாம் அம்பலப்படுத்தி "வல்லபாசார்ய மத கண்டனம்" என்ற நூலை எழுதி, நிரணிய சாகர அச்சகத்திலிருந்து வெளியிட்டு, பம்பாய் முழுதும் பரப்பினார். ஜீவன்ஜீயின் வாளைவிட, தயானந்தர் சொல்லே பொய்யைக் கொன்று, உண்மையை நிலைநாட்டி, மூடமதத்தை வென்று, வேத தருமம் நின்று நிலைக்கச் செய்தது. அதைப் படித்த வல்லபாசாரியின் அருமைச் சீடர், மதுராபந்து, ஜீவன்ஜீயைவிட்டொழித்து, தயானந்தரை நாடி யடைந்து, இன்னும் பல வல்லபதாசர்களை வேத நேசராக்கினான்.

## 66. கட்டுலால் குட்டு

வைஷ்ணவம் பாழாகிறதே என்று வல்லபாசாரி வருந்தினார். வல்லபாசாரியின் அருமைச் சீடன் கட்டுலால் சதாவதானி; நூறு சுலோகங்களை மளமளவென்று சொன்னால், கேட்டபடியே ஒப்பித்துவிடுவார்; பெரிய படிப்பாளி கண்டாகர்ண வைஷ்ணவர்; கிருஷ்ணார்ப்பணதாஸர்; ஆனால் ஒரு கண் பொட்டை! இன்னொரு கண் மங்கல்! இருந்தாலும் உழக்குருட்டுவதிலும் கைகாரப் பேர்வழி. இவரைக் கொண்டு, தயானந்தரை மடக்கி அவ

மானப் படுத்த, முனைந்தார் வல்லபாசாரி ஜீவன்ஜீ. உடனே ஒரு ஏச்சரிகை வெளியிட்டு தயானந்தருக்குச் சவால் விட்டார். லால் பாகில் கூட்டம்; வல்லப வைஷ்ணவமே உண்மை; இதை விளக்க கட்டுலால் பேசுவார். அவருடன் ஐம்பதுபேர் வருவார்கள். தயானந்தரும் ஐம்பது பேரை அழைத்து வந்து, தமது கொள்கையை நிலைநாட்ட வேண்டியது. கூட்டம் கௌரவமாகவே நடக்கும்; கூட்டம் 5-12-1874-ல்.

இதுவும் சூழ்ச்சியே என்றறிந்தார் தயானந்தர். ஏன்? அதே நாள் கௌஸ்ஜீ ஹாலில் தயானந்தர் வேத தர்மத்தைப் பற்றிப் பேச, ஏற்பாடு செய்திருந்தார். கட்டுலால் அழைப்பை ஒப்புக் கொண்டால், கௌஸ்ஜீ ஹாலில் பேச முடியாது; அங்கே பேசினால்,இங்கே கட்டுலால் மட்டும் பேசிவிட்டு,தயானந்தர் பயந்து கொண்டு வரவில்லை என்று கட்டிவிடலாம். மேலும் லால் பாகில் ஏராளமான வல்லபப்பட்டாளம் வரும். கட்டுலால் பேச்சே ஏறும்; சுவாமிகளைக் கைதட்டிக் கல்லி செய்து கலாட்டா நடத்தலாம் என்றே, எதிரிகள் சூழ்ச்சி செய்தனர். சுவாமிகள் தமது ஆட்கள் இருவரை கட்டுலாலிடம் அனுப்பி இவ்வாறு தெரிவித்தார். "ஐயா, தயானந்தர் சந்தோஷமாக விவாதத்திற்கு வருவார்; "வல்லப சம்பிரதாயம் வேத சம்மதமா? வணங்கத்தக்கவர் கடவுளா—வல்லபாசாரியா?" என்பது பற்றியே விவாதம் நடத்த வேண்டும். ஒருவர் பேசும்போது, எவரும் இடைமறிக்கக் கூடாது. சரியான மத்யஸ்தர்களையும், பேச்சைக் குறிக்க அறியாளிகளையும் நியமிக்க வேண்டும்." கட்டுலாலுக்குத் தலை சுழன்றது; "இந்த மாதிரி விவாதம் நடத்த வரமுடியாது" என்றார். ஆனால் குறித்த நாளில் லால்பாகில் கூட்டம் நடந்தது. கட்டுலால் வேதத்தில் ஒரு இடத்தில் "பிரதிமா" என்று வருகிறது. அது லால்ஜீ (கிருஷ்ண) விக்கிரகத்தையே குறிக்கிறது என்று கப்ஸா விட்டார். ஜனார்தன கோபால் என்பவர் "ஐயா, வேதத்தில் 'பிரதிமா' என்றால் 'ஓவியம்' உங்கள் லால்ஜீயை வேதத்தில் ஏன் நுழைத்து வம்பு பண்ணுகிறீர்" என்று ஒரு போடு போட்டார். கட்டுலால் குட்டு வெளிப் பட்டது; கூட்டம் குழப்பமானது; சூழ்ச்சி வீழ்ச்சியுற்றது.வல்லபாசாரியின் முயற்சி கிருஷ்ணார்ப்பணமானது!

அங்கே கௌஸ்ஜீ ஹாலில், தயானந்தரின் பிரசங்கம் பலமாக நடந்தது. வேத சம்பந்த மில்லாத போலி மதங்களை, நகைச் சுவைத்து கண்டித்தார் தயானந்தர். ஜனங்கள் குதூகலமாகக் கேட்டுப் புதிய உணர்ச்சி பெற்றனர். ஜயகோஷங்களுடன் சுவாமிகள்

பம்பாயில் வேத விருதை நாட்டினார். தயானந்தர் பம்பாயிலிருந்த மட்டும், வல்லபக் கும்பல் வாய் திறக்கவில்லை. அவர் சூரத் சென்ற பிறகு "சாமியார் பயந்து கொண்டு, எங்கள் கூட்டத்திற்கு வர வில்லை. அவர் தோற்றோடிப் போனார்" என்று வல்லபக் கும்பல் எக்களித்து அறிக்கை விட்டது. "ஐயா சாமியாரை மறுபடி அழைக்கிறோம்; தர்க்கத்திற்கு வருவீரா" என்றொரு சவால் விட்டான் கிரிதரலால். அதற்குப் பதிலில்லை சரக்கில்லை! பம்பாயில் சாமாஜி கிருஷ்ணவர்மாவும், அவர் மனைவியின் சகோதரன் ராம தாஸூம் சுவாமிகளிடம் ஈடுபட்டனர்.

## 67. சூரத்தில் பிரசங்கம்

சுவாமிகள், குஜராதில் பிரசாரம் செய்யக் கருதி, சூரத்திற்குச் சென்றார். அங்கே பெண்கள் வராத தனியிடத்தில் இருக்கை அமைத்துக் கொண்டார். உணவுக்கு யாசிக்கவில்லை; இரண்டு நாள் தாமே கிச்சடி வாங்கிச் சாப்பிட்டார்; பிறகு நண்பர் ஏற்பாடு செய்தனர். உள்ளூர் உயர் பள்ளித் தலைவர் துர்கா சங்கர்ஜீ, நான்கு பிரசங்கங்களுக்கு ஏற்பாடு செய்தார். நான்கும் பல மதங்களைப்பற்றியன.

முதல் பிரசங்கம் ஆந்துரு வாசக சாலையில் நடந்தது. விஷயம் ராம்மோஹன், வல்லபர், ராமானுஜர், ஸஹஜானந்தர், சுவாமி நாராயணர்-ஆகிய மதாசாரியார்களின் தகுதியைப் பற்றிய ஆராய்ச்சி. தயானந்தர், ராம்மோஹனையும் பிரம்ம சமாஜத்தையும் மெச்சினார்; தற்போது பிரம்ம சமாஜ நிலைக்கு வருந்தினார். வல்லபர் முதலிய அவதாரவாதிகளால், தேசம் மூடக் கொள்கை நிரம்பிக் கெட்டதை நன்று விளக்கினார். கூட்டத்தலைவர் டெபுடிகலெக்டர் ஜகஜீவன் தாஸ், சுவாமிகளின் வேதாவேசத்தையும், உண்மை யுரையையும் மிகவும் மெச்சினார். ஊரில் வேதவுணர்ச்சியும், புராணவெறுப்பும் பரவின. மறுநாள் பள்ளிக்கூடத்தில் புத்த, சமண, தாந்திர மதங்களைக் கண்டித்து, வேத தருமத்தை விளக்கினார். மறுநாள் பெண் பள்ளிக்கூடத்தில் வேத தர்மத்தைப்பற்றிப் பேசினார். நான்காவது நாள் சிவன் கோவிலில் பிரசங்கம்; ஏராளமான கூட்டத்துடன் சுவாமிகள் சென்றார். கோயில் பட்டர், 'படார்' என்று கதவை அடைத்துவிட்டார். எதிரிகள் சூழ்ச்சி! எவ்வளவு மன்றாடியும் திறக்கவில்லை; சுவாமிகள் பிடிவாதமாக கோயில் முன்னிலையில் பிரசங்கத்தை நடத்தி; விக்கிரகாராதனையின் விநோதங்களை நகைததும்ப வர்ணித்தார். பிரசங்கம் முடிந்ததும் புகழ் பெற்ற குஜராதிக் கவி மோஹன்பாபா, சுவாமிகளை வணங்கித் தமது மடத்

திற்கு அழைத்தார். மோஹன்பாபா தூயபிரமசாரி; நிர்குண உபாசகர்; உருவணக்கத்தை மறுப்பவர், குஜராத்தின் புலமைக்கனி. எண்பது வயதுக்கிழவர்.சுவாமிகளை இவர் அன்புடன் வரவேற்று, மலர்தூவி வணங்கி, விருந்திட்டு உபசரித்தார். அவரது மாணவிகளும் சுவாமிகளை உபசரித்து வணங்கினர்.

வல்லபக் கூட்டம் சூரத்திலும் சேட்டை செய்தது. ஜகஜீவன்தாஸ் இரண்டு கான்ஸ்டேபிள்களைக் காவல் வைத்து,குண்டர் அண்டாது காத்தார். சுவாமிகள் ஐந்தாநாள் அத்வைதத்தைப்பற்றிப் பேசினர். குறுக்குக் கேள்வி போட்டவர்களை, பட்பட் என்று பதில் சொல்லி வாயடக்கினர். சில துறவிகள் சுவாமிகளுக்குப் பயந்து, அந்தப் பக்கமே வராது, வேறு வழியே சென்றனர். 'குஜராதிமித்ரன், பத்திராதிபர், சுவாமி நாராயண சம்பிரதாயி. அவர் சுவாமிகளைப் பரம நாஸ்திகர் என்று, வசைக் கட்டுரை எழுதினர். "இந்தச் சாமியார் எங்கள் மதத்தைக் கண்டனம் செய்து, ஊர் அமைதியைக் கெடுக்கிறார்; இவரைப் போலீஸ், கைது செய்து, அடக்க வேண்டும்" என்று வீறிட்டார். ஒன்றும் பலிக்கவில்லை. சூரத்திலிருந்து வெற்றி முழக்கத்துடன் சுவாமிகள் புரோசுக்குச் சென்றார்.

## 68. மாதவராவ் வாயடைத்தார்.

புரோச்சில் ஒரு தர்ம சாலையில் தங்கிக் கொண்டு, சுவாமிகள் வேதப் பிரசாரம் செய்தார். மாதவராவ் என்ற தென்னாட்டந்தணர் 'வேதத்தில் விக்கிரக பூஜை இருக்கிறது' என்று வீறிட்டார். சுவாமிகள் ஆதாரம் காட்டச் சொன்னர்; மாதவராவ் ஏதோ மந்திரத்தை விளக்கப் புகுந்து, தட்டுத் தடுமாறித் திணறிப் போனர்; அவர் பாஷையிலேயே பல பிழைகளைக் கண்டு திருத்தி, "ஐயா! நீர் வேதத்தைப் படித்து வாரும், பிறகு வாதம் புரியலாம்" என்றனுப்பினர். மாதவராவுக்குக் கோபம் வந்து விட்டது. பொதுக் கூட்டத்தில் சுவாமிகள் பேசும்போது, அடிக்கடி கேள்வி போட்டுத் தொல்லை செய்தார்; அவமரியாதையாகப் பேசினர். பலதேவ்சிங் என்னும் அன்பர் அவரைக் கண்டித்து வாயடக்கினர்.

மறுநாள் மாதவராவ் கூட்டம் கூட்டி, சுவாமிகளுக்கு எதிர் பேசி, வேதத்தில் உருத்தொழுகை உண்டென்று உளறிக் கொட்டினர். எல்லோரும் சிரித்தனர். மறுநாள் சுவாமிகள் தர்மசாலைக் கூட்டத்தில் பேசும்போது, மாதவராவ் வசையடுப்பு தொடுத்தார். கூட்டத்திலிருந்த இராணுவ சிப்பாய்கள், அவரை அடிக்கச் சென்

றனர்; சுவாமிகள் தடுத்தார். மறுநாள் மாதவராவ் தனிக் கூட்டம் நடத்தி, தயானந்தரை வாயார வைது தீர்த்தார். ஜனங்களும் சிரித்துத் தீர்த்தனர்.

## 69. நான் குருவில்லை

புரோசில் அத்வைதானந்தர் மிகவும் படித்த துறவி; அவருக்கு மாணவர் கூட்டத்தை விட, மாணவிகளே அதிகம். ஒரு நாள் அவர் தமது சிஷ்ய சங்கத்துடன் வந்து, உபதேசிக்க வேண்டும் என்று மன்றாடினார். சுவாமிகள் பெண்களை ஒரு திரைக்குப் பின்னால் இருக்கச் செய்து, உபதேசித்தார். "பெண்மணிகாள்! உங்கள் கடமை வீட்டு நிர்வாகம், மக்கட் பேறு, பதி சேவை—இவையே. நீங்கள் குடித்தனத்தை விட்டு வெளியே திரிவது அழகல்ல. சாமியார் கீமியார் என்று சுற்றித் திரியாதீர்கள்—இல்லறத்தைப் பேணுங்கள்"

உமாராவ்சிங் என்பவர் "குருநாதரே, என்னை சிஷ்யனாக ஏற்றுக் குருமந்திரோபதேசம் செய்ய வேண்டும்" என்று காலைப் பிடித்துக் கொண்டார். தயானந்தர் "ஐயா! நான் குரு கிரு என்று தடபுடல் செய்ய மாட்டேன்; எனக்கு சிஷ்யக் கூட்டமும் தேவையில்லை. வேதத்தை விட உயர்ந்த மந்திரம் இல்லை; அதை உருப்போடும். நான் குரு பீடம் காண வரவில்லை; ஜனங்களின் அஞ்ஞானத்தை ஒழித்து, உண்மை ஒளிபரப்பவே வந்தேன்" என்றார்.

ஜேதாலால் என்ற பெரிய வக்கீல் "சுவாமிகளே நீங்கள் விக்கிரக கண்டனத்தை மட்டும் விட்டு விட்டால், உங்களை சங்கராச் சாரியாரின் அவதாரமாகக் கொண்டாடுவோம்" என்றார். தயானந்தர் சிரித்து விட்டு, "அவதாரமா! யாருக்கு? கடவுளுக்கும் அவதாரமில்லை; எனக்கும் இல்லை. என் உயிர் போனாலும் உண்மையைக் கைவிடேன். அவதார வாதமும். புராணப் பொய்களும், உருத்தொழுகையும் ஆரிய வர்க்கத்தைக் கெடுத்த புல்லுருவிகள்" என கர்ஜித்தார். தயானந்தர் பிறர் தமது காலைத் தொட்டு வணங்குவதைக்கூட விரும்பவில்லை. "தலை நிமிருங்கள்; யார் காலிலும் விழத் தேவையில்லை; ஆத்ம தீரர்களாக ரிஷிகுலச் சுடர்களாக நிமிர்ந்து நடங்கள்; தாஸன், அடிமை என்ற சிறுமை யுணர்ச்சியை ஒழியுங்கள்" என்று தயானந்தர் உபதேசித்தார். தெற்கே அருட்சோதி வள்ளலார்—வடக்கே தயானந்தர்—ஆகிய இருவரே "என்னை வணங்காதீர், இறைவனையே தினைந்துருகுங்கள்" என்றுபதேசித்தனர்.

கிருஷ்ணராம் என்ற அன்பன் காய்ச்சலாய்ப் படுத்தான்; சுவாமிகள் அவன் காலைத் தொட்டு மூலிகை தடவி, உருவி விட்டார். "சுவாமி குருநாதா; தாங்கள் எளியேன் காலைத் தொடலாமா? நானல்லவா தங்களுக்குச் சேவை செய்ய வேண்டும்" என்றவன் பதறினன்."அன்பா நான் சுவாமிஜீ என்று,மதிப்பாகப் பீடத்தை அலங்கரிக்க வரவில்லை; நான் மனித சமுதாயத் தொண்டன்; என்னைப் போல நீ மனிதன்; இது மனிதனுக்கு மனிதன் செய்யும் கடமை" என்றவர் சிகிச்சை செய்தார். துறவிகளுக்குக் கஷாயச் செருக்கில்லாமல், சாத்விக அகங்கார மில்லாமல், இத்தகைய தொண்டுணர்ச்சி வரவேண்டும். இன்று இந்தியாவில் வீணுகத் திரியும் துறவி பரதேசிகளெல்லாம், தேச சேவை செய்வதென்று வைத்துக் கொண்டால், ஹிந்து தர்மம் சக்தி பெற்று நிலவும்! இதற்கும் சுவாமிகளே வழிகாட்டினர். இவ்வாறு புரோச்சில் வேத தர்மோபதேசத்துடன் அதை அனுஷ்டித்தும் காட்டி, தயானந்தர் ஆமதாபாதுக்குச் சென்றார்.

## 70. பழமையின் ஊளை!

ஆமதாபாதில் தயானந்தரை, நீதிபதி ஹரிதேசமுகர் முதலியோர் வரவேற்று, மாணிக்கேச்வர மஹாதேவர் கோயிலில் இருக்கச் செய்தனர். சுவாமிகள் அங்கே இரண்டு வாரம் இருந்து, வேத தர்மப் பிரசாரம் செய்தார். முதல் நாள் பிரசங்கம் செய்தார். மறுநாள் கேள்விகளுக்குப் பதில் சொன்னர். ஊர் அறிஞர் "தயானந்தருடன் சாஸ்திர வாதம் செய்ய வாருங்கள்" என்று பண்டிதர்களை அழைத்தார்கள். "இதோ வருகிறோம் வந்து விட்டோம்;இந்த வாயாடிச் சந்யாசியைச் சும்மா விடோம்" என்று சில பண்டிதர் கிளம்பி வந்தார்கள். நாலு மணிக்கு விவாதமாம்; தயானந்தர் தயாராக வந்தார்; ஆனல் பண்டிதர்களைக் காணேம்; ஏராளமான கூட்டம்! தயானந்தர் வேத தர்மத்தை விளக்கி, போலிக் குருமாரின் அட்டூழியங்களை அம்பலப் படுத்தினர். அந்தப் பக்கம் சுவாமி நாராயண மதவாதிகள் அதிகம். அத்தனை பேரும், சுவாமி நாராயண குரு வந்து, தங்களைப் புஷ்பக விமானத்தில் வைத்து, வைகுண்டத்திற்கு ஏற்றுமதி செய்யப் போவதாகவே நம்பினர். சுவாமிகள் இந்தப் போலிக் கொள்கையையும் மூட மதங்களையும் பலமாகக் கண்டித்து, நூல் எழுதி வெளியிட்டுப் பாமர ஜனங்களின் கண்ணைத் திறந்தார். பண்டிதர்கள் நேரே வந்து பேசாமல், ஊர் ஜனங்களையெல்லாம் "அந்த அதிகப் பிரசங்கிச் சந்யாசி முகத்தில் விழிக்காதீர்கள்; மஹா பாவம்

வரும்; சுவாமி நாராயணர் உங்களை நரகத்தில் தள்ளுவார்" என்று மிரட்டி, கலைத்துக்கொண்டிருந்தனர். சுவாமிகள் பேச்சை யுணர்ந்த அன்பர் "ஏழுப்பதாம் பசலிப் பண்டிதர்களே, இன்று எங்கண் திறந்தது! ஒழிக கண் மூடித்தனங்கள்" என்று வீர முழக்கம் செய்தனர். பழமையின் ஊளை, காட்டு நரி ஊளையானது. தயானந்தரின் புதுமை முழக்கமே ஜயபேரிகை யடித்துப் பரவியது. Times of Indiaவும் ஹிதேச்சு என்னும் பத்திரிகையும் தயானந்தரின் தைரியமான உண்மையுரைகளை மெச்சின. "இந்தப் பாஷாண்டிக்கு என்ன தெரியும்? ஏதோ சில சீர்திருத்த வாதிகள் இவர் பெயரைத் தம்பட்ட மடிக்கிறார்கள்; பாமர ஜனங்கள், பேச்சில் மயங்குகிறார்கள்" என்றனர் பண்டிதர். சுவாமிகள் உள்ளூர் பிரார்த்தனை சமாஜத்தில், அருவாக இறைவனைத் தியானம் செய்வதைப் பற்றி அரிய சொற்பொழிவாற்றினர். சுவாமிகள் அன்பரிடம் நல்விடை பெற்று, ராஜக் கோட்டைக்குச் சென்றார்.

## 71. முதல் ஆரிய சமாஜம்.

இராஜக் கோட்டை தர்மசாலையில் தயானந்தர் தங்கினர். ராஜகுமாரர், கல்லூரித் தலைவர், துவாரகதாஸ் முதலியோர் ஊரில் பணம் வசூலித்து, சுவாமிகளை உபசரித்து மரியாதை செய்து, பிரசங்கம் வைத்தனர். சுவாமிகள் எட்டுப் பிரசங்கம் செய்தார்:— (1) கடவுளுண்மை (2) தர்மம் (3) வேதவிளக்கம் (4) மறுபிறப்பு (5) அறிவும் அறியாமையும், (6) பந்தமும் முக்தியும் (7) ஆரியர் வரலாறு, தற்கால நிலை (8) நமது கடமை. முதல் நாள் பிரசங்கமும், மறுநாள் வினா விடையும் நடந்தன. சுவாமிகள் பிரசங்கம் ஜனங்களின் மனதிற் பதிந்து, புதிய விழிப்பைத் தந்தது. "இன்றே உண்மையை உணர்ந்தோம்—அற்புதப் பிரசங்கம்" என்று துவாரக தாஸ் முதல் எல்லா அறிஞரும் போற்றினர். ராஜகுமார் கல்லூரியிலே தான், கத்தியவார் இளவரசரும் படித்தனர். அவர்கள் சுவாமிகள் வாக்கை அள்ளிப் பருகி, மகிழ்ந்து தமக்கெனத் தனியாக கல்லூரியில் பிரசங்கம் வைத்தனர். தயானந்தர், காந்தி வளரப் போகும் ராஜகோட்டையில், அஹிம்சா தர்மத்தைப் பற்றி உருக்கமாகப் பேசினர். புலாலுண்ணும் தீமையைக் கண்டித்தார். அதைக் கேட்ட பலர், புலாலை நீத்துச் சைவ உணவே, உணவெனக் கொண்டனர். துவாரக தாஸர் உள்ளம் பூரித்து, மாக்ஸ் முல்லரின் ருக்வேதத்தைத் தந்து சுவாமிகளை வணங்கினர்.

உள்ளூர் பிரார்த்தனை சமாஜத்தில், தயானந்தர் அரிய சொற்பொழிந்தார். அறிவாளிகள் கூடி சுவாமிகளின் உபதேசங்களை

உருவாக்க வேண்டினர். தயானந்தர் அங்கேயே ஆரிய சமாஜத்தை முதன்முதல் நாட்டினர். பிரார்த்தனை சமாஜிகளே, ஆரிய சமாஜத்தைத் தமது கட்டிடத்தில் வைத்து நடத்தினர். அதன் காரியதரிசி துவாரக தாஸரே, இதன் காரியதரிசியானர். மணி சங்கரும் உத்தம ராமும் தலைவரானர்கள். தயானந்தர் ஆரிய சமாஜ விதிகளை வகுத்து, அச்சிட்டு ஊரெங்கும் பரப்பித், தமக்கு முன்னூறு படிவங்கள் வைத்துக்கொண்டார். நல்ல முறையில் சமாஜம் தொடங்கி, ஆறு மாதம் ஒழுங்காகவே நடந்தது. பிறகு பரோடாவில் நடந்த கிளர்ச்சி, இங்கும் பரவி, சமாஜ முன்னேற்றத்திற்கே முட்டுக்கட்டை போட்டது. ரெஸிடெண்டுக்கு நஞ்சு வைத்ததாகக் குற்றம் சாட்டி, பிரிட்டிஷ் சர்க்கார், கெய்க்வார் ஹரிராவைச் சிம்மாசனத்திலிருந்து இறக்கிப் பட்டத்தைப் பறிமுதல் செய்து, துரத்தியது. இது சம்பந்தமாகப் பெருங் கிளர்ச்சி நடந்து, ஊர் துமிலோகப்பட்டது. சுவாமிகள் பரோடா பயணத்திற்கு வாய்தாப் போட்டு, ஆமதாபாத்துக்குச் சென்றார்.

சுவாமிகளின் படத்தை ராஜக்கோட்டை அன்பர் வாங்கி, வீடுகளில் வைத்தனர். ஒரு பிரசங்கத்தில் ஜுனகாது திவான் கோகுல்ஜி, சுவாமிகள் செய்த ஒரு உபநிஷத் விரிவுரையை மறுத்து, சங்கரர் விரிவுரையே சரி என்றார். "நானே நான், நானே கடவுள், எனக்கு அன்னியமில்லை" என்றார். "இப்படிப் பேசுகிறவன் பங்கியடித்துப் பேசியிருக்க வேண்டும்" என்று குத்திக் காட்டினர். "நீரே பங்கி யடித்துப் பேசுகிறீர்" என்று பாய்ந்து சினந்தார் திவான்ஜீ. சுவாமிஜீ தக்க சமாதானம் சொல்லி, திவானின் வாயை அடக்கினர்.

சுவாமிகள் ஆமதாபாதுக்குச் சென்றதும், கட்டுலால் சதாவதானி வந்தார். ஜனங்கள் அவரை வரவேற்று, ஆளுக்கொரு விஷயம் தந்து, கவி கட்டச் சொன்னர்கள். கட்டுலால் உடனுடன் கவிமாலை தொடுத்தளித்தார். கெய்க்வாரை பிரிட்டிஷார் விலக்கியதுபற்றி, கட்டுலால் கண்டனக் கவி பாடினர். அதைக் கேட்ட காத்தியவாரர் ரெஸிடெண்டு ஜேம்ஸிலுக்குக் கோபம் வந்துவிட்டது. அடக்குமுறை ஆயுதத்தை எடுத்தார். அந்தக் கவி பாடச் சொன்னவர், கூட்டம் போட்டவர், பத்திரிகைக்கு எழுதினவர் அனைவரையும் தண்டிக்கக் கிளம்பினர். ஆரிய சமாஜ காரியதரிசி நாகின்தாஸின் சந்நதைப் பறித்தார். நாகின்தாஸ் சில பிரிட்டிஷ் அதிகாரிகளின் சிபார்சினல், மீண்டும் வக்கீல் உத்தியோகம் பெற்றார். போலீஸார் ஆரிய சமாஜத்தைச் சோதித்

தனர். 'போலீஸ்' என்றதும் உதறலெடுத்து சிலர் ஆரிய சமாஜத்தை விட்டு விலகினர். பயம் பயனைக் கெடுத்தது. இப்படி முதல் ஆரிய சமாஜம் கனவுபோல் எழுந்து, மறைந்தது.

## 72. ஆமதாபாதில் சமாஜம்

*21—1—1875 ;* தயானந்தர் ஆமதாபாதிற்கு வந்து, ஆரிய சொற்பொழிந்தார். இந்தச் சொற்பொழிவு தற்கால இந்தியாவுக்கும் வழி காட்டக் கூடியது.

"ஹே! ஆரிய சமுதாய மகாஜனங்களே, நீங்கள் எப்படியிருந்தீர்கள்! எப்படி இழிந்தீர்கள்! முற்காலம், வீர சூரர்களாய், மஹா தேஜஸ்விகளா யிருந்தீர்கள். இன்று வற்றி, வறண்டு, ஜீவனற்ற அடிமைகளா யிருக்கிறீர்கள். அன்னியர்கள் உங்களை அடக்கி யாளுகிறார்கள். நீங்கள் ஒருவர் மேல் ஒருவர் கட்சிச் சண்டை போட்டுக்கொண் டிருக்கிறீர்கள். எங்கும் பிரிவினை—எல்லாம் குழப்பம்! அலெக்சாந்தர் படையெடுத்தான்; அவனை எதிர்த்துப் போர் புரிந்தான் ஒரு புருஷோத்தமன். கஜினிமுகம்மது, கொள்ளைப் படையுடன் புகுந்தான்; அவனுக்கு வழி காட்ட ஒரு துரோகி சலாம்போட்டு முன்னே நின்றான். மற்றொரு துரோகி கோரி முகம்மதைக் கூட்டி வந்து 'இதுதான் வழி, எங்கள் பிருத்விராஜனைக் கொல்' என்று தன் படையும் தந்தான். ஐயோ! இராமனும், அர்ஜுனனும் அளித்த ஆரிய சமுதாயம், எப்படிப்பட்ட துரோக நிலையடைந்தது. இந்த நாட்டின் சாபம் பிரிவினை—துரோகம். நமது பிரிவினையைக் கொண்டே அன்னியர் நம்மை ஆளுகிறார்கள். பிரிவினை வந்ததேன்? வேத ஞானம் சூனியமானது. தடி பிடித்தவனெல்லாம் தம்பிரானானான். வேத சூனியர்களெல்லாம் வகுப்புவாத—குருபீடங்களை ஏற்படுத்திக் கொண்டார்கள். பிராமணர் வேத வொளியைப் பிறர் பாராமல், குடத்து விளக்காக்கினர். புராணப் பொய்கள் வலுத்தன; வேத விருத்தமான, மூடப் பழக்கங்களைப் பாமர ஜனங்களுக்கு உபதேசித்துப், பணம் பிடுங்கும் குருமார்கள் முளைத்தனர். நெற்றியில் போடும் பட்டை நாமத்திற்கும், விபூதிப் பட்டைக்கும் சண்டை மூட்டினர். ஒரு குருவுக்கும் இன்னொரு குருவுக்கும் ஆவதில்லை. இருவர் சீடர்களும் கலந்துண்ணார்! அளவளாவார்!! நாடெல்லாம் குரு பீட தர்பார்கள் வலுத்து, வகுப்புவாதக் காடானது. ஆரிய நாடு உருப்பட வேண்டுமென்றால், ஒற்றுமை வேண்டும்; ஒரே சமய நெறியில் எல்லோரும் வாழ வேண்டும். ஒரே வேதத்தை அநுஷ்டிக்க வேண்டும். ஆங்கிலேயர்,

பைபிளையே ஓதி, எல்லாரும் ஒரே கிறிஸ்து சமயத்தை அனுஷ்டித்து, ஓரினமாக வாழ்வதால், அவர்கள் ஒற்றுமையுடன் உலகை ஆள முடிகிறது. நம்மவரோ ஆயிரம் குருக்கள், ஆயிரம் மதங்கள், ஆயிரம் வகுப்புகளாகி, ஒருவருக்கொருவர் பகையாடித் திரிகிறார்கள். ஒருவருக்கொருவர் கை தந்து உதவ, என்று முன் வருகிறோமோ, என்று மூடக்கொள்கைகளையும், உரு வணக்கத்தையும், பிறப்பு வித்தியாசத்தையும், வகுப்பு வாதத்தையும் விட்டு நாம் ஒன்றுகிறோமோ, அன்றுதான் நாம் விடுதலை பெறுவோம், வீறு பெறுவோம், உலகின்முன் சுதந்தரமாகத் தலை நிமிர்ந்து நடப்போம். நமது சமுதாயம் க்ஷீணித்து வருகிறது ; அதில் மூடப் புல்லுருவிகள் படர்ந்தன. பாலிய மணம், விதவைக் கண்ணீர், கல்வியில்லா மடமை, பொய்க் கதைகள் புகுந்தன. ஒன்றே கடவுள், ஒன்றே வேதம், ஒன்றே உலகம், ஒன்றே மனித சமுதாயம் என்ற ஏகரஸ பாவனை வரவேண்டும். கல்லுக்கும், மனிதர் காலுக்கும், அடிமைக் கும்பிடுபோடும் மடத்தனம் ஒழியவேண்டும். எல்லாரும் வேத வழியே, வாழ்வை சர்வ சமரச யோகமாக்கி, ஒரே ஆரிய சமாஜமாக வாழ வேண்டும், இதுதான் நாம் உய்யும் வழி." இச்சொற்பொழிவு ஜனங்களின் உள்ளத்தைத் தொட்டது. சிலர் தயானந்தரின் வேதவுரையை ஆட்சேபித்தனர். அறிவாளர், தயானந்தரே சரி எனத் தீர்மானித்தனர்.

27—1—1875,ல் தயானந்தர் ஆரிய சமாஜ விதிகளை அன்பர் முன் படித்தார். அன்பர் உடனே ஆமதாபாதில் ஓர் ஆரிய சமாஜம் நாட்டினர். சிலர் விக்கிரக ஆராதனை வேத சம்மதம் என்றனர். மறுபடி தர்க்கம் நடந்தது. மறுபடி சுவாமிகளுக்கு வெற்றி. நீதிபதி கோபால் ராவ் ஹரிதேசமுகருக்கு உற்சாகம் வந்து விட்டது. சுவாமிகளுக்குப் பீதாம்பரம் போர்த்தினர். "இதோ ஆரிய சமாஜம்" என்று ஒரு கட்டிடத்தைத் தீர்மானித்துக் காரியத்தை மளமளவென்று நடத்தினர். முப்பது பேர் ஆரிய சமாஜத்திற் சேர்ந்தனர். பிரம்ம சமாஜியான மஹிபத்ராம் என்ற அறிஞரும் சேர்ந்தார். எல்லாரும் வேதநெறியை மேற்கொண்டனர். இவ்வாறு ஆமதாபாதில் ஆர்ய சமாஜத்தை நாட்டி, சுவாமிகள் பம்பாய்க்கு வந்தார்.

## 73. பம்பாய் சமாஜம்

4—2—1875 ; சுவாமிகள் பம்பாயில் ஆவேசமாகப் பேசினர். பிரசங்கத்திற்காக ஒரு பெரிய வேத மண்டபம் எழுந்தது ;

ஒரு சிம்மாசனத்தில் வேத நூல்கள் வைக்கப்பட்டன. நகர் அறிஞரும், செல்வரும் ஏராளமாகக் கூடி யிருந்தனர். வாதாட வும் சில புலவர் தயாராக வந்தனர்; ஆத்மாராம் தலைமை தாங்கினர். சுவாமிகள் அடக்கமாக வந்து சிம்மாசனத்தில் அமர்ந்தார். சில பொறுமைப் புலவர் அதை ஆட்சேபித்தனர்.

"நான் துறவி; எனக்கு உயர்ந்த இடத்தில் உட்கார உரிமை உண்டு. உங்கள் கேள்விகளுக்கு நான் தோற்றால், உடனே இறங்கி விடுகிறேன்; வென்றவர் இதில் உட்காரட்டும்" என்றார் தயானந்தர். தலைவர் முன்னுரைக்குப் பிறகு, ஜோஷி பேசினர். வதவத வென்று சம்பந்த மில்லாமல் பேசினர். ஜனங்கள் அலுத்துக் கைதட்டி அவரை உட்கார வைத்தனர்.

இச்சா சங்கர் சுக்லா, இலக்கணக் கேள்விகளில் பிடித்தார். சுவாமிஜீ பாணினி மஹா பாஷ்யத்தை ஆதாரமாகக் கொண்டு பட் பட் என்று பதிற் சொன்னர். சுக்லா வியந்து, பயந்து அமர்ந்தார். பண்டிதர்கள் பல கேள்விகளைச் சுண்டினர்கள். சுவாமிகள் எதிர்க் கேள்வி போட்டார். பண்டிதர்கள் குருட்டுப் பாடம் ஒப்பித்தனர். கேள்விகளுக்குச் சரியான பதிற் சொல்ல முடியவில்லை. அசம்பாவிதமான கேள்விகள் கிளம்பின. சுவாமிகள் ஹாஸ்யமாகப் பதிற் சொல்லிக் கிண்டலர் வாயை அடக்கினர். பிறகு யாரும் கேள்வி கேட்கத் துணியவில்லை. சுவாமிகள் வேத தருமத்தைப்பற்றிச் சண்டமாருதமாகப் பொழிந்தார். சபை ஒரே வியப்புடன் கேட்டு, மனங் குளிர்ந்தது. சுவாமிகளின் பம்பாய்ப் பிரசங்கம் சத்தியார்த்தப் பிரகாசத்தின் சாரமே.

மறுநாளே அன்பர் பம்பாயில் ஆரிய சமாஜம் நிலை நாட்ட முனைந்தனர். முன்னே நாட்டிய சமாஜம், சிலர் சூழ்ச்சிகளாலும் மன வேறுபாடுகளாலும் கலைந்து போனது. இப்போது ஜனங்களுக்குத் தயானந்தரிடம் பெருமதிப்பு ஏற்பட்டது. நூறு அறிஞர் இப்போது முன் வந்தனர். சமாஜத்திற்குரிய சட்ட திட்டங்களெல்லாம் புதுக்கியமைக்கப் பெற்றன. இரண்டு மாதம் முயற்சி நடந்து. 10—4—1875, சனிக்கிழமை சைத்ர சுக்ல பஞ்சமி (1932) கிர்காமில் டாக்டர் மாணிக்ஜீ தோட்டத்தில் மாலை 5-30 மணிக்கு ஆரிய சமாஜம் உருவாகிக் கூடியது. கிரிதர்லால் தயாள்தாஸ் தலைமை வகித்தார். நிர்வாக அங்கத்தினர் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். ஞாயிறுதோறும் கூட்டம் போடுவதாகத் தீர்மானமானது. எல்லாரும் சுவாமிஜீயே ஆரிய சமாஜத் தலைவராக

யிருக்கவேண்டும் என்று மன்றுடினர். சுவாமிகள், "நான் தலைமை, குருபீடம், சிஷ்யக் கூட்டம் இவற்றின் சுமையைத் தாங்க வர வில்லை. நீங்கள் நிர்வகியுங்கள்: நான் என்றும் பொது ஜனத் தொண்டனுகவே இருப்பேன்" என்றுர். மிகவும் கட்டாயப் படுத்தியதின்பேரில், தயானந்தர் ஆரிய சமாஜத்தில் சாதாரண அங்கத்தினரா யிருக்க உடன் பட்டார். நூறு அங்கத்தினருடன் சமாஜத் தந்தை நூற்றேராம் அங்கத்தினரானுர். என்ன எளிமை! என்ன நேர்மை, பணிவு, அடக்கம்! அன்பர் தயானந் தரைப் படம் பிடித்து, சமாஜத்தில் வைக்க விரும்பினர். தயா னந்தர் "கூடவே கூடாது, சமாஜத்தில் யார் உருவும் கூடாது: என் படத்தைப் பிடித்து ஜனங்களிடம் தந்தால், அதற்கு மலர் தூவி, தூபதீபம் காட்டி வணங்கத் தொடங்குவார்கள். பிறகு என்னை அவதாரமாக்கி, தெய்வமாக்கி, புராணக் கதைகள் கட்டி, அற்புதப் பொய்களைப் பரப்பி, ஜனங்களுக்கு இன்னும் மூட வெறி யேற்றுவார்கள். ஆதலால் என் படத்தை ஸமாஜத்தில் வைத்து எவ்விதமான வணக்கமும் செலுத்துதல் கூடாது" என்றுர். பிறகு, "சும்மா படம் பிடிக்கிறேம்" என்றனர். "படம் பிடியுங்கள்; ஆனுல் அதைப் பொது ஜனங்களுக்கு விற்றுப் போலி வேலை செய்யாதீர்கள்" என்ற நிபந்தனையிட்டு சுவாமி கள் படத்திற்கு அமர்ந்தார். சுவாமிகளின் கொள்கைகளைக் கேலி செய்து, திட்டியவர்களும் பலர். "வேத தர்மத்தைப் பரப்பி உண்மையைப் பேசும் பணியில் எனக்கு வரும் வசவெல் லாம் வாழ்த்துக்களே. மாப்பிள்ளை மாமனுர் வீட்டுக்குப் போகும் புதிதில் "மாப்பிள்ளையாம்; மாப்பிள்ளை, மண்ணுங்கட்டித் தோப்புள்ளே" என்று குட்டிகள் கேலி செய்வதுபோல, என் னையும் சிலர் கேலி செய்து வைகிறுர்கள். ஒருநாள் உண்மை யறிந்து திருந்துவார்கள்" என்றுர் தயானந்தர். தயானந்தர் அந்தக்கரண சுத்தியுள்ள எல்லாரையும் விரும்பினுர். மத பேத மில்லாமல் அறிவாளரை நன்கு மதித்தார். ரெவரெண்டு வில்ஸன் போன்ற பாதிரிகளுடன் அளவளாவி மகிழ்ந்தார். அந் தக் காலமே இளவரசன் ஏழாம் எட்வர்ட் பம்பாய்க்கு வந்தான்; அவனை வைஸிராய் நார்த்ப்ரூக் பிரபு வரவேற்றுர். இவர் கேசவ சந்திரசேனர் நண்பர். கேசவர் வைஸ்ராய்க்கு தயானந்தரின் பெருமையைச் சொன்னுர். வைஸ்ராய் சுவாமிகளைக் கண்டு பேச விரும்பினுர். ஆனுல் சுவாமிகள் டில்லிக்குச் சென்று பேட்டி காண விரும்பவில்லை. பம்பாய் ஆரிய சமாஜத்தைப் பலப்படுத்துவதிலேயே தயானந்தர் கருத்தூன்றினுர்.

## 74. கமல நயனாசாரி

மறுபடியும் வல்லபாசாரியார் கிளம்பினார். தயானந்தரால் பலர் உருத் தொழுகையை விட்டு விட்டனர். அர்ச்ச வடிவங்க ளெல்லாம் ஆற்றிற்கும், கடலுக்கும், பாத்திரக் கடைக்கும், காட்சி சாலைக்கும் போய்விட்டன. ஆசாரிய தர்பாரில் அடிமைக் கூட்டம் குறைந்தது. உண்மை யறிந்து கண் விழித்தவர்கள் போலிக் குருமாரைக் கேலி செய்து ஒதுக்கினர். வந்தது மோசம், வைஷ்ணவம் பாழானது என்று வல்லபாசாரியார் கூட்டம் கூட்டினார். தயானந்தரை எப்படியாவது வென்று அடக்கத் தீர்மானித்தார். அவர் நெற்றியில் பட்டை நாமம் போட்டு, கழுத்திலும் துளசி மாலை மாட்டி, முத்திராதானங்கூடச் செய்யச் சிலர் மனப்பால் குடித்தனர். பம்பாயில் கமல நயனாசாரி வீர வைஷ்ணவர், படித்தவர், தர்க்கப் புலி; அவரைத் தேர்ந்து ஆரியச் சிங்கத்துடன் வாதாட விட்டனர்.

பம்பாய் சமாசார் 17, 18—6—1885 இதழ்கள், இதைப் பற்றி, விரிவாகச் சொல்லுகின்றன:

கமல நயனருக்கு தயானந்தர் என்றால் பயமே; அவர் வாதத்தை விலகித் தப்பவே முயன்றார். ஆனால் அவர் சீடர் சிவநாராயணர் வம்பில் இழுத்து விட்டார். இவரும், ஆரிய சமாஜி தக்கர் ஜீவன்தயாளும் நெருங்கிய நண்பர். இருவரும் சபதம்போட்டு, ஒப்பந்தமும் எழுதி வெளியிட்டனர். தயானந்தர் வென்றால் சிவநாராயணவேணிசந்தர் நாமத்தை அழித்து, தயானந்தர் சீடராக வேண்டியது; கமல நயனர் வென்றால் தக்கர் ஜீவன்தயாளு, பட்டை நாமம் போட்டுக்கொண்டு, ராமானுஜக் கூட்டத்தைச் சேர வேண்டியது. இதுதான் ஒப்பந்தம். பம்பாய் முழுதும் விவாத நாளை ஆவலாக எதிர்பார்த்தது.

இதை அறிந்த கமலநயனர் திடுக்கிட்டார். விவாதம் வேண்டாம் என்றார். "சுவாமி! தாங்கள் வராவிட்டால் நமது வைஷ்ணவத்திற்கே இழிவாகும்........" என்று சமாதானம் சொல்லி அழைத்து வந்தனர். மத்யஸ்தத்திற்குத் தக்க பண்டிதர்களை ஏற்பாடு செய்தனர்.

கௌஸ்ஜீஹால் நிரம்பக் கூட்டம். ஒரு மேஜைமேல் நூறு வேத நூல்கள் அடுக்கியுள்ளன. வாது செய்பவருக்கு இரண்டு நாற்காலிகள் போடப்பட்டன. நிகழ்ச்சியைக் குறிப்பெடுக்கப்

பல நிருபர்கள் வந்தார்கள். ஊர் பிரமுகர்கள் அனைவரும் அவ ரவர்கள் அந்தஸ்துக்குத் தக்கபடி வந்து அமர்ந்தனர்.

தயானந்தர் மணிப்படி வந்து, 'ஜம்' என்று நாற்காலியில் உட்கார்ந்தார். சடசட வென்று சபை கை தட்டியது. கமலநயனரை ஆயிரம் நயனங்கள் ஆவலாக எதிர்பார்த்தன. ஆள் வரக் காணோம். மறுபடியும் ஆள் அனுப்பி மன்றாடியபிறகு, ஆசாரியர் சால்வையும், பீதாம்பரமும் ஆடம்பரமும் துலங்க, முப்பது சீடர்களுடனும் மார்வாடிப் பிரபுக்களுடனும் வந்து,மதிப்பாக உட்கார்ந்து கொண்டு, வைகுண்ட நாராயணனை நினைத்துக் கொண்டிருந்தார். கூட்டத் தலைவர் ராவ் பகதூர் விசார தாஸர், "நானும் மூர்த்தி உபாசகனே!" என்று முன்னுரை சொல்லி ஒப்பந்தத்தைப் படிக்கச் செய்து, பிறகு கமல நயனரை முதலில் விவாதம் தொடங்கச் சொன்னார். கமலநயனர் தயானந்தரைப் பழித்து வந்த விஷ்ணு புருஷ ராம் சாஸ்திரியாரையே மத்யஸ்தராக்கினார். இந்த மத்யஸ்தர் கமலநயனரையே நியாய சாஸ்திரக் கேள்விகளால் மடக்கிவிட்டார். கமலநயனர் தடபுடல் தர்பாரெல்லாம் நடத்தி முடிந்த பிறகு, தயானந்தர் பேசத் தொடங்கினார். "ஐயா கமலநயனரே! நீர் பெரிய வித்வானாயிற்றே" வேதத்தில் எந்த வரியிலாவது உரு வணக்கம் சொல்லப்பட்டிருக்கிறதா? காட்டும் அத்தாட்சி, நானும் தெரிந்து கொள்கிறேன்." கேட்ட கேள்விக்குப் பதிலேயில்லை. ஒரு நிமிஷம் நிச்சப்தம். பிறகு கமலநயனர் திருவாயைத் திறந்தார் :—" இவர் வேத மந்திரம் சொல்லச் சொல்லுகிறார். இந்தச் சபையில் சூத்திரர்கள் அதிகம் இருப்பதால், அவர்கள் காதில் வேத மந்திரம் படக் கூடாது. ஆதலால் நான் வேதம் சொல்லவில்லை" இவ்வாறு விளம்பி, ஆசாரியார் வெளியே சென்று மறைந்தார். சபை முழுதும் இந்தக் கோமாளித்தனத்தைக் கைதட்டிச் சிரித்தது. தயானந்தர் எல்லாரையும் அமைதியாக்கி, வேத தர்மத்தை உருக்கமாகப் பேசி, உருவணக்கத்தைச் சரியான ஆதாரம் காட்டிக் கண்டித்தார். தலைவர் மாலை சூட்டி வணங்கினார். ஜயகோஷத்துடன் கூட்டம் கலைந்தது. அப்போது ஒரு வேதாந்தத் துறவினி வந்து தயானந்தருக்குச் சேவை செய்வதாக வாக்களித்தாள். "அம்மா நீ பெண்களிடையே சத்யார்த்தப் பிரகாசத்தைக் கொண்டு வேத தர்மோபதேசம் செய்" என்றருளினார் தயானந்தர்.

## 75. சாமாஜி கிருஷ்ண வர்மா

இச்சமயம் ஒரு மேதாவி மாணவன் தயானந்தர் முன்னே தோன்றினன்—சாமாஜி கிருஷ்ண வர்மா, இந்தியாவின் மணிப் புதல்வர், சுதந்தர வீரர். சாமாஜி காடியவாரில் எளிய குடும்பத்தில் பிறந்த அந்தணர்; சமஸ்கிருதத்திலும் வேதத்திலும் நிபுணர். கல்லூரியிலும் முதல் மாணவர். பேச்சிலும் எழுத்திலும் செயலிலும் தீரர். இவர் தயானந்தர் சொற்பொழிவுகளைக் கேட்டு, அவரையே குருவாகக் கொண்டவர். இந்த வாலிபனைக் கண்டதும் தயானந்தர் "வா, வா, ஆரிய மணியே; வேததர்மம் உன்னை அழைக்கிறது" என்று வரவேற்றார். சாமாஜீக்கு தயானந்தரே பாணினிவியாகரணம் சொல்லி வைத்தார். இந்த வாலிபனை இங்கிலாந்திற்கு அனுப்பினல், ஆரிய தர்மமே புகழ் பெறும் என்று கருதி, தயானந்தர் அப்போது பம்பாய்க்கு வந்திருந்த புலவர் மோனியர் வில்லியத்திற்கு சாமாஜியை அறிமுகப்படுத்தினர். வில்லியம்ஸ் மிக்க மகிழ்ச்சியுடன் சாமாஜி ஆக்ஸ்போர்டில் படிக்க ஏற்பாடு செய்தார். பணம் வேண்டுமே? சேத் சப்பில்தாஸ் லல்லுபாய் என்ற செல்வர் தம் மகளை சாமாஜிக்கு மணமுடித்தார். சீமைப் படிப்பிற்கு வேண்டிய பணமும் உதவினர். சாமாஜி ஆக்ஸ்போர்டு படிப்பிலும் முதன்மை பெற்று, கிரீக்குலத்தீனிலும் முதல் பரிசு பெற்று, ஆக்ஸ்போர்டு பாலியல் கல்லூரியிலேயே புலமை நடாத்தினர். அங்கே வேத தர்மத்தையும் ஆரிய பாஷையின் சிறப்பையும் பற்றி அரிய சொற்பொழிந்தார். மந்திரி கிளாட்ஸ்டன் மகன் இவர் தோழர்—சகபாடி. இவர் மூலம் கிளாட்ஸ்டன் வீட்டிற்குச் சென்று அப்பெரியார் பேச்சுக்களையும் குறிப்புகளையும் அடிக்கடி படித்தார். சமாஜி பாரிஸ்டருக்குப் படித்து, ஆக்ஸ்போர்டில் சட்டத் தொழிலும் நடத்தினர். அவர் இந்தியாவுக்கு வந்ததும், ஒரு சமஸ்தான திவானனர். பிறகு ஆஜ்மீரில் பாரிஸ்டர் தொழில் நடத்தினர். பிறகு உதயபுரி, ஜுனகாத சமஸ்தானங்களின் திவானயிருந்து, ஆஜ்மீருக்குத் திரும்பி வந்து வக்கீலானர். மூன்று பஞ்சாலைகளையும் இவர் நடத்தி, ஏராளமான பொருள் சேர்த்தார்.

இந்த மகா மேதாவி, கல்வியும் செல்வமும் பெறுவதுடன் நிற்கவில்லை. தேசம் அன்னியருக்கு அடிமைப் பட்டு வருந்துவதைக் கண்டு, சுதந்தர வீறுடன் எழுந்தார். பிரிட்டிஷ் பார்லிமெண்டில் புகுந்து, இந்தியாவுக்காகப் போராட, லண்டனுக்குச்

சென்றார். ஆனால் தேர்தலுக்கு ஏராளமான பணம் செலவிட வேண்டியிருந்தது. அந்தப் பணத்தை வேறு நல்ல வழியிற் செலவிட நினைத்து, லண்டனில் புகழ் பெற்ற இந்திய வீட்டை நாட்டி வீர வாலிபர்களைக் கூட்டிப் புரட்சி நடத்தினார். வீர சாவர்கார், வீர விளக்கு வ. வெ. சு. ஐயர், மாதாம்காமா முதலிய தேசபக்தர் சாமாஜியின் ஆதரவில், இந்திய வீட்டிலிருந்து பலாத்காரத்தால் சுதேசம் விடுதலை பெற வேண்டிய முயற்சிகள் செய்தனர். காரிருஷ்ண வர்மா 'ஸோஷியாலஜிஸ்ட்' என்ற பத்திரிகை மூலம் காரசாரமான வீர உரைகளைப் பொழிந்து, புரட்சிக் கனலை மூட்டினார். இந்தப் புரட்சி நாடகம் டிங்கிரா கர்ஸான் வில்லியைச் சுட்டதுடன் முடிந்தது. சாவர்கார் அந்தமான் சென்றதும், ஐயர் புதுவையிலிருந்து புரட்சி நடத்தியதும் எமது வீர விளக்கு வ. வே. சு. ஐயர் சரிதையிற் காண்க.

சாமாஜி ஹெர்பெர்ட் ஸ்பென்ஸரின் நண்பர். அவர் பெயரால் ஆக்ஸ்போர்டில் பிரசங்கம் நடக்க ஏற்பாடு செய்தார். பாரிஸ் சர்வகலாசாலைக்கும் நன்கொடையளித்தார். 1915-போரின் போது வர்மா ஜினீவாவில் தங்கினார். அங்கிருந்தே தேசத் தொண்டு செய்தார். அவர் இந்தியாவில் தங்கியிருந்தால், சுபாஷ் போஸ் போல வீரச் செயல் செய்திருப்பார். 1931-ஆண்டு அவர் இறந்ததைக் கேட்டு வருந்தாத உள்ளமில்லை. அப்படிப்பட்ட வீரப் புலவர் சாமாஜி ஒரே ஒருவரையே—தயானந்தரையே, குருவாக ஒப்பினார்.

## 76. பூனாவில் வெற்றி

இச்சமயம் மஹாதேவ கோவிந்த ரானடே என்ற பேரறிஞர், சீர்திருத்த வாதி, பூனாவில் ஜில்லா நீதிபராயிருந்தார். இவருக்கு சுவாமிகளிடம் பெரு மதிப்பு; இவரே தயானந்தரைப் பூனாவுக்கு அழைத்து உபசரித்து, ஐம்பது பிரசங்கங்கள் செய்வித்தார். இவற்றின் சாரம் மராதியிலும் வந்தது. ரானடேயே அதை நூலாக்கினார். பதினைந்து பிரசங்கங்கள் இந்தியில் வந்தன. ரானடே எல்லாப் பிரசங்கங்களையும் கவனமாகக் கேட்டு, தயானந்தரையே தமது குருவாகக் கருதி வணங்கினார். எல்லாப் பிரசங்கமும் நடந்த பிறகு, பண்டிதர்கள் கண்டனக் கூட்டம் கூடி, சுவாமிகள் கொள்கைகளை எதிர்த்தனர். "வாரும் வாதாட" என்றழைத்தனர்; ஆனால் வாதாட அஞ்சிப் பின் வாங்கினர்.

எதிர்ப்பு வர வர, சுவாமிகளின் இடிமுழக்கமும் வலுத்தது. "பிறக்கும் போதே எவனும் பிராமணனில்லை, கல்வி கேள்வி ஒழுக்

-கங்களாலேதான் ஒருவன் அந்தணனாகிறான். குண கர்மங்களுக்குத் தக்கபடிதான் வர்ணமுண்டாகும். வேதத்தை பிராமணரே பூட்டி வைத்தனர்; இப்போது அவர்களும் அதைப் படிப்பதில்லை. வேதம் எல்லாருக்கும் பொது நூல்; எல்லாரும் அதைப் படிக்கலாம். வேதத்தில் உரு வணக்கம் இல்லை, சாதி பேதமும் இல்லை" என்றெல்லாம் வீறிட்டார் வேதசிம்மம். பூனா உதவி கமிஷனர் நாராயண பீகாஜீக்கு மூக்குக்குமேல் கோபம் வந்தது. வைதிகப் பிராமணர் அவனுடன் சேர்ந்து, இந்தச் சாமியாரை ஒழிக்கச் சதி செய்தனர். கண்டனக் கூட்டம் போட்டுக் கதறினர். பொது ஜனங்கள் இவர்கள் பக்கமே வரவில்லை. எல்லாரும் தயானந்தரிடமே ஓடினர். போதாக் குறைக்கு எத்தனையோ பேர் விக்கிரகங்களைத் தூக்கி எறிந்தனர். யாரோ ஒருவர் கணேசரைச் சாக்கடையில் எறிந்தார். அஹல்யா விக்ரகத்தைக் குப்பைத் தொட்டியில் போட்டார். இன்னொரு பிராமணன், பால வெங்கட்ராவ், கோவிலுக்கு எதிரேயுள்ள தீர்த்தச் சாக்கடையில், மணங்குக் கணக்கான விக்கிரகங்களைப் புதைத்தான். வைதிகரின் வயிறு கொதித்தது; நெஞ்சு வஞ்சந் தீர்க்கக் குமுறியது. உள்ளூர் பத்திரிகைகளும் கண்ட கதைகளைத் திரித்து விட்டு, அந்த வயிற்றெரிச்சலுக்கு எண்ணெய் வார்த்தன. முன்பே மாதர் மறு மணத்தையும், ருதுமதி விவாகத்தையும் போற்றிக் கிளர்ச்சி செய்த மஹாதேவ ரானடேயை எதிர்த்து, வைதிகப் பட்டாளம் சாபக் கூக்குரல் வைத்தது. இப்போது கேட்க வேண்டுமா? "இந்தத் தயானந்தர் ஹிந்து தர்மத்தையே பாழாக்கும் பதிதர். இவர் கோயில்களிற் புகுந்து தேவதைகளைச் சம்மட்டியால் உடைத்து, கலிநி வேலை நடத்துகிறார். இவர் பேச்சு மனக் கொதிப்பெடுக்கிறது. இவரால் மற்றொரு சிப்பாய்க் கலகம் வரும். சர்க்கார் இவரைத் தண்டித்து வாயடைக்க வேண்டும்" என்றெல்லாம் கூச்சலிட்டனர். சர்க்காருக்குப் புகார் செய்தனர். ஒன்றும் பலிக்கவில்லை. ரானடே முதலிய அறிஞர் சுவாமிகளின் பெருமையைச் சர்காருக்கு விளக்கினர். வயிற்றெறிச்சலுடன் ஏமாற்றமும் சேர்ந்தால் கேட்க வேண்டுமா? எதிரிகளின் கூச்சலும் சூழ்ச்சிகளும் வலுத்தன.

தயானந்த கோஷ்டியும் நாளுக்கு நாள் பெருத்தது. பூனாவில் வெற்றிக்கொடி நாட்டி, தயானந்தர் சதாராவுக்குப் புறப்பட்டார். ஊர் மஹா ஜனங்கள் அவருக்குப் பட்டுபீதாம்பரங்களும் சால்வைகளும், தலைப்பாகையும் பரிவட்டமும் அணிவித்து, முன்னூறு

ரூபாயும் பரிசளித்து, அலங்காரமான ஊர்வலம் நடத்தினர். யானை மேல் அம்பாரி வைத்து, அதில் சுவாமிகளை ஏறச் சொன்னார்கள். "மஹா ஜனங்களே, நான் பரிசுக்கோ, பணத்திற்கோ பகட்டிற்கோ வாழவில்லை; வேத தர்மத்திற்கே வாழ்கிறேன். பொது ஜன நன்மைக்கே வாழ்கிறேன்; என் இடம் அம்பாரியன்று; என் இடம் பொது ஜனங்களிடையே; ஆதலால் உங்களுடன் நடந்தே செல்வேன்" என்றார். சுவாமிகள் அவ்வாறே சென்றார். மங்கள வாத்தியங்கள் முழங்கின; "தயானந்த சரஸ்வதிக்கு ஜே!" என்ற கோஷம் எட்டு திக்கும் எதிரொலித்தது; எதிரிகள் கலகம் செய்யாதபடி போலீஸ் காவலும் பலமாயிருந்தது.

இந்த அமளிக்கிடையே "தயானந்தக் கழுதைக்கு ஜே! கர்தபானந்த சரஸ்வதிக்கு ஜே" என்ற பேய்க்குரல்கள் காற்றைப் பிளந்தன! எல்லாரும் திரும்பிப் பார்த்தனர். எதிரிகள் ஒரு கழுதைக்குக் காஷாயம் கட்டி, அதன் மேல் "கர்தபானந்த சரஸ்வதி" என்றெழுதி, முன்னால் பறை கொட்டிக் கொம்பூதி, காலித்தனமாக தயானந்தரை வைது, வசைப்பவனி வந்து ஊர்வலத்தைக் கலைக்கப் புகுந்தனர். காலிகளுக்குக் கொண்டாட்டம். மடி நிரம்பச் செங்கல்லைக் கட்டிக் கொண்டு அவர்களும் கூட்டத்திற்கு வந்தார்கள். மாலை ஐந்து மணிக்குப் புறப்பட்ட ஊர்வலம் இருட்டிய பிறகே பிரசங்க மேடைக்கு வந்தது. சுவாமிகளின் கடைசிப் பேச்சு நடக்கப் போகிறது. தீவர்த்திகளுக்கிடையே தயானந்தர் தீப்பிழம்பு போல நின்றார். உடனே கழுதைப் பவனியர் கூட்டத்திற் புகுந்து"கழுதைச் சாமிக்கு ஜே,தயானந்தக் கழுதைக்கு ஜே" என்று பேய்க் கூப்பாடு போட்டுக் கல்லெறிந்து தீவர்த்திகளை அணைத்தனர். இரவு பத்து மணி வரையில் கலாட்டா ஓயவில்லை; போலீஸ் புலிகள் பின்புறம் திரும்பி நின்றன. முடிவில் போலீஸ் தலைவர் போர்டுமான் வந்து,காலிகளின் அட்டகாசத்தை அடக்கினார். கழுதையைக் கைப்பற்றிக் காலிக் கூட்டத்தைக் கலைத்தோட்டினர். கழுதை "காழ் காழ் காலிகள் ஒழிக" என்று சத்தமிட்டது.

சுவாமிகள் அன்று மிகவும் உணர்ச்சி ததும்பப் பேசினார். "மஹா ஜனங்களே, எனக்கு நீங்கள் செய்த மரியாதை, வேத தர்மத்திற்குச் செய்ததாகும். உங்கள் வெகுமானத்தை வேத தர்ம சேவைக்காகவே ஏற்கிறேன். எனக்கென்று எதையும் கோரவில்லை. நான் கோருவதெல்லாம் உங்கள் நன்மையே; எனக்கு எதிரிகள் செய்த அவமரியாதைகளையும் மகிழ்வுடன் ஏற்கிறேன்.

அது நமது சமுதாயம் எந்த நிலையில் இருக்கிறது என்பதையே காட்டுகிறது. இன்று எதிரிகள் செய்த வேடிக்கை, வாடிக்கை தான்! என் னுயிருக்கே உலை வைத்தனர் பல எதிரிகள். அவற்றை யெல்லாம் தாண்டி வேத சேவைக்காக வாழ்கிறேன். அறம் அறவோரைக் காக்கும்; அச்சம் இல்லை. ஆத்ம நிருக்கு அச்ச மில்லை. ஆரிய சமாஜத்தை வளருங்கள்; ஆர்ய தர்மத்தைப் பயிலுங்கள். வீடுதோறும் வேத விளக்கேற்றுங்கள். ஓம் ஓம்" ரானடே சுவாமிகள் அறிவையும், ஆற்றலையும், மனவிசாலத்தை யும் மெச்சினார். தயானந்தரின் வேதபாஷ்யம் வெளியிட ரூ 250 வசூலித் தளித்தார். இரண்டொரு மலைப்பிஞ்சுகளும் விழுந்தன. போலீஸ்காரர் "சுவாமிகள் இரவில் சென்றால் அபாயம்" என்றனர். " அச்சமும் அபாயமும் அலிகளுக்கு; நாம் தலை நிமிர்ந்து தைரிய மாகச் செல்வோம்" என்றார் சுவாமிகள். இருந்தாலும் சுவாமி கள் தமது ஜாகைக்குத் திரும்பிச் சென்றபோது, போலீஸ் புலிகள் பின்னே சென்றன. அவர்கள் மேலும் மலைப்பிஞ்சுகள் வந்து பொழிந்தன. சுவாமிகள் மலைபோல நிமிர்ந்து நடந்தார்.

மறு நாள் போலீஸ்காரர் இரண்டு வழைகளைக் கைது செய்து வழக்கு ஜோடித்தனர். 153 I. P. C. 147 I. P. C. தடபுடல் செய்தன. சுவாமிகள் யார் மேலும் குற்றம் சுமத்துவதில்லை. இதெல்லாம் கொசுக்கடி போல் தட்டி விட்டு, தயானந்தர் வேத சேவையில் வெறி கொண்டுலாவினார்.

## 77 பரோடா வெற்றி

சுவாமிகள் சதாராவில் சாஸ்திர விளக்கம் செய்து, பம்பாயிக்கு வந்து தீபாவளிக்கு மறு நாள், ஆரியப் புது வருஷத் திருநாளில், ஆவேசமாகப் பேசி ஸமாஜத்தை சீர்திருத்தப் பணி களுக்கு ஊக்கி விட்டு பரோடா சென்றார்.

பரோடாவில் திவான் ஸர். டி. மாதவராவ் தயானந்தரை வர வேற்று உபசரித்தார். மாதவராவ் விசாலமான உள்ளங் கொண் டவர். தயானந்தரிடம் ஈடு பட்டவர். சுவாமிகள் அரச விருந்தி னராக கோவிந்தராம் தர்ம சாலையில் தங்கினார். இரண்டு சிப்பாய்கள் அவரைப் பாதுகாத்தனர். தர்மசாலையிலேயே சுவாமி கள் வேத தர்மத்தைப் பற்றிப் பேசினார். சமஸ்தான உத்தியோ கஸ்தர்கள் அனைவரும் கருத்துடன் கேட்டனர். கஜானன்விடல் ராமச்சந்திர தேசமுக் போன்ற அறிஞரும், வருஷம் லட்ச ரூபா சன்மானம் பெறும் இசைப்புலவரான நவாபு மௌலானபக்ஷும்

பிரசங்கத்திற்கு வந்தனர். முதல் நாள் இந்தியாவின் முன்னேற்றம், மறு நாள் வேததர்மம் என்ற விஷயத்தைப் பற்றி சுவாமிகள் அற்புதமாகப் பேசினார். சாதிமத பேத மில்லாமல், எல்லாவற்றையும் அன்புடன் வரவேற்றார் தயானந்தர். வைதிகர்களும் வந்து யாரும் தம்மைத் தொட்டு விடாதபடி ஒதுங்கி யமர்ந்தனர், தயானந்தர் "யதேமாம் வாசம் கல்யாணீம்" என்ற வேத மந்திரத்தை இனிமையாகப் பாடிய பொழுது, வைதிகப் பிறவிகள் "ஹரி ஹரி அபசாரம்" என்று காதையும் கண்ணையும் மூடிக்கொண்டார்கள். ஏன்? இதர ஜாதிகள் கேட்கும்படி வேத மந்திரத்தைச் சொன்னால் மகா பாபமாம்! "வைதிகர்காள் பேசாமல் உட்காருங்கள்; இன்றேல் வெளியேறுங்கள்" என்றார் கஜானனர். சிறிது அமர்ந்தனர். பிறகு ஆத்திரமாகக் கிளம்பி "ஹே சந்யாசி! நீ சொல்வதை ஒப்போம். வா வாதத்திற்கு," என்று கூச்சலிட்டனர். தயானந்தர் மார்தட்டி முன்னின்று "யார் யார் வாதத்திற்கு வருகிறீர்கள்? ஆறு மாதமா? ஆறு நாளா? இரண்டுமணி நேரமா? வாருங்கள்" என்றார். யக்ஞேச்வர சாஸ்திரி இலக்கணத்தில் கிளம்பினார். அப்பைய்யா சாஸ்திரி நியாய சாஸ்திரத்தை அலசினார். தயானந்தர் அவர்கள் சொல்லிலும் பொருளிலும் பிழைகளைச் சுட்டிக் காட்டிச் சபை சிரிக்க வைத்தார். ஜம்பம் பலிக்காமல், பண்டிதர்கள் "ஹரி ஹரி அபசாரம்" என்று எழுந்து போனார்கள். பிறகு பிரசங்கம் அமைதியாக நடந்தது.

"வேத தர்மம் மகத்தானது; ரிஷிஞானமே நமது சக்தி; வேத காலத்தில் இப்படிப்பட்ட சாதி பேதமே இல்லை. பிற்காலம் வயிற்றுப் பிழைப்புக்காக, வைதிகப் பிராமணர்கள் வேத மந்திரங்களை உருப்போட்டு, அர்த்தந் தெரியாமல் சொல்லிப் பிழைத்தனர். அதைப் பிறர் கேட்டால் மோசம் என்று மூடிவைத்தனர். அதனால் வேதவொளி நாட்டில் பரவாமல், கண்ட மூடக்கொள்கைகளுக்கு நமது ஜனங்கள் அடிமைக ளானார்கள். இந்தியா ஏழைநாடானது; பரதர்மத்திற்கு அடிமையானது. வேத விளக்கை ஒவ்வொரு வீட்டிலும், ஒவ்வொரு உள்ளத்திலும் ஏற்றுவதே நாடு உய்யும் வழி" என்று உருக்கமாகப் பேசினார் தயானந்தர்.

கூட்டத்திலிருந்து வெளியேறிய வைதிகர்கள், ஊரில் "பாஷாண்டிச் சாமியார் ஏதோ உளறுகிறார். அவர் பேச்சைக் கேட்டால் பாபம்" என்று ஊளை யிட்டனர். "இந்தமாதிரி உளறுகிறீர்கள். சுவாமிகள் சொல்வதே உண்மை" என்று அறிவாளர் எதிர்களை வாயடக்கினர்.

மறுநாள் சுவாமிகள் ராஜ தர்மத்தைப் பற்றி ஆழ்ந்த கருத்துடன் பேசினர். சுதேச சமஸ்தானதிபதிகள் தேச தர்மத்தைப் பாதுகாக்க வேண்டும். தேசத்தில் பிரமசரியக் கல்வி பரவ வேண்டும். குருகுலங்கள் நாட்ட வேண்டும். ஆண் பெண் இரு பாலாருக்கும் கட்டாயக் கல்வி தரவேண்டும். கல்விப் பருவத்தில் கலியாண நினைப்பே கூடாது. சரியான வயதும், தகுதியும் வந்தே மணம் புரிய வேண்டும். பிரமசரிய ஆசிரமத்தைச் சரியாகக் காத்தாலே, இல்லறம் இன்பமாகும். அரசாங்கம் வரி வருமானத்தைக் கல்வி, தொழில், இராணுவம், சுகாதாரம், வேத தர்மப் பிரசாரங்களில் தாராளமாகச் செலவிட வேண்டும்" என்று தயானந்தர் பேசினர். மாதவ ராவ் "சுவாமிகளின் அரசியல் அறிவு என்னைவிட நூறு பங்கு அதிகம். இன்றே என் கடமையை நான் உணர்ந்தேன்" என்றார். வேத பாஷ்யம் வெளியிட பரோடா மஹா ஜனங்கள் பண முடிப்புத் தந்தனர். வயிற்றெரிச்சல் வைதிகர் "சாமியாருக்குப் பணம் எதற்கு? துறவி பணத்தைத் தொடலாமா?" என்று பாய்ந்தனர். "ஐயா நான் கங்கைக் கரையில் சுற்றித் திரிந்த நாளில், பணத்தைத் தொடவில்லை. இப்போது வேத தர்மத்தை நாடெங்கும் பரப்பவும், குருகுலங்கள் நாட்டவும், ஆரிய சமாஜத்தை வளர்க்கவுமே பணம் வேண்டுகிறேன். நல்ல காரியத்திற்குப் பணத்தை விரும்புவது நலமே" என்றார். ஆனால் தமது பிரசங்கத்திற்காக சுவாமிகள் எதுவும் பெற்றதில்லை. திவான் மாதவ ராவ் சுவாமிகளைத் தமது வீட்டிற்கு அழைத்து பிக்ஷை செய்து, தங்கள் பிரசங்கம் அற்புதம் என்று வெள்ளித் தட்டில் ஆயிரம் ரூபா வைத்துத் தந்தார். "நான் பிரசங்க வியாபாரி யல்லேன். வல்லபாசாரிபோல் குரு தட்சிணை வேண்டேன்" என்று மறுத்தார். மஹாராஜாக்கள் பட்டு பீதாம்பரம் சால்வைகள் தரும்போது கூட "எனக்கு இவை தேவையில்லை. தேவைப்பட்டவர்களுக்கே தாருங்கள்" என்று மறுத்தார்.

## 78. மோனியர் வில்லியம்ஸ்

பரோடாவிலிருந்து திரும்பும்போது, சுவாமிகள் சூரத்தில் சொற்பொழிந்தார். அங்கே பள்ளிப் பரிசோதகரும் வடமொழிப் புலவருமான டாக்டர் வான் புல்லார் சுவாமிகளைக் கண்டு அளவளாவி, தமது மனுஸ்மிருதி மொழி பெயர்ப்பைக் காட்டினர். தயானந்தர் அதை மெச்சினர். இந்த வெள்ளைக்காரனுக்குள்ள அக்கறை கூட நம்மவருக்கில்லையே என்று வருந்தினர். புல்லார்,

பஸ்லேன் முதலிய இடங்களில் சுவாமிகள் பேச்சிற்கு நல்ல மதிப்பிருந்தது. ஒருநாள் வேலையாள் சுவாமிகளின் கடிகாரத்தைத் திருடி விட்டான். அவனை உடனே கண்டு பிடித்து முன்னே நிறுத்தினர். "இனி ஒன்றும் திருடுவதில்லை" என்று உறுதி கூறச் சொல்லி, சுவாமிகள் அவனை விடுதலை செய்தார். "இவனைத் தண்டிக்க வேண்டும்" என்றனர் அன்பர். "பாம்பைத்தான் அடிக்க வேண்டும்; புற்றை அடித்தென்ன பயன்? ஆளை விட்டுத் திருட்டைக் கண்டிப்பதே அறம்" என்றார் தயானந்தர்.

இவ்வாறு சுற்றிக் கொண்டு சுவாமிகள் பம்பாய்க்கு வந்தார். (5-3-1867) பம்பாயில் அமோகமான பிரசங்கங்கள் நடந்தன. வெள்ளைக்காரர்களும் வந்து கேட்டு வியந்தனர். தயானந்தர் பெயர் பல ஐரோப்பியருக்குத் தெரிந்திருந்தது. கோவிந்த விஷ்ணு ஆங்கிலக் கலாசாலையில், தயானந்தர், வேத தர்மத்தைப் பற்றி இந்தியில் பேசினர். பம்பாய் கலெக்டர் ஷெப்பேடும், அறிஞர் மோனியர் வில்லியம்ஸும் வந்து கேட்டு மெச்சி மகிழ்ந்தனர். நீதிபதி கோபால் ராவும், ஆரிய சமாஜ அறிஞர் காசிநாதனும் "இந்தியாவின் பெருமை தயானந்தர் பெருமையே; இந்தியா முன்னேற இவர் உபதேசங்களே சமய சஞ்சீவி" என்று போற்றினர். புலவர்மணி மோனியர் வில்லியம்ஸ், சுவாமிகளுடன் சமஸ்கிரதத்தில் நீண்ட நேரம் அளவளாவி, வேத நுட்பங்களை அறிந்தார். "இந்தமாதிரி யாரும் வேதத்தை விளக்கியதில்லை; வேதம் தங்களால் புத்துயிர் பெற்று மனித வாழ்விற்குப் பயனானது...வேத ஜோதி தாங்களே" என்று மெச்சிப் பல வெள்ளைக்காரருக்கு சுவாமிகளை அறிமுகப்படுத்தினர் மோனியர். சிந்தாமணி ஹால், நகர மாளிகை, முதலிய பல இடங்களில் சுவாமிகளின் பிரசங்கம் இனிது நடந்தது. ஆரிய சமாஜமும் நல்ல வளர்ச்சி பெற்றது.

## 79. ராம்லால்

தயானந்தர் புகழ் ஓங்க ஓங்க, வைதிகப் பிராமணர்களுக்கு காது படபடத்தது. எப்படியாவது இவரை ஒழிக்கவே அவர்கள் சூழ்ச்சி செய்தார்கள். ஒரு நாள் நாடியா சோதிடர் ராம் லால் பம்பாய்க்கு வந்தார். அவர் ஆண்டுதோறும் வந்து மார்வாரிச் செல்வருக்கு ஜாதக பலன் சொல்லிப் பணம் வசூலித்துச் செல்வதுண்டு. ஜாதகம் சோதிடம் என்றாலே தயானந்தர் மூடக் கச்சந்தி, வஞ்சத் தந்திரம், என்று வெறுப்பார். பண்டித ராம்லாலுக்கு தயானந்தர் திறமையும் பான்மையும் தெரியும். இரு

வரையும் பொருத விட்டுப் பார்க்கத் தீர்மானித்தனர் வைதீகர். "சோதிடரானதால் இந்தச்சாமியார் எப்போது ஒழிவார் என்றும் அறிவார், சகுனம் பார்த்து, வேளை பார்த்து வாதம் கிளப்பி அவரை முறியடிப்பார்" என்று மனப் பால் குடித்தனர். தயானந்தர் "வாரும் சோதிடரே...இதோ தயார்" என்றார். கட்டுலால் வீட்டில் விவாதம் நடந்தது. ஆனால் கட்டுலால் தலை வலி என்று தப்பி விட்டார். வேதத்தில் விக்கிரக ஆராதனை உண்டா என்பது கேள்வி. இராம் லால் லக்னம் சகுனம் எல்லாம் பார்த்துதான் வாதத்தில் இறங்கினார். ஆனால் வேதம் அவருக்கு அனுகூலமாயில்லை. புராணங்களைப் புரட்டிப் புரட்டி சுலோகங்களை ஒப்பித்தார். வேதம் வேதம் என்று எல்லாரும் கூவினர். ராம லால் புராண சுலோகங்களையே ஒப்பித்தார். தயானந்தர் புராணங்களின் சாரத்தை வெளுக்கத் தீட்டினார். முடிவில் இரவு பதினொன்றரை மணிக்கு "வேதம் விக்கிரக ஆராதனையை ஒப்பவில்லை; புராணமே ஒப்புகிறது" என்று ராம லால் சொல்லி எழுந்தார். "தயானந்தருக்கு ஜே...ஆரிய சமாஜத்திற்கு ஜே, வேத தர்மம் வாழ்க!" என்று ஜனங்கள் கரகோஷம் செய்தனர். சேட் கோகுல் தாஸ் தேஜ்பால் "சாமி, விக்கிரகாராதனையைத் திட்டாதிரும்; பம்பாய் பனியாக்களை யெல்லாம் ஆரியசமாஜத்தில் சேர்த்து விடுகிறேன்" என்றார். "ஐயா, அப்படி என் கொள்கைக்கு வஞ்சனை பண்ணிக் கும்பல் சேர்க்க மாட்டேன். உண்மை யறிந்தவர்களையே நான் வரவேற்கிறேன்" என்றார் தயானந்தர். இந்த சேட்டின் மகள், இளம் விதவை. அவள் கோகுல்யகோசாமியிடம் போய் வருவதுண்டு. கோசாமி அவளுடைய தங்கச் சங்கிலியை வாங்கிக் கழுத்தில் மாட்டிக் கொண்டார். சேட்டுக்குக் கோபம் வந்து போலீஸுக்குத் தாவினார். கோசாமி 'மாதிரி பார்க்க வாங்கினேன்' என்று சங்கிலியைத் திருப்பிக் கொடுத்தான். இந்த மாதிரி குருபீடங்களின் குட்டை அம்பலமாக்கினார் தயானந்தர். அதன் பயனாக ஜனங்களுக்குப் பொய் நம்பிக்கையும் போலித் துறவும் புளித்தன.

## 80. இந்தூரில்

தயானந்தர் சுதேச மன்னரிடம் பொருள் திரட்டி, நாடும் அறமும் வாழப் பெரும் பணி புரியத் திட்டம் போட்டார். அதற்காகவே அவர் மன்னரைக் கண்டு, வேத தர்மத்தை உபதேசித்து உணர்ச்சி எழுப்பினார். 1876-ஏப்ரல் மாதம் அவர் இந்தூர் மஹாராஜா துகோஜி ராவைப் பார்த்தார். இவர் சிவ பக்தர்; என்றாலும்

தயானந்தருக்குத் தக்க மரியாதை செய்தார். தயானந்தர் அவ ருக்கு ஹிந்தியில் ராஜ தர்மத்தை எழுதிக் கொடுத்தார். அதுவே சத்தியார்த்தப் பிரகாசத்திலும் இடம் பெற்றிருக்கிறது.

மஹாராஜா அவருக்குச் சால்வைகளும் பரிசுகளும் தந்தார். " அரசே! இவையெல்லாம் எனக்குத் தேவையில்லை. வேத தர் மத்தை நிலை நாட்டவே உதவும் " என்றார் தயானந்தர். தயானந் தரின் வேத பாஷ்யம் ஐம்பது பிரதிகள் வாங்கிக்கொள்வதாக வாக்களித்தார் அரசர். " தயானந்தர் சண்டமாருதப் புலவர், அவர் பேச்சு உடனே நம் உள்ளத்தைத் தொடுகிறது " என்று இந்தூர் புலவர்கள் மெச்சினார்கள்.

## 81. பீரங்கி முனையிலும்

சுவாமிகள் பெயர் இப்போது எங்கும் பரவிப்போனது. அவர் பிரசங்கங்களைக் கேட்கத் திரளான ஜனங்கள் கூடினார்கள். மௌல்விகளும், பாதிரிகளும் அவருடன் அளவளாவிப் பயன் பெற்றனர். தமது கொள்கைக்கு எதிரான காரியங்களை யெல் லாம் தயானந்தர் பலமாகக் கண்டித்தார். பரூகாபாது வேத பாடசாலை ஆசிரியர், தயானந்தரின் சகபாடி; அவர் வேத தர்மப் பிரசாரத்திற்குப் பதிலாக சிவ பூஜைப் பிரசாரம் செய்தார். தயானந்தர் அந்தப் பள்ளிக்கூடத்தையே மூடித் தனியாக வேத வகுப்பு நடத்த ஏற்பாடு செய்தார். ஜ்வாலா தத் என்பவர் தயா னந்தர்மேல், இந்திரன், பிரம்மா என்று பாட்டுக் கட்டினார். " ஐயா! நான் சாதாரண மனிதன்! என்னை இப்படி யெல்லாம் கடவுளுக்குச் சமானமாகப் புகழாதே; இறைவனையே வேத வாக்கினால் தோத்திரம் செய் " என்று அடக்கினார். இந்தக் காலம் சிறிது ஆத்மானுபவம் வந்த முனிவர்களை சிவன், விஷ்ணு, முருகன் அவதாரம் என்று பாடி, ஜனங்களுக்குக் கடவுளிடம் உள்ளம் போகாமல் செய்யும் கவிகள், இதைக் கவனிக்க வேண்டும்.

ரெவரண்டு லூகாஸ் என்ற பாதிரி, தயானந்தருடன் நீண்ட நேரம் பேசினார். சுவாமிகள் பைபிளின் சாரத்தையும் வேத வாக்குகளின் பெருமையையும் ஒப்பிட்டுப் பேசினார். பாதிரி "கிறிஸ்துவை நம்பினாலே மோட்சமுண்டு" என்றார்.

" ஐயா! கடவுளை நம்பி அன்பு செய்தாலே மோட்சம் உண்டு. உண்மை, நன்மை, அறிவு வளர்ச்சி, மனமடங்கி தியா னம் செய்தல், யோக சாதனம் ஈசுவர மகிமையைப் பாடுதல்,

முதலியவற்றாலேதான் மோட்சம் வரும். கண்ட பாவங்களைச் செய்துவிட்டு சைத்தான் பாவத்தில் இழுத்து விட்டான். சிலுவையை நம்பினால் பாவம் போய்விடும் என்பது அறியாமை. செய்த பாவத்தை அனுபவித்தே தீரவேண்டும்" என்றார் தயானந்தர்.

"கிறிஸ்து செத்தாரை எழுப்பினார். அவரே ரக்ஷகர், அவரே நன்மை செய்பவர்" என்றார் பாதிரியார். "ஐயா, பாதிரியாரே! எந்தக் காலத்திலோ கிறிஸ்து நன்மை செய்தார். சுக்ராசாரியரும் சஞ்ஜீவியால் இறந்தவனை எழுப்பினார். சங்கரர் பெரிய நன்மை செய்தார். கிருஷ்ணன் கீதை மூலம் அரிய உபதேசம் செய்தான். இவர்களைச் சும்மா நம்பி ஜபம் செய்தால் இன்பம் வராது. இவர்கள் சொன்னபடி நடக்கவேண்டும். கிறிஸ்துவும் இவர்களைப் போலவே அரிய செயல்களைச் செய்தார். இன்று அவரை நம்பிக் கொண்டு சும்மா இருந்தால், முக்தி வராது. நமக்காக யாரும் வக்காலத்து வாங்கிக்கொண்டு கடவுளிடம் மோட்சத்திற்காக வாதாட முடியாது. அவரவர் விதியை அவரவர் தீர்மானிக்க வேண்டும். தனி மனிதரையோ, உருக்களையோ வணங்கித் திரிவதாற் பயனில்லை" என்று விளக்கினார் ஞானி. பாதிரி திடீரென்று எழுந்தார். "இதோ இப்போது உம்மை பீரங்கி முனையில் நிறுத்தி, உரு வணக்கம் செய்யும், இன்றேல் குண்டு பாயும், சுடுவோம்" என்றால் என்ன செய்வீர்?" என்று கேட்டார்.

தயானந்தர் மார்பைக் காட்டி, "என்னைச் சுடும்; நான் இறந்தாலும் உரு வணக்கம் செய்யேன்" என்றார். பீரங்கி முனையிலும் உண்மையே பேசும் தீரனே தீரன்!

## 82. வேத பாஷ்யம்

இக்காலமே தயானந்தர் வேத பாஷ்யத்திற்கு முன்னுரை எழுதத் தொடங்கினார். அதை மாத 'மலராக வெளியிடவும் ஏற்பாடு செய்தார். ஆனால் ருக்வேத முன்னுரைதான் பூர்த்தியானது. அதற்குள் மாக்ஸ் முல்லர் எழுதிய விரிவுரையைப் படிக்க ஆங்கிலம் கற்கத் தொடங்கினார். அதற்காக அமைந்த ஆசிரியர் வனமாலி மாக்ஸ் முல்லர் உரையை இந்தியில் சொன்னார். அதுவே போதும் என்று தயானந்தர் ஆங்கில முயற்சியை நிறுத்தினார். தயானந்தர் அயோத்தியில் ஒரு மாதத்திற்கு மேல் இருந்து, ருக்வேத முன்னுரையை எழுதினார். இங்கே பைராகிகள் எதிர்த்தனர். அவர்கள் வாயை அடக்கிவிட்டு சுவாமிகள் லக்

னேவுக்கு வந்தார். லாலா விருஜலால் சுவாமிகளை உபசரித்து உபதேசம கேட்டார். அறிஞர் பலர் சுவாமிகளிடம் பேசி வேதப் பொருளை அறிந்தனர். இங்கே சில குண்டல தீக்ஷிதர்கள், யாகம் செய்யும் அவசியத்தைப்பற்றி வாதாடினர். சுவாமிகள் அரிய கோட்பாடுகளுடன் உண்மையை விளக்கினர். "வேதத்தைப் பலர் படித்ததே யில்லை; படிப்பவரும் பொருள் விளங்காது உருத் தள்ளுகிருர்கள். பொருளைத் திரித்துக் கூறுகிருர்கள். 'ஆலம்பனம்' என்பதற்குக் கொல்லல் என்பதைவிடத் தொடுதல் என்பதே பொருள். அன்பினல் ஆருயிர் உள்ளத்தைத் தொடும் புண்ணியத் தியாகங்கள் செய்தலே யாகமாகும். ஆட்டைக் கொன்று அவியுண்ணல் வேள்வியில்லை. கொலையினல் பழி பாவமே வரும். அப்படி ஆட்டுக் கொலையால் மோட்சம் வரும் என்ருல், கசாப்புக் கடைக்காரர்களெல்லாம் சுவர்க்கலோகத்தில் இருக்க வேண்டுமே. வேதத்தை ஒரு வகுப்பினரே மூடி வைத்து, உண்மை யொளியை மறைப்பது கொடுமை. வேத ரிஷிகள் இப்படிச் சாதி வேறுபாடே பாராட்டவில்லை. வர்ண பேதம் பிறப்பினல் இல்லை. தகுதியால் வருவது. காலை மாலை சந்தி ஜபங்கூடச் செய்யாதவரை பிராமணர் என்ன முடியாது. வேதத்தில் இல்லாத உருக்களையெல்லாம் கோயில் கட்டி ஆடம்பரமாக வணங்குதலால் நலமென்ன? ஒரு கடவுளை ஒருமை கொண்ட உள்ளத்தில் தியானித்தே உணர முடியும். கடவுள் மனித சமூதாயத்திற்குத் தந்த தர்ம நூல் வேதம். அதைப் பின்பற்றுவது தான் இன்ப வழி" என்று சுவாமிகள் விளக்கினர்.

சுவாமிகள் ஷஹஜஹான்பூரில் ஐந்து நாள் இருந்து, பரேலிக்கு வந்தார். இங்கே வேதபாஷ்யம் எழுதத் தொடங்கி, வேத உண்மைகளையும் ஜனங்களுக்கு விளக்கினர். விக்கிரக ஆராதனையைக் கண்டிக்க வேண்டாம் என்று பல வைஷ்ணவர்கள் வேண்டினர். சுவாமிகள் பொய்யை பொய்யென்பதுதான் என் கடமை என்று பலவாகப் பிரசாரம் செய்தார். அங்கதாரம் தன் குண்டர் பட்டாளத்துடன் வாதாட வந்தான். குண்டரை வெளியே நிறுத்திவிட்டு வரச் சொன்னர் தயானந்தர். அது முடியாது என்று கலாட்டா செய்ய வந்த அங்கதாரமர், திரும்பச் சென்ருர். சுவாமிகள் பிரசங்கம் செய்யும்போது சில பிராமணர் வசை மாரி பொழிந்தனர். "என் கடமையை நான் செய்கிறேன். பிராமணர் கடமை வசைபொழிவதென்ருல், நடத்திப்பாருங்கள் காரியத்தை' என்று சிங்கம் தீவிரப் பிரசாரம் செய்தார்.

சுவாமிகள் மூரதாபாதில் வேத விளக்கம் செய்தபோது பார்க்கர் என்ற பாதிரியும் அவர் நண்பர் பெய்லியும் வந்து, "உலகம்ஆராயிரம் ஆண்டுகட்குமுன்பே உண்டானதாகும். ஆதாமே முதல் மனிதன்! அவன் பாபமே மனித சமுதாயத்தைப் பிடித்தது. ஏசுநாதர் சிலுவையேறி எல்லா பாபத்திற்கும் வருந்தினார்" என்று வழக்கப்படியே பேசினர். தயானந்தர், "ஐயா, உலகம் உண்டாகி 196-கோடி ஆண்டுகள் ஆயின. அஃது இன்னும் 284 கோடி ஆண்டுகள் இருக்கும். ஆதாமுக்கு முன்பே உலகம் இருந்தது. ஆதாமைப் பாவி என்றால் கடவுளின் பாதுகாப்பில் அவன் இருந்தென்ன பயன்? கடவுள் அறியாமல் அவன் பாவியானதேன்? ஆதாம் பாபம், மனித சமுதாயத்தைப் பிடித்தது என்பது கட்டுக் கதை. அவரவர் செயலால், இன்ப துன்பம் உண்டாகிறது" என்றார். இத்துடன் சுவாமிகள், கட் குடியின் தீமைகளை விளக்கி, மதுபானத்தை விடும்படி பலரை வற்புறுத்தினர். நடத்தை கெட்டவர் உண்ண அழைத்தால், "நடத்தையைத் திருத்திக் கொள்ளுங்கள்" பிறகு மறுவேலை; என்பார். பாவ வழியில் பணம் சேர்த்த செல்வர் வீட்டுக்குக்கூட அவர் பிக்ஷைக்குச் செல்வதில்லை பரேலியில் அவர் செய்த வேத விளக்கம் பலரை ஆரிய சமாஜிகளானர்கள்.

## 83. டில்லி தர்பாரில்

1—1—1877; டில்லியில், லிட்டன் பிரபு ஒரு தர்பார் கொண்டாட்டம் நடத்தி, நாட்டின் அரசரையும் செல்வரையும் ஒன்று கூட்டினார். அரசரும் புலவரும் அங்கே கூடினர். அனைவரையும் கண்டு கூட்டி வேத தர்மப் பிரசாரம் செய்யலாம் என்றே தயானந்தரும் டில்லியில் டேரா அடித்து முகாம் போட்டார். அருகே தான் காஷ்மீர் மன்னர் ஜாகையிருந்தது. கேசவசந்திரர், சையத் அகமத்கான், ராஜா ஜய கிஷன்தாஸ் முதலியோர் வந்திருந்தனர். அறிஞர் இந்திரமணி சுவாமிகளுடன் இருந்து, சௌகரியங்களைக் கவனித்தார். "சுவாமி தயானந்தர் ஜாகை" என்று பலகை மாட்டி "வேத தருமத்தைம் பற்றி ஆராயப் புலவர் வருக" என்ற அறிக்கையும் விடுத்தார் சுவாமிகள்.

மஹாராஜா துகாஜிராவ் ஹோல்கார் சுவாமிகளுடன் அளவளாவி மகிழ்ந்தார். காஷ்மீர் ராஜாவும் சுவாமிகளிடம் வர எழுந்தார்; ஆனல் அவர் பண்டிதர் கணேச சாஸ்திரி தடுத்து, தயானந்தர் பேச்சைக் கேட்டால் நமது சமஸ்தானக் கோயில்களெல்

லாம் மூடவேண்டி வரும். அவர் உருப்பகைவர்;வேதத்தைத் திரித்துக் கூறுகிறார்'' என்று கோளேற்றி விட்டார். ஆனால் ஆரிய சமாஜிகளுக்கும் பண்டிதருக்கும் நடந்த ஒரு விவாதத்தில், வேதம் உருத் தொழுகையை ஒப்பவில்லை என்பதையும் சொல்லிவிட்டார். அரசர்களைச் சபை கூட்டி வேத தர்மத்திற்கு ஆக்கந் தேட முயன்றார் சுவாமிகள்.

ஹோல்காரும் மன்னர் சபை கூட்டுவதாகச் சொன்னார். சொன்னபடி நடக்கவில்லை. தயானந்தர் தமது கருத்தை அச்சு மூலம் விளக்கி விட்டுப் புலவர்களைச் சபை கூட்டினார். பிரம்ம சமாஜிகள் கேசவ சந்திரர், சையத் அகமது, நவீன சந்திரராய் முதலிய பலர் வந்தனர். சுவாமிகள் இக்காலத்திற்கு வேண்டிய சீர்திருத்தங்களைக் குறித்து மூன்று மணி நேரம் பேசினார். வேதத்தைப் பொது வாக்கல், பிரமசரிய குருகுலம் காணல், கன்னியர் குருகுலத்தில் பெண் கல்வி தருதல், விநாத் தெரிந்து மணவினை நடத்தல், மாதர் மறுமணம், சாதி வேறுபாடுகளை ஒழித்தல், மூடப் பழக்கங்களை ஒழித்தல், கல்வியும் தொழில்களும் வேத ஞானமும் பரவச் செய்தல் முதலியவற்றை வற்புறுத்தினார். சிலர் வேதம் அருள்வாக்கு என்பதை நம்பவில்லை. எல்லாரும் தயானந்தரின் தூய, துணிந்த வாழ்வையும் அரிய தொண்டுகளையும் மெச்சினர்.

இச்சமயமே காசி லாZரஸ் அச்சகத்தில் பனமாலி பாபு பார்வையில், வேத பூமிகை வெளி வந்தது. ரூ. 4—8—0 ஆண்டுச் சந்தாவுக்கு வேதங்களைத் தொகுதி தொகுதியாக வெளியிடவும் தயானந்தர் கருதினார். இவ்வாறு தமது கொள்கைகளைப் பலர் உள்ளத்தில் விதைத்த பிறகு, தயானந்தர் மீரட்டிற்குச் சென்றார். அங்கே ஒரு புலவர் விவாதத்திற்கு வந்தார். "வாரும் பண்டிட்ஜீ என்ன விஷயம்?'' என்னும்போதே, பண்டிட்ஜி இவருடன் நாம் வாதமிட முடியாது என்று திரும்பிச் சென்றார். அங்கிருந்து ஷஹரான்பூருக்கு வந்து, சிவன் கோயிலில் தங்கி வேதப் பிரசாரம் நடத்தினார். சில அன்பர், கேள்விகளுக்கு சுவாமிகள் கணீரென்று பதிற் சொன்னார். "கடவுள் ஒன்றே; அதையே தியான ஸ்தோத்திர ஜபதப சந்தி ஹோமங்களால் உணரலாம். ஆண்கள் 24, பெண்கள் 16 - வயதிற்கு மேலேயே விவாகம் நடத்தி, இல்லறத்திற் புக வேண்டும். சாதி வேறுபாடொழிந்து, சமரஸம் பரவ வேண்டும்'' என்று விரிவாகப் பேசினார். பெண்கள் கோஷா முறையை ஒழித்து, நல்ல கல்வி பயில வற்புறுத்

தினர். ஆரியர் என்பவர் நேயர், சீரியர், வேத உண்மையை அனுஷ்டிக்கும் தர்மவீரர்கள் என்பதை விளக்கினர். சுவாமிகள் தினம் நான்கு மணி நேரம் பிரசங்கம் செய்தார். பெருவாரியான ஜனங்கள் கூடிக் கேட்டுப் பயன் பெற்றனர். எதிர்ப்புக் கூட்டம் தோல்வி யடைந்து, வாய்மூடிப் போனது.

## 84. சந்தாபூர் சபை

சந்தாபூர் ஜமீந்தார் சகோதரர்கள், பியாரி லாலும் முக்தப் பிரசாதும், கபீர்-பக்தர்கள்; இருவருக்கும் மத பேதம் வந்து ஒரு சபை கூட்டினர். அதற்கு எல்லாச் சமயப் புலவர்களையும் வரவழைத்தனர். தயானந்தரும் வேத தர்மத்தை நிலை நாட்ட வந்தார். மௌல்வி முகம்மது காசிம் இஸ்லாமிற்கும், ரெவரண்டு ஸ்காட் நோபிலி, பார்கர் தாம்ஸன் முதலியோர் பைபிள் - விரி உரைக்கும் வந்தனர். முன்ஷி பியாரி லாலும், லேகராஜூம், "ஆத்மாவே கபீர் ; அதுவே கடவுள்; கபீரின் விவேக சாரமே அருள் வேதம்" என்றனர். ஐந்து கிறிஸ்துவரும், ஐந்து முஸல்மான்களும் தத்தம் மத உண்மைகளைச் சொல்லித் தமதே பெரிதெனப் பேசினர்.

கடவுள் உலகை ஏன், எதனுல் படைத்தார்? கடவுள் எங்கும் இருக்கிறாரா? எப்படி?...கடவுள் எப்படி நியாயவானாகவும், கருணையுள்ளவராகவும் இருக்கக் கூடும்? வேதமும், பைபிளும், குரானும் அருள் நூல்கள் என்பதேன்? முக்தி யாது? எப்படி யடைவது? இவையே விவாதக் கேள்விகள்.

முகம்மது காசீம்: கடவுள் தன்னிடமிருந்தே, தன்னைவண்ணங்கவே மனிதரைப் படைத்தார். எல்லாம் ஆண்டவன் சிருஷ்டியே; அவர் எப்படி எதனுல் உலகை ஆக்கினர் என்று சொல்ல முடியாது. ஆண்டவன் இச்சை அப்படி. தன் அருள் ஒளியிலிருந்தே அல்லா உலகை ஆக்கினர். கடவுள் தம் விருப்பப்படியே மோட்சமும், நரகமும் தருகிறார். பிடிக்காதவரைத் தண்டிக்கிறார். அவர் நமக்குஅடங்கினவ ரன்று. அவரது நபிமணி சொன்னபடி நடப்பதுதான் நமது கடமை.

பாதிரி ஸ்காட்:—கடவுளே உலகை ஆக்கினர். எப்போதோ எதிலிருந்தோ தெரியாது. உலகம் நித்தியமே. ஆதாமின் பாபம் மனித சமுதாயத்தைப் பிடித்தலைக்கிறது. சைத்தான் உலகில் தொல்லை செய்கிறான். அவனைத் தப்பிப் பாபத்திலிருந்து விடுபடுவது தான் மோட்சம். கடிகாரம் தானே வேலை செய்வது போல், மனிதனும் தானே பாபம் செய்கிறான். கிருஸ்துவை நம்பினலே

## சாந்த்பூர் சாஸ்திரார்த்தம்



பலவுலகும் ஒப்பவே பாரதவே தத்தைப்
புலவன் புகலும் பொலிவு

உய்வு; அறிவால் அன்புப்பணி செய்யலாம். ஆனால் மோட்சம் கிருஸ்து கையில் உள்ளது.

*சுவாமிகள் வேதக் கோட்பாடுகளுடன் பேசியதன் சுருக்கம்:-*

உண்மை விளக்கம்: இதுவே இந்தச் சபையின் உத்தேசம். வேதமே உண்மை வாக்கு. அருள் வாக்கு—பொது வாக்கு. கடவுள் பிரகிருதியிலிருந்து உலகை ஆக்கினார். பிரகிருதி அணுக்கள் நித்தியமானவை. உலகிற்கு கற்பமும், பிரளயமும், ஆக்கமும், நீக்கமும் உண்டு; என்றாலும் உலகத்தத்துவம் நிலையானது. இருப்பது என்றும் இருக்கும்; இல்லாதது என்றும் இல்லாதது மண்ணுலகம் மாறி மாறி மன்னும் உலகமே. கடவுள் உலகின் நிமித்த காரணம். இயற்கை உபாதான காரணம். ஆன்மாவும் நித்தியமே. ஆன்மாக்கள் தனுகரண புவனபோகங்களால் மாசற்று முத்திபெறச் சாதகமாகவே உலகை இறைவன் ஆக்கி அழித்து அருளிச் செய்கிறான். உலகம் பலகோடி காலமாயிருக்கிறது—பலகோடி காலம் இருக்கும்.

கடவுள் எல்லாம் வல்லவரானால் சாத்தான், பூச்சாண்டி எப்படி வரும்? சாத்தானை நம்பாதீர்கள். நீங்கள் பாபிகளில்லை. சாத்தான் பாவத்தைத் தூண்டுகிறான். என்மேல் குற்றமில்லை என்ற சால்ஜாப்பு ஒழிக. மக்கள் பாபத்திற்காக ஏசுநாதர் சிலுவை ஏறி விட்டார்; இனி நாம் ஹாயாயிருப்போம். எந்தப் பாவம் வேண்டுமானாலும் செய்யலாம் என்று மனிதர் நெஞ்சுரம் கொள்வார்கள். கடவுள் ஒன்று, நிர்க்குணம் நித்திய சுத்தானந்தம்; அதை உட்குவிந்த தியானிகளே உணர்வார்கள். அந்த உணர்வாயிருப்பதே இன்பம்.

வேத தர்மம் தூய பொது நெறி. அதன் மேல் படர்ந்த சமுதாய ஊழல்—காளான்களை எடுத்தெறிந்து, உண்மையை அனுஷ்டிக்க வேண்டும். கொடிய மடமை, உண்மையை மறைத்துக் கொண்டிருக்கிறது. உதாரணமாக நான் ஒரு சமயம் சாக்தர்களிடம் அகப்பட்டுக் கொண்டேன். அவர்கள் என்னை மிகப் பிரியமாகவே நடத்தினார்கள். ஒரு நாள் அவர்கள் என்னைக் காளி கோயிலுக்கு அழைத்துச் சென்றார்கள். அங்கு அவர்கள் ஊன் மதுவுண்டு ஆபாசமாக நடந்தனர். ஒரு சாக்தன் வாளை உயர்த்தினான். என்னைக் காளிக்குப் பலிதரக் குனிந்து வணங்கச் சொன்னான். நான் உரு வணக்கத்தை நம்பமாட்டேன். காளி கறுப்பனெல்லாம் பொய் என்றேன். என்னை அவன் வெட்டப்

பார்த்தான். சட்டென்று அவனை ஒரு அறை கொடுத்து வாளைப் பிடுங்கியெறிந்து, நான் சுவரேறிக் குதித்துத் தப்பினேன். இப்படிப்பட்ட முழு மூர்க்க சம்பிரதாயங்கள் பிற்காலம் எழுந்து, வேத தர்மத்தைக் கெடுத்தன. இவற்றை யெல்லாம் ஒழித்து, அசல் வேதத்தை அனுஷ்டித்தால் உலகெல்லாம் ஒரு குலமாக வாழ்ந்து இன்புறலாம்.

சுவாமிகளின் பக்கமே வென்றது. மௌல்விகள் சென்றனர். பாதிரி ஸ்காட் தயானந்தருடன் அளவளாவி மகிழ்ந்தார். இவ்வாறு நாடெங்கும் திக்விஜயம் செய்து, தயானந்தர் பஞ்சாபுக்குச் சென்றார்.

## 85. பஞ்சாபில் ஆரிய சமாஜம்

சுவாமிகள் வேத விளக்கத்துடன் நிற்கவில்லை. பிற மதம் புகுந்தவர்களை ஆரிய சமாஜத்தில் கொண்டு வந்து சேர்த்தார். லூடியானாவில் அவர் ஒரு பிரசங்கம் செய்து, எட்டாம் நாள் கேள்விக்குப் பதில் அளித்தார். பாதிரி வேர்ரி, ஸ்டிபன்ஸ் முதலியோரர் வந்து கேட்டனர். கிருஷ்ணன், கோபிகா லீலை பண்ணினவன், எப்படி வணங்கத்தக்கவனாவான் ?'' என்று கேட்டார் ஸ்டீபன்ஸ். "ஐயா, பாகவதத்தில் உள்ள பால லீலையும், ராஸ லீலையும் கட்டுக் கதைகள். மஹா பாரதத்தில் வருவதே உண்மையான கண்ணன் கதை. அவ்வளவு சிறுவன் அப்படியெல்லாம் செய்திருப்பானா? கடவுள் அருள்புருவாகி ஏசுநாதருள் இறங்கியது என்ற கதைபோல், எத்தனையோ கட்டுக் கதைகள் உண்டு! வேத உண்மையே உண்மை'' என்றார் தயானந்தர். இதைக் கேட்ட இராம கிருஷ்ணன் என்ற ஒரு வாலிபன் வந்து தயானந்தரை வணங்கி, "சுவாமி! என் கண் திறந்தது. நான் இன்று ஞானஸ்நானம் பெற்று, கிறிஸ்துவனாக இருந்தேன்' தங்கள் சொல் என்னைத் திருப்பியது'' என்று ஆரிய சமாஜத்தில் சேர்ந்தான். இவ்வாறே அன்னிய மத மோகங்கொண்ட பலரை சுவாமிகள் வேத தர்மத்திற்கு மாற்றினார்.

வேத நெறியைப் பண்டின பாமரர்களெல்லாம், உலகமெல்லாம், அறியும்படித் தெருவெல்லாம் இடி முழக்கம் செய்தார். தயானந்தரின் வேத முகவுரையை ஸ்டீபன்ஸ் படித்து மகிழ்ந்து, வேத பாஷ்யத்திற்குச் சந்தா சேர்த்து, நன்கொடையும் அளித்தார். வெள்ளைக்காரன் இப்படி இப் பெரியாரை மதிக்கையில், வைதீகப் பிராமணர் தூற்றினர். ஒருவன்,

" உரு வணக்கத்தை இகழும் இவன் முகத்தில் விழிக்காதீர்கள் " என்றான். " ஐயா, என் முகம் பிடிக்கா விட்டால், என் பின்னல் வந்து நின்றுவது நான் சொல்வதைக் கேளும் " என்றார் மகான்.

லாகூரில் முன்ஷி மான்ஃபல் தயானந்தரை உபசரித்தார். பிரம்ம சமாஜிகளும் சந்தா சேர்த்து உபசரித்தனர், ஆனல் சுவாமிகளை பிரம்ம சமாஜத்தில் சேரச் சொன்னார்கள், சேர வில்லே. அதற்கு மாறாக பிரம்ம சமாஜிகளின் ஆங்கில மோகத்தையும்; பைபிள் மோகத்தையும் எடுத்துக் காட்டினர். அவர்களுக்கு உடனே முன் கோபம் வந்துவிட்டது. சட்டென்று உதறித் தள்ளி " இவர் என்ன, சும்மா வேதம் போதம் என்று கூச்சலிடுகிருர், இவரிடம் புதுமை யில்லை" என்று தூற்றத் தொடங்கினர்கள். அவருக்காகச் செலவிட்ட இருபத்தைந்து ரூபாயையும் திருப்பி வாங்கி விட்டார்கள்.

*25—4—1877* ; லாகூரில் வேத கர்ஜனையைத் தொடங்கினர் தயானந்தர். ஹவன், சந்தி ஜபம் முதலிய அனுஷ்டானங்களை விளக்கினர். புராணப் பொய்களையும், அவதாரப் புரட்டுகளையும் கண்டித்து, எல்லாரும் எளிதாகப் பின்பற்றிப் பகுத்தறிவுடன் சுகாதாரமாக வாழும்,வேத நெறி தழைத் தோங்கத் தொண்டு பரவினர். சமூகத்தில் படர்ந்த தீண்டாமை, பாராமை, குழந்தை மணம், விதவைக் கண்ணீர் இவற்றைத் துடைத்து, எல்லாரும் இன்புற வழி காட்டிச் சீர்திருத்தம் செய்தார். எதிர்ப்பும் பலமானது. பண்டிதர்கள் எதிர்க் கூச்சலிட்டனர். சுவாமிகளுக்கு இடம் கொடுத்த பகவன்தாஸிடம் கோளேற்றினர். பகவன் தாஸ் கோழையானன். தன் தோட்டத்தைவிட்டு தயானந்தரை வெளியேற்றினன். டாக்டர் ரஹீம்கான் சுவாமிகளைத் தனது மாளிகையில் வரவேற்று உபசரித்தான். சுவாமிகளை முதலில் ஆதரித்த மான்ஃபல் " ஐயா, உரு வணக்கத்தைத் திட்டாதிருந்தால் இந்துக்களும், காஷ்மீர் ராஜாவும் தங்களைக் கொண்டாடுவார்கள் " என்றார். " ஐயா, உண்மையை உண்மை யென்று சொல்லி, அதற்காக சர்வத் தியாகம் செய்வதே என் கொண்டாட்டம் " என்றார் வீர ஞானி.

டாக்டர் ஹூபர் " எல்லாம் சரி ; பிராமணர் அசுவமேதம் கோமேதம் என்று சொல்லி மாமிசம் சாப்பிடுகிறார்களே; நாங்களும் ஊன் சாப்பிடுகிறோம் ; இந்த யாகங்கள் எதற்கு ?" என்று கேட்டார். சுவாமிகள் , " யாகம் என்றால் ஆடு, மாடு, குதிரைக் கொலையில்லை. வேத வாக்கைச் சிலர் தப்பாகக்

கொண்டு ஊரை ஏமாற்றினர். அசுவம் என்பதற்கு ஜனங்கள் என்றும் பெயர். அரசன் ஜனங்களின் நன்மைக்காகத் தியாக புத்தியுடன் நீதி செலுத்தலே அசுவமேதம். கோமேதம் என்றால் காமக் குரோதாதி அழுக்குகள் இல்லாமல், அந்தரங்க சுத்தி பெறும் சாதனங்களைச் செய்தலேயாகும்" என்று விளக்கினர். பிறகு சாதியைப் பற்றிக் கேள்வி பிறந்தது. "நல்லவர் அந்தணரா?" என்று கேட்டார் ஹ்யூபர். "ஆம்—மாசற்ற அறவோரே அந்தணர்: அதர்மிகளே கீழோர். குணம் கர்மம் இரண்டும் பார்த்தே ஒருவன் சிறப்பை உணர வேண்டும்; இதுதான் வேத சம்மதம்" என்றார்.

லாகூரில் ஆரிய சமாஜம் பலமாக ஊன்றிக் கொண்டது. சில ஐரோப்பியரும் அதைப் போற்றினர். வேத பாஷ்யம் வெளியிட சுவாமிகள் சர்க்கார் உதவியை நாடி, பஞ்சாப் உப கவர்னரின் காரியதரிசி ஜே. கிரிபித்தைப் பார்த்தார். பிறகு கவர்னரையே பார்த்தார். தயானந்தரின் விரிவுரையை வாங்கி சர்க்கார் வெள்ளையர் காசி சமுஸ்கிரதக் கல்லூரித் தலைவர் ஆர். கிரிபித்திற்கு அனுப்பினார். அதை மூன்று பழம்பசலிப் பண்டிதர்களுடன் சோதித்தனர், "சாயன மகீதர பாஷ்யங்களுக்கு ஒத்து வரவில்லை. இந்த விரிவுரை சரியில்லை" என்று தள்ளிவிட்டனர். இதுவே சரி என்று ஆரிய சமாஜிகளும், தயானந்தரும் விளக்கினர். பயனில்லை! பண்டிதரும், கிரிபித்தும் சொன்னதையே கவர்னரும் சொல்லி, "உமது வேத பாஷ்யத்தை ஒப்புக்கொள்ள முடியாது" என்று தள்ளிவிட்டார் கவர்னர். ஆனால் தயானந்தரின் வேத முழக்கம் ஜனங்களின் இதயத்தில் துடிக்கத் தொடங்கியது தயானந்தப் பிரகாசம் என்ற பத்திரிகை, காட்டுப் புலியையும், வஞ்சர் தீயையும், நஞ்சையும், புல்லர் வசவையும் எதிர்த்து வென்ற சுவாமிகளை அதிகாரிகள் செய்த ஏமாற்றம் வருத்தவில்லை. சுவாமிகள் சொல்லமுதை அள்ளிப் பருகிய ஜனங்கள் விக்கிரகங்களைக் கடைத் தெருவிலும், ரவீ நதியிலும் தூக்கித் தூக்கி யெறிந்து வேதத்தைப் போற்றினர். 24—6—1877ல் தொடங்கிய லாகூர் ஆரிய சமாஜம், தயானந்தரின் இருதய பீடமாக விளங்கியது. பஞ்சாபிலே தான் ஆரிய சமாஜிகளின் கொள்கைகள் நன்கு வகுக்கப் பெற்றன.

"கடவுளே உண்மை; கடவுளே அறிவொளி,
இன்பம், கருணை, அன்பருள், அமைதி.

எங்கும் நிறைவாம் இறைவன் ஒருவனே
அவன் வழி காட்டும் அறநூல் வேதமே.
வேதமே மெய் நெறி ஓதியுணர்கவே !
அறவினை போற்றி மறவினை தவிர்கவே !
எல்லாவுயிர்க்கும் நல்லதே செய்கவே !
கல்வியும் அறிவும் பல்குக உலகில்
சுயநல மின்றிப் பொது நலம் பொலிக
ஒற்றுமை யோங்கி உலகெலாம் வாழ்கவே !"

இவையே சமாஜக் கொள்கைகள்.

ஆரிய சமாஜம் அனார்கலித் தெருவில், இருபது ரூபா வாடகை வீட்டில் தொடங்கியது. முன்னூறு அங்கத்தினர் சேர்ந்தனர். எல்லாரும் சுவாமிகளே தலைவரா யிருக்க வேண்டினர். "நான் தலைவன், குரு என்று, குரு பீடம் அமைக்க மாட்டேன். சாதாரண அங்கமே வகிப்பேன். நான் பொது நல ஊழியன்; கடவுளையே தலைவராகக் கொண்டு உங்கள் அன்பினால் சமாஜம் நடக்கட்டும்" என்றார் தயாநிதி. அவரை பரமஸஹாயக் என்று அழைத்தனர். அந்தப் பதவிக்கூட வேண்டாம். இறைவனே பெருந் துணைவன் என்றார் பெரியார்.

ஒரு நாள் உபாசனை நடந்த போது சுவாமிகள் வந்தார். எல்லாரும் எழுந்து நின்றனர். "இந்த மாதிரி வெளி மரியாதை எனக்குத் தேவையில்லை. பிரார்த்தனை செய்யும் போது அதே கவனமாயிருங்கள்; இறைவனை உள்ளத்தில் உணருங்கள், அச்சமயம் யார் வந்தாலும் எழுந்திருக்க வேண்டாம்" என்றார் பணிவே அணியான வள்ளல். லாகூரில் தயானந்த வேத பாடசாலையும் நல்ல முறையில் நடந்தது. வைதிகரும் புரோகிதரும் வழக்கம் போலக் கூச்சலிட்டும், ஆரியசமாஜம் வீறு பெற்று முன்னேறியது. கோஹினூர், பிரம்மசமாசார், பிரதார் இ-ஹிந்த் முதலிய பத்திரிகைகளெல்லாம் "தயானந்தரால் பஞ்சாபில் புத்துயிரும் புதிய ஒளியும் வீசுகிறது; எதிர்ப்புகள் மறைந்து ஆரிய வேதம் கர்ஜிக்கிறது. சங்கரர், நானகர் போன்ற மஹான்களுக்குப் பிறகு தயானந்தர் ஒருவரே இவ்வளவு தைரியமாகத் தார்மீக சேவை செய்பவர்" என்று புகழ்ந்தன.

## 86. ஹிந்து தருமம் உறுதியே

12-8-1877-ல், சுவாமிகள் அமிர்தசரஸில் ஆரியசமாஜம் நிலைநாட்டி வீரவேசமாய்ப் பேசினார். ஏராளமான பேர் பிரசங்கம்

கேட்டு வேத நெறியை மேற்கொண்டனர். சுவாமிகள் தெருவிற் சென்ற போது ஊரார் ஜெயகோஷம் செய்தனர். துளஸிராம் என்னும் பக்தன் சுவாமிகளைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்று, கற்கண்டும் இரண்டு ரூபாயும் தந்தான். அதையும் மகிழ்ச்சியுடன் வாங்கிக் கொண்டார். அன்பினால், பொது மக்களின் அன்புக்குரிய பெரியவரை யாரும் வாது செய்ய வில்லை.

அமிர்த்தசரஸ் கமிஷனர் பெர்கின்ஸ் சுவாமிகளிடம் ஹிந்து தர்மத்தைக் குறித்துப் பேசினார். "ஹிந்து தருமம் வர வர க்ஷீணித்து மெலிந்து நலிந்து தளர்கிறதே? அதை இனி எப்படிப் பரவச் செய்வீர்?" என்று கேட்டார். தயானந்தர் அழுத்தந் திருத்தமாகப் பேசினார்.

"ஹிந்து தர்மமா? தளர்வா? இல்லவே யில்லை. இந்து தருமம் உருக்கைப் போல் உறுதியா யிருக்கிறது. அது பலவகை அன்பரைக் கொண்டு வளர்ந்து வருகிறது. சிலர் ஒரே கடவுளை தியானத்தால் வணங்குவர்; சிலர் கடவுளைப் பல பாவனையில் பக்தி செய்கிறார்கள். சிலர் தியாகிகள்; சிலர் போகிகள்—இப்படிப் பல்வகை மாந்தர் கூட்டமே ஹிந்து சமுதாயம். தர்மம் என்றும் உறுதியாகத்தான் உள்ளது. மனிதரும் உறுதியாவார். நான் எல்லாரும் வேத நெறியில் வாழ வேண்டுகிறேன். ஒரே கடவுளை, ஒரே நிர்குண பரமாத்மனை வணங்கி, தீமை விலக்கி நல்ல சன்மார்க்கிகளாக எல்லாரும் வாழச் செய்வதே எனது கொள்கை." பெர்க்கின்ஸ் மிக்க மகிழ்ச்சியுடன் "உங்கள் தர்மாவேசம் வெல்க" என்றார்.

## 87. கல்லுக்கு லட்டு

வைதிகர் பலர் கட்சி கட்டி வாதாட முயன்றனர். ஆனால் ஊரெல்லாம் தயானந்தரிடம் ஓடி வந்தது; பலர் ஆரிய சமாஜத்தைச் சேர்ந்தனர். ஆதலால் எதிரிகள் வாயடைத்துப் போனார்கள். ஒரு நாள் பிரசங்கத்திடையே சில மாணவர் கல்லெறிந்து அகப்பட்டுக் கொண்டனர். தயானந்தர் "சிறுவர்காள் ஏனிப்படிச் செய்தீர்கள்?" என்று அமைதியாகக் கேட்டார். "எங்கள் ஆசிரியரே மடி நிரம்பக் கல்லும் செங்கல்லும் கொண்டு சென்று தயானந்தர் கூட்டத்தில் வீசுங்கள் உங்களுக்கு லட்டு தருகிறேன் என்றார்" என்று பிள்ளைகள் அழுதார்கள். தயானந்தர் உடனே லட்டு வரவழைத்து எல்லாருக்கும் தந்து "பிள்ளைகாள்! இனி யாருக்கும் தீமை செய்யக் கூடாது.

ஒருவர் ஒன்றைச் செய்ய சொன்னால், நன்மையானால் செய்யலாம்; தீங்கானால் மறுக்க வேண்டும். நீங்களெல்லாம் காயத்ரீ ஜெபம் செய்ய வேண்டும். ஒழுங்காகப் படித்து பெரிய வித்வான்களாக வேண்டும்" என்றார். சிறுவர் வணங்கிச் சென்றனர். ஒரு ஏழை வந்து "சுவாமீ எனக்கும் முக்தி யுண்டா?" என்று கேட்டான். "ஐயா, உண்டு; நீயும் சத்தியசன்மார்க்கியானால், முக்தியுண்டு" என்றார். ஒரு நாள் வேதபாஷ்யம் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுது "எல்லாரும் வெளியேறுவோம், உடனே" என்று வெளியே வந்தார். உடனே அந்தக் கட்டிடக் கூரை இடிந்து விழுந்தது. வரு முன்னர் பாதுகாக்கும் கவனிப்பும் சுவாமிகளிடம் இருந்தது. அமிர்தசரசில் வெற்றி பெற்ற தயானந்தர் காசிப்பூர் சென்றார்.

## 88. பனியாவின் புரட்டு

காசிபூரில் உற்சாகமான வரவேற்பும் உருக்கமான சொற்பொழிவும் நடந்தன. ஆரியர், ஆரியாவர்த்தம், கடவுள், வேத தர்மம், சடங்குகள், பசுக்காத்தல் முதலியற்றைப் பற்றி தயானந்தர் பேசினார். சில வைதிகர் "கணானாம் த்வா கணபதி:" என்ற வேதவாக்கு கணேச பூஜையைக் குறிப்பதாக வாதாடினர். சுவாமிஜீ மஹிதர பாஷ்யத்தைக் காட்டி, கணபதியின் மெய்ப் பொருளை விளக்கினார்.

ரெவர்ன்ட் போர்மான் ஒரு நாள் சுவாமிகளுடன் தனியே பேசிக் கொண்டிருந்தார். முன்ஷி கண்ணயலால் வந்து வேதபாஷ்ய அச்சிற்காக ரூ 200 நோட்டு நன்கொடையளித்துச் சென்றார். அந்த நோட்டு தரையில் கிடந்தது; அதை ஒரு பனியா கண்டு க்ப்பி கட்டி ஊரில் பரப்பினான். "இந்தத் தயானந்தர், குட்டு, வெளிப் பட்டது. ஒரு பாதிரி இன்று காலை இவருக்குப் பணந் தந்து வசப்படுத்தினான்; இவரும் கிருஸ்துவராய் விட்டார்." இந்த வதந்தியைக் கேட்ட மகான் பொறுமையின் புரட்டுகளைப் பாராட்டாமல் புன்னகைத்தார்.

## 89. பிரம்மசாரி பலம்

ஜலந்தரில் சுவாமிகள் முப்பத்தைந்து பிரசங்கங்கள் செய்தார். பிரம்மசாரியத்தைப் பற்றி அழுத்தமாகப் பேசினார். ஸர்தார் விக்கிரமசிங் வைப்பாட்டி வைத்திருந்தான். "மனைவி யிருக்கையில் விபசாரம் செய்பவன் அவிசாரி" என்று இழித்துச் சொன்னார். பிரம்மசரியமே பலம் என்றார். ஸர்தார், பிரமசரிய பலம் என்ன

பிரமாதம் என்று நினைத்தார். மாலையில் அவர் குதிசாரட்டில் ஏறி அமர்ந்தார். குதிரைகள் சவுக்கடித்தும் முன் செல்ல வில்லை; வண்டி நகர வில்லை; பின்னால் பார்த்தார். தயானந்தர் வண்டிச் சக்கரத்தைப் பிடித்து அழுத்தி நின்றார்.

"ஆ, சுவாமிகளா? வண்டியை ஏன் அழுத்திக் கொண்டிருக்கிறீர்கள்" என்று வியந்து வினவினர் ஸர்தார். "விக்கிரமசிங்" இது தான் பிரம்மசாரி பலம்; பிரம்மசாரியின் திண்மையைக் காட்டவே இப்படிச் செய்தேன். சரி இனி ஓட்டும் முன்னே" என்று சுவாமிகள் விலகி நின்றார். சாரட்டும் ஓடியது.

## 90. காணு ஆடை

சர்தார் கண்டபேர்களை நம்பி மோசம் போனர். சுவாமிகள் நகைச்சுவைக் கதைகளால் அவருக்கும் மற்றொருவருக்கும் அரிய அறிவைப் புகட்டினர்:—ஒரு டில்லி அரசன் தன்னை மிகவும் அறிவாளி, யாரும் தன்னை ஏமாற்ற முடியாது என்று நினைத்திருந்தான். எத்தன் ஒருவன் "மஹாராஜா நான் கண்ணுக்கே புலப்படாத ஆடை செய்து தருவேன், அதை அணிந்தால் தங்கள் அழகு ஜகஜ்ஜோதியாயிருக்கும்" என்றான். "சரி தயார் செய்" என்று ஐயாயிரம் முன்பணமும் தந்து, பிறகு ஐயாயிரம்தருவதாக வாக்களித்தார். எத்தன் வெகு சிரமப் பட்டு நெய்வதாகப் பாசாங்கு பண்ணி, ஒரு நாள் வெறுங் கையுடன் வந்து "மஹாராசா ஆடை கொண்டு வந்திருக்கிறேன்". என்றான். "எங்கே காணோம்." "அது கண்காணு ஆடை, தாங்கள் தனியே வாருங்கள் அணிவிக்கிறேன்" என்றான் எத்தன். இருவரும் தனியறைக்குச் சென்றனர். "மகாராசா! ஆடையாபரணங்கள் எல்லாம் கழற்றித் தாருங்கள்" என்றான்; மன்னன் தந்தான். "இதோ காணு ஆடை அணிவிக்கிறேன். இதோ அழகான காணு-பீதாம்பரம். இது அங்கி-இது அலங்கார அக்கவஸ்திரம். இதோ பட்டுக் குல்லா" என்று எல்லாம் அணிவித்து ஆ, இது தான் கட்டழகு கண்ணாடி மட்டும் பாரதேயும் என்று பாக்கி ஐயாயிரமும் அரசர் அணி மணிகளும் சுருட்டிக் கொண்டு மறைந்தான். அரசர் வெகு டம்பமாகப் புதிய ஆடையுடன் தர்பாருக்கு வந்தார். எல்லோரும் சிரித்தனர். ஒருவர் ஒரு கோவணம் தந்து "ராஜா இப்படி அம்மணமாக வரலாமா? இதையாவது கட்டி மானத்தை மறையுங்கள்" என்று தந்தான். அப்போதுதான் அரசனுக்கு, எத்தன் மோசடி தெரிந்தது.

## 91. இந்து மதம்

இந்து மதத்திற் புகுந்த கண்மூடித்தனங்களை யெல்லாம் தயானந்தர் பலமாகக் கண்டித்தார். "சிரார்த்தம் என்பது இறந்தவர் பெயரால் பிண்டம் வைப்பதில்லை; சிரத்தையுடன் வேத நெறி நின்று பொது நலம் புரிவதே. நெற்றிப் பொட்டும் தாவடமும் பயனில்லை; அன்பும் ஒப்புரவுமே ஆக்க மளிக்கும். கோயில் மணியால் சாமி வராது; உட்குவிந்த தியானத்தாலும் சுத்தசன் மார்க்க வாழ்வாலுமே கடவுள் அருள் வரும்" என்று உபதேசித்தார். இஸ்லாமியர் அவர் சொற்களை விரும்பிக் கேட்டனர். அஹமத் ஹுசேன் மௌல்வி சுவாமிகளுடன் அளவளாவி, இந்துமத உண்மைகளை அறிந்து மகிழ்ந்தார். சுவாமிகள் அவருக்கு ஜீவயாத்திரையைப் பற்றியும், மறு பிறவி பற்றியும் விளக்கினர்.

ஒரு பெரிய பிஷப் "எங்கள் பைபிளுக்கு சூரியாஸ்தமனமே கிடையாது; அதன் ஒளி உலகெல்லாம் பரவுகிறது. பல கடவுளைத் தொழும், பல சாதி இந்துவேதம் யாருக்கும் தெரியாதே" என்றார். சுவாமிகள் உண்மையான வேதப்பொருளை விளக்கி "ஐயா, எங்கள் வேதம் ஒரே கடவுளையே அருவாகவே தியானிக்கச் சொல்லுகிறது. சுதந்தரமான சத்திய வாழ்வையே புகட்டுகிறது. வெள்ளைக்காரர் ஒற்றுமை, தேசாபிமானம், பாஷாபிமானம், உத்யமம், தைரியம், முன்னேற்ற வீறுகளால், பைபிளை உலகநூலாக்கி, அதன் பெயரால் அரிய தொண்டுகளைச் செய்கிறார்கள். இந்துக்கள் வேதத்தை மூலையிற் போட்டுப் புராணக் குப்பைகளையும், மூடக் கொள்கைகளையும் பற்றி, உறங்குகிறார்கள். இனி விழித்தெழுந்து வேதநெறி போற்றி உலகிசை பெறுவார்கள்" என்றார். தயானந்தர். பிரமசரியம், ஏக பத்தினி விரதம், கலை வளர்ச்சி, கல்விப் பெருக்கம், உலக யாத்திரை முதலியவற்றால், இந்து தருமம் விசாலமாக வளரும் என்பதை சுவாமிகள் வற்புறுத்தினர்.

ஃபெரோஸ்பூரில் சுவாமிகள் எட்டுப் பிரசங்கங்கள் செய்தார் (21—10—1877). பலர் குறும்புக்குக் கேள்விகள் கேட்டனர். "கடவுள் எங்கும் இருக்கிறார் என்கிறீர்; இதோ என் கடிகாரத்தில் கடவுளை காட்டும்" என்றார் கிருபாராம். "ஐயா, இந்தத் தடி என் பிடியிலிருக்கிறது. அதுபோல் எல்லா இடமும் கடவுள் நிறைவா யிருக்கிறது" என்றார். "உமக்கொன்றும் தெரியாது உளறுகிறீர்" என்று, அந்த ஆள் சபையை விட்டோ

டினார். பிறகு "சுவாமிகள் சொல்வதே உண்மை" என்று ஆரிய சமாஜியானார். ஒரு பூசாரி உரு வணக்கமே வணக்கம் என்று வாதாடினான். தயானந்தர் "ஏ! பூசாரியே, உன் பெயருக்குப் பொருள் சொல்" என்றார். ஆள் திகைத்தான். பூஜை+அரி=பூஜாரி=பூஜைக்குச் சத்துரு. உண்மையான அந்தர் தியான பூஜையே பூஜை. அதைவிட்டு கல்லை நட்டு, மணியடித்தால் என்ன பலன்? பொய் விலக்கி மெய் துலக்குவதே வழிபாடு!" என்றார் தயானந்தர்.

ராவல்பிண்டியில் ஆரிய சமாஜம் எழுந்தது. சுவாமிகள் ஜாம் ஷேட்ஜீ மாளிகையில் தங்கி, வேதமொழியும் விரிவுரையும் நடத்தினார். அவரிடம் மூன்று பண்டிதர்களும், கடிதப் போக்கு வரத்திற்கு ஆங்கிலப் புலவர் ஒருவரும் இருந்தார்கள். ஒருநாள் "உரு வணக்கத்தை மறுத்தால்வெளியேறும்" என்றார் ஜாம்ஷேட். "இதோ" என்று தயானந்தர் வெளியேறி சர்தார் சஜ்ஜன் சிங் மாளிகையில் சென்று வசித்தார். சாமி சம்பத்கிரி என்பவர், "இதம் மே கங்கே, யமுனே, ஸரஸ்வதி ஆதி" என்ற மந்திரம் புண்ணிய நதிகளைப் போற்றுகிறது; நீர் மூர்த்தி, தல, தீர்த்தங்களை மறுக்கிறீர்களே" என்றார். "ஐயா, வேதத்தில் வரும் கங்கை, யமுனை போன்றவை வெறும் ஆறுகளன்று, யோக நாடிகளே" என்று விளக்கினார். உள்ளூர் பள்ளியில் அரிய சொற் பொழிந்து, ஆரிய சமாஜத்தை நன்கு நிலை நாட்டி, சுவாமிகள் குஜராத்திற்குச் சென்றார். எங்கே சென்றாலும் வேத தர்மத்தை விளக்கி, பிற மதம் புகுந்த நம்மவரை வேத நெறிக்குத் திருப்ப தயானந்தர் கருத்துடன் வேலை செய்தார்.

குஜராத்தில் சுவாமிஜி பிரமசரியப் பிரசாரம் செய்தார். காயத்திரி மந்திர மகிமையை விளக்கினர். அதைக் கேட்டு மௌல்வி முகம்மதுடீன், "சுவாமிகளின் காயத்திரி விளக்கம் என் உள்ளத்தை தொட்டது, இன்று முதல் கலிமாவுக்குப் பதில், நான் காயத்திரியே ஜபிப்பேன்" என்றார்.

## 92. வெட்கம்! வெட்கம்!!

"இவர் என்ன சாமி, துருக்கர் முன்னும், இதரர் முன்னும், வேத மந்திரங்களையும், காயத்திரியையும் விளக்குகிறார். இவரை அடக்க வேண்டும்" என்று சில பிராமணர்கள் கிளம்பி, ஒரு காஷ்மீர் வித்வானைக்கொண்டு வாதாட்டினர். வித்வான் வேதம் என்று, புராணங்களைப் பொழிந்தார். "இந்த வாக்கை வேதத்தில்

காட்டும்; கொண்டாரும் வேதம்" என்றார் தயானந்தர். ஊரெல்லாம் அலசியும், வேதம் ஒரு ஏடு கூடக் கிடைக்கவில்லை. "வெட்கம்! வெட்கம்!! கிறிஸ்துவின் பைபிள் மூலை முடுக்குகளிலெல்லாம் உலாவுகிறது. இந்து வேதம் காண்பதே அரிதா யிருக்கிறது. இது ஒரு வகுப்பார் சுய நலத்துடன் வேதத்தை மூடு மந்திரமாக்கிய பலன்" என்று வருந்திப் பிறகு, தமது வேதப் பிரதியைக் கொண்டு உண்மை விளக்கம் செய்தார் தயானந்தர். தயானந்தரை வெல்ல முடியவில்லை. கொல்லத் துணிந்தனர் பகைவர்.

## 93. இந்தத் தடி

பகைவர் கூடி ஒரு படு போக்கிரியை ஏவினர். அவன், "சாமியாரே! உம் கழுத்தை அறுப்பேன்; அல்லது மூக்கறுத்து விரட்டுவேன், கவனம்" என்று சொல்லித் திரிந்தான். அன்பர் சுவாமிகளை வெளியே போக வேண்டாம் என்று தடுத்தனர். சுவாமிகள் தமது தடியைத் தூக்கிப் பிடித்து, "அச்சமில்லை; இந்தத் தடி போதும்; நானே பத்துப் பேருக்கு ஜவாப் சொல்வேன்" என்றார். பிரசங்கத்தின்போது மலைப் பிஞ்சுகள் விழும். தெருவில் வரும்போதும் கற்கள் விழும். சுவாமிகள் அஞ்சா அமைதியுடனே தமது வேதப் பிரசாரத்தைச் செய்து, வெற்றிமேல் வெற்றி பெற்றார். ஒரு கல்லெறி காலியைப் போலீஸார் பிடித்து வந்தனர். சுவாமிகள் அவனை மன்னித்தனுப்பி, "காலமறியாமல், வாழும் வகையறியாமல், கண்மூடித்தனமாக நடக்கும் இவர்களைக் கண்டு இரங்குகிறேன்" என்றார்.

சில மாணவர்கள் வந்து "நாங்கள் சிஷ்யர், நீங்கள் குரு, உபதேசம் செய்யுங்கள்" என்றார்கள். "பிள்ளைகளா, நான் குரு சிஷ்ய பாவனையை, ஆண்டான் அடிமைத்திரத்தை ஒப்புவதில்லை. என்மேல் உங்களுக்கு அன்பிருக்குமானால், கல்வி வளருங்கள், பிரமசரியத்தைக் காத்து வாருங்கள்" என்றார். ஒரு பெண்மணி, "சுவாமி! முக்தி" என்றாள். "அம்மா, வேதம் படி; வேத வழி நட, சித்தசுத்தி பெறு" என்றார் தயானந்தர்.

## 94. கும்பல் கலைந்தது

வாஜிரிபாதில் வழக்கம் போலப் பிரசங்கம் நடந்தது. பகைவர் பெருந்திரளாகக் கூடினர், கொக்கரித்தனர், வசை மாரி பொழிந்தனர். 'வேதத்தில் சாளக்ராம பூஜை இருக்கிறது' என்று

புராணம் ஒப்பித்தனர். சில பண்டிதர் தமது வாய்ச் சரக்கை வேத வாக்கென்று சொல்லிச் சிக்கிக்கொண்டனர். பொருமைப் புலவர் சுவாமிகளைத் தீர்த்துக் கட்டுவதென்றே வந்தனர். சிறு பையன்கள் காலிக் கூப்பாடு போட்டனர். இச் சமயம் போலீசும் வரவில்லை. ஆரிய சமாஜிகள், சுவாமிகளை வேறு வழியாக வீட்டிற்கு அழைத்துச் சென்றனர். சுவாமிகள் தம் அறையில் புகுந்ததும், அன்பர் கதவை அடைத்துத் தாழிட்டனர். காலிகள் கல்லெறிந்து கதவை உடைத்தனர். வேதச் சிங்கம் அஞ்சவில்லை. கதவைப் பட்டென்று திறந்து, ஹூங்காரத்துடன் தமது தடியைச் சுழற்றி, மற்றொரு ஹூங்காரம் செய்தார். காலிக் கூட்டம் கலைந்தோடியது.

## 95. சர்சில் வாதம்

சுவாமிகள், மதம் மாறினவர்களை, வேத நெறிக்குத் திருப்பினர். கிறிஸ்துவப் பாதிரிகள் சினங்கொண்டு எழுந்து, ஒரு பண்டிதரை விட்டு வாதாட்ட முயன்றனர். பண்டிதர், " அவரும் இந்து, நானும் இந்து, எங்கள் வீட்டு விவகாரத்தில் தலையிடாதீர்கள் " என்றார். பாதிரிமார் தாங்களே வாதாடத் தொடங்கினர். சர்ச்சில் வாதம் நடந்தது; ஏராளமான கூட்டம்; கட்டணச் சீட்டு வைத்து ஆட்களை உள்ளே விட்டனர். நல்ல வசூல். தினம் மாலை நான்கு மணி முதல் தயானந்தர் பேசினார். பாதிரிகள் கேள்விகளுக்குப் பதில் சொன்னார் ஆங்கிலப் பாதிரிகளும், சுதேசிப் பாதிரிகளும் விவாதத்திற் கலந்து கொண்டனர். துணைக் கமிஷனர் கோபால்தாஸ் மத்யஸ்தம் வகித்தார். 19—2—1878 மாலை 4-மணிக்கு, விவாதம் தொடங்கியது. " ஆன்மாவும் கடவுளைப் போல நித்தியமா ?" என்பது கேள்வி. சுவாமிகள் "இரண்டும் நிலை பொருள்களே ; ஆனால் கடவுள் ஒப்புயர்வற்ற நிர்க்குணம். ஆன்மா தனித் தத்துவம்; அது கடவுளாகாது" என்று விளக்கினார். பைபிளையும், வேதத்தையும் ஒப்பிட்டு, வேத மாண்பை நன்றாக எடுத்துக் காட்டினார். மறுநாள் ஏதோ சூழ்ச்சி ஜோடித்து, பிரசங்கம் பனிரெண்டு மணிக்கு என்று அழைத்தனர். சுவாமிகள் வேத பாஷ்யம் சொல்லிக் கொண்டிருந்தார். வழக்கம் போல் நாலு மணிக்கே வர முடியும் என்றார். பாதிரிமார் "தயானந்தர் விவாதத்திற்கு வர மறுக்கிறார், தோற்றுப் போனார்" என ஊரெல்லாம் பறைசாற்றினர்; எல்லாரும் சிரித்தனர்.

மறுநாள் தயானந்தர் சர்ச்சுக்கு அருகே கூட்டம் கூட்டிப் பாதிரிகளை அழைத்தார். அவர்கள் தலை காட்டவில்லை. சர்ச்சு மதத்தின் குறைகளைச் சொல்லி, வேத நெறியின் உண்மையை விளக்கினார். கூட்டம் மெச்சி மகிழ்ந்து, "வேதம் வாழ்க!" என்று கூவியது. மிஷனரிகள் வாயடங்கினர். சுவாமிகளை எதிர்த்த இந்துக்களும் அவர் வசப்பட்டனர். முன்னே வைத முன்ஷி நாராயண கிருஷ்ணன், இப்போது மன்னிப்பு கேட்டுக் கொண்டு, சுவாமிகளின் நூல்களைப் படித்தான். கோயில் பூசாரி பார்கவதத்தன் விக்ரகாராதனையை விட்டு, ஆரிய சமாஜியானான். பலர் உருக்களை ரவி நதியில் எறிந்தனர்.

குஜரன்வாலாவில் பிரமசரியப் பிரசாரம் நடந்தது. கூட்டத்தில் சில பயில்வான்கள் இருந்தனர், "பயில்வான்களா, நீங்கள் என் நீட்டிய கையை மடக்குங்கள் பார்ப்போம்" என்று முண்டாவைத் திரிகிவிட்டு நின்றார். யாரும் அவர் கையை மடக்க முடியவில்லை. "இதுதான் பிரமசரியம்! எல்லாரும் பிரமசாரியாகிக் கல்வி வளருங்கள்" என்றார் தயானந்தர்.

மூல்டானில் ஹோளிப் பண்டிகையின்போது சுவாமிகள் பிரசங்கம் செய்தார். இஸ்லாமியத்தைப்பற்றி காரசாரமாகப் பேசி, வேத மார்க்கத்தையும் விளக்கினார். அந்த ஊரில் அட்டூழியம் செய்த கோகுலீய கோசாயிகளைக் கண்டித்தார். அவர்கள் மணியும், சங்கும், சேகண்டியும் முழங்கிக் கூட்டத்தில் தொல்லை செய்தனர். பார்ஸிகளும் இந்துக்களும் கருத்துடன் பிரசங்கம் கேட்டனர். பார்ஸிகள் ஒரு தட்டில் திராட்சைப் பழமும், நூறு ரூபாயும் வைத்தளித்தனர். தயானந்தர் பணத்தை வேத பாஷ்ய நிதியிற் சேர்த்து, நன்றி கூறினார். ஒரு பிராமணன் பட்டுக் குடை தந்தான். "குளிர் வெயில் எனக்கில்லை—இந்தா" என்று திருப்பித் தந்தார். ஊன், மது ஒழிப்பதற்குப் பிரசாரம் செய்தார். கொலை வேள்விகளையும், தாந்திரிகக் குடியையும் கண்டித்தார். சிலர் புலாலுணவை விட்டனர்.

மூல்டானில் ஆரிய சமாஜம் எழுந்தது. (4—4—1383.) ஆனால் எழு பேரே சேர்ந்தனர். அன்பர், "எழு பேர் என்ன செய்வோம்?" என்றனர். "இது பரவாயில்லையே! முகம்மதுவை அவர் மனைவி ஒருவளே முதலில் ஆதரித்தாள். இப்போது உலகெல்லாம் இஸ்லாம் பரவி யிருக்கிறது. அதைரியப்படாதீர்கள். உறுதி கொண்ட எழுவர் போதும். ஆரம்பத்தில் நான் ஒருவனே ஆரிய சமாஜி. இப்போது ஆயிரக்கணக்கான அன்பர் சேர்ந்

திருக்கிறார்கள். உண்மை மெல்ல மெல்ல உறுதி கொண்டு முன்னேறும்" என்றார்.

லாகூரில் சுவாமிகள் இஸ்லாமைப் பற்றிப் பேசி, வேதத்தின் பெருஞ் சிறப்பை விளக்கினார், அதே சமயம் அவர் நவாப் ராஜா அளிகான் வீட்டிலேயே தங்கி யிருந்தார். அவருக்கு தயானந்தர் வேத தத்துவங்களை உபதேசித்தார். அக்காலம் கல்லூரி மாணவர் பலர், பாதிரிமார் வலையிற் சிக்கிக் கிறிஸ்துவ மார்க்கத்திற் புக முயன்றனர். அவர்களை யெல்லாம் தயானந்தர் இந்து தருமத்திற்கு இழுத்து, வேத நெறி புகட்டினார். இதனால் வந்த ஆபத்து கொஞ்சமில்லை. கல்லெறி மட்டுமில்லை; உயிருக்கும் ஆபத்து வந்தது. ஆள் அஞ்சவில்லை. கிறிஸ்துவர்கள் எப்படியாவது இந்த வேத ஜோதியை அவிக்க முயன்றனர். பன்னிரண்டாண்டுகள் பைபிளில் ஊறிய கிறிஸ்துவர் கடக சிங்கை வாதிற்கு அனுப்பினார். சுவாமிகள் வேத நெறியை விளக்கினார். கடக சிங், "சுவாமி! நான் அறியாமையால் பிற மதம் புகுந்தேன். இதோ இன்று முதல் நான் ஆரிய சமாஜி" என்று குடும்பத்துடன் சுவாமிகளைச் சார்ந்தான். அவன் குமாரிகளும் ஆரிய சமாஜிகளையே மணந்து கொண்டனர்.

இதைக் கண்டு அஞ்சிய பாதிரிமார், சமுஸ்கிரதப் புலமை பெற்ற கே. எம். பனர்ஜியை உடனே வரச்சொல்லி, கல்கத்தாவிற்குத் தந்தி மேல் தந்தியடித்தனர். அவர் ஏதோ சாக்கு போக்குச் சொல்லித் தப்பினார். தயானந்தருடன் இனி யார் வாதாட முடியும். வெற்றி! வெற்றி!! பதினாறு மாதங்கள் இவ்வாறு பஞ்சாபில் வேதப் பிரசாரம் செய்து, சுவாமிகள் ஐக்கிய மாகாணத்திற்குச் சென்றார்.

# ஜகஜ்ஜோதி

## 1. தீவிரப் பிரசாரம்

ஐக்கிய மாகாணத்தில் தயானந்தர் இஸ்லாம்—கிறிஸ்து மத கண்டனம் செய்து, வேதக் கொடியை நாட்டினார். ரூக்கியில், தினம் மாலை ஐந்து மணிக்குத் திரளான ஜனங்கள் கூடி, தயானந்தர் கர்ஜனையைக் கேட்டனர். பைபிளையும், குரானையும் அலசிப் பிழிந்து, சக்கையை வெளிப்படக் காட்டி, வேத சாரத்தை ஜனங்களுக்குப் புகட்டினார் தயானந்தர். ஜாதி, மத பேதமில்லாமல் எல்லாருக்கும் காயத்திரி சொல்லித் தந்தார். வழக்கப்படி மற்றச் சீர்திருத்தங்களைச் செய்தார். சில பண்டாக்களும், பாதிரிகளும், மௌல்விகளும் அவருக்கு ஜன்ம விரோதியானார்கள். "இந்தச் சாமியாரைப் பேச விட்டால், பிரிட்டிஷ் சர்க்காரே ஒழிந்து போகும். புரட்சி வரும்" என்று எல்லாரும் சர்க்கார் அதிகாரியிடம் முறையிட்டனர். அவர் திடீரென்று 144 தடை உத்திரவு போட்டுப் பொதுக் கூட்டங்களைத் தடுத்தார். சுவாமிகள் சட்டத்திற்குப் பயப்படாமல், தம் ஜாகையில் வந்தவர்களுக்கு வேத உண்மைகளை விளக்கினார். பாதிரிகள் வெள்ளைக்காரர் ஸயன்ஸை வானளாவப் புகழ்ந்தார்கள். "அதெல்லாம் வேத காலத்திற் கூட உண்டு, எங்கள் நாடும் சுதந்தரம் பெற்றால், இன்று வல்லரசாக விளங்கும்" என்றார். மான்ஸெல், காப்டன் ஸ்டுவர்ட் ஆகிய இருவரும் சுவாமிகளின் தைரியத்தையும், அறிவையும் மெச்சினர்.

இஸ்லாமியர் சுவாமிகளின் உரு மறுப்பை விரும்பினர். எனினும் குரான் தூஷணையை வெறுத்துக் கிளர்ச்சி செய்து, மௌல்வி முகம்மது காசிமை தர்க்கத்திற்கு அனுப்பினர். இரண்டு கட்சியும் 400 பேர்களை அழைத்து வந்து, தயானந்தர் ஜாகையிலேயே விவாதம் நடத்துவதாக, ஒப்பந்தம் ஆனது. தயானந்தர் குறித்த நேரத்தில் வந்து விட்டார். முதலில் மார் தட்டிய மௌல்வி, "அந்த இடம் நமக்கு ஒவ்வாது" என்று தப்பினார்.

ஆனால் உண்மையை உண்மையாக விரும்பிய நல்லோர் அனைவரும் சுவாமிகளை நாடினர். ரூக்கியில் ஆரிய சமாஜம் ஏற்

யப்பட்டது. அதில் அறிஞர் கூடி, சுவாமிகளின் உபதேசத்தைக் கேட்டனர்.

"எச்சாதி எம்மதமானாலும் சரி, வேதம் பொது. கடவுள் ஒன்றே. உள்ள பொருள்—உள்ளப் பொருள்; தீர்த்த யாத்திரை, கோயில் மணி, உரு வணக்கம் எல்லாம் ஏமாற்றம். பண்டாக்களும், பூசாரிகளும், புரோகிதர்களும் வயிறு பிழைக்கச் செய்த தந்திரங்களை ஒழியுங்கள். தன்னுறுதி, தன்னம்பிக்கை, பகுத்தறிவுடன் தலை நிமிருங்கள். அவரவர் வினையை அவரவர் அனுபவித்தே தீர வேண்டும். ஆதலால் வேதம் சொல்லும் சன்மார்க்கத்தைப் பின்பற்றி நல்வினையே செய்து, நலம் பெறுக. சிரார்த்தம் சடங்குகளாற் பயனில்லை. பாப உணவு ஆளைக் கெடுக்கும். கள், புலால், திருட்டுணவுகளை விலக்கி, ஒழுங்காகப் பாடுபட்டு, தாவர உணவே கொள்க. பிரமசரியமே சக்தி; அதைக் காக்க வேண்டும்" என்று உபதேசித்து, சுவாமிகள் அலிகார் சென்றார்.

அலிகாரில் சாமாஜி கிருஷ்ண வர்மா முதலியோர் சுவாமிகளைக் கண்டு அளவளாவினர். சில முஸ்லிம்கள் சுவாமிகளுக்கு அன்பு செய்தனர். சப் ஜட்ஜ் மௌல்வி பாரிதுடீன் சுவாமிகளை அதிசய புருஷர் என்று மெச்சினர். இராமசரண்தாஸ் மாளிகையில் ஒன்பது பிரசங்கங்கள் செய்து, வினு விடையும் நடத்தினர் தயானந்தர். கேள்விகள் சிக்கல்; பதில் தெளிவு. யஜுர் வேதம் முப்பத்திரண்டாம் அத்தியாயம், மூன்றும் மந்திரமாவது :

ந தஸ்ய ப்ரதிமா அஸ்தி
யஸ்யநாம மஹத்யச :
ஹிரண்ய கர்ப இத்யேஷ

மா மா ஹிம்ஸீ தித்யேஷா யஸ்மான்ன ஜாத இத்யேஷ ||

பரம்பொருளுக்கு உருவம் இல்லை; இனியன செய்தலே அவனை வழிபடுவதாகும். அவன் எங்கும் நிறைந்தவன். அவன் ஒளியால் எல்லாம் நிலவுகின்றன.

ஹிரண்ய கர்ப: ஸமவர்ததாக்ரே
பூதஸ்ய ஜாத: பதிரேக ஆஸீத் |
ஸதா தார ப்ரதிவீம் த்யாமு தேமாம்
கஸ்மை தேவாய ஹவிஷா விதேம ||

உலகநாதன் ; மூலப் பொருள், முன்னோன், முதல்வன், உயிர்களைத் தந்தோன், ஒளிகளின் ஒளி நிலையம், சுயம்பிரகாசன், சுத்த சச்சிதானந்த ரூபனை, அந்தப் பரம்பொருளை மனமடங்கி, நேரிய வாழ்வுடன் அன்பு செய்வோம்.

பூத உருக்களைத் தொழுவோர் மடவிருளில் ஆழ்கின்றார்கள். "அந்தம்தம: ப்ரவிஸந்தி ஏ அஸம் பூதம் உபாஸதே!" இந்த வேதக் கோட்பாடுகளைக் கொண்டு கடவுளின் தன்மையும் தத்துவமும் விளக்கினார் தயானந்தர்.

அத்பிர் காத்ராணி சுத்யந்தி
மன: ஸத்யேன சுத்யதி |
வித்யா தபோப் யாம் பூதாத்மா
புத்திர் ஜ்ஞானேன சுத்யதி ||

தண்ணீர் உடலைச் சுத்தமாக்குகிறது. மனம் உண்மையால் சுத்தமாகும். பூதாத்மா கல்வியறிவு தவங்களால், புத்தி ஆத்ம ஞானத்தால் சுத்தமாகும்.

இவ்வாறு வேத உண்மைகளை விளக்கி சுவாமிகள் இந்தியருக்கும் பிறருக்கும் புதிய உணர்ச்சி யளித்தார்.

மீரட்டில் ஆரிய சமாஜம் எழுந்தது. புராணப் பித்தர் பலர், வேத உண்மையை யறிந்து, ஆரிய சமாஜத்திற் சேர்ந்தனர். அவருள் தலை சிறந்த செல்வர் முன்னலால் ஸாஹு. அவரே சமாஜ நிதித் தலைவரானார். சுவாமிகளின் பலத்தையும் அறிவையும் மெச்சாதவரில்லை; அவர் காலை உருவி விட வந்த சில வஸ்தாதுகள், அவர் காலைத் தூக்கக் கூட முடியாது திகைத்தனர், சுவாமிகள் "திவசம் சடங்கு, வெளி வேஷங்களால் பலம் வராது ; பிரமசரியத்தினாலும், தூய வாழ்வாலுமே அது வரும்" என்றார் சிரார்த்தத்தையும், தீர்த்த யாத்திரையையும் இகழும் இந்தத் தடிச் சாமி, தமது பிழைப்பைக் கெடுப்பதாக நினைத்துச் சில பிராமணர், குண்டர்களைத் தயாராக்கி, அவர் வரும் சந்தில் ஒளிய வைத்தார்கள். அதை அறிந்த அன்பர் அந்த வழியே போக வேண்டாம் என்றனர். தயானந்தர், 'அந்த வழியே செல்வேன், குண்டர்களுக்கும் புத்திமதி சொல்வேன்' என்று சொன்னார். அவரைக் கண்டதுமே குண்டர் கூட்டம் பறந்தோடியது. உயர் சாதி என்று செருக்காடும் பிராமணரிடம், அந்தண் ஒழுக்கம், வேத ஞானம் இல்லாததால், அவர்கள் அவதிப்படுவதாகச் சொன்னார்.

இவ்வாறு ஐக்கிய மாகாணத்தில் விருது நாட்டி, தயானந்தர் ஜயப்பூர் அரசர் வருந்தி அழைக்கவே, இராஜபுதனத்தில் வேதப் பிரசாரம் செய்யத் தொடங்கினர். இடையே டில்லி ஆரிய சமாஜம் (1—11—1878) பலமாக வேரூன்றிக் கொண்டது.

## 2. தயானந்த புராணம்

தயானந்தர் ஆஜ்மீருக்குச் சென்றார். அவரை வர விடாமல் தடுக்கப் புராணப் பண்டிதர்கள் பல சூழ்ச்சிகள் செய்தனர். சமர்த்தன் என்ற அன்பர் துணையால் தயானந்தர் சூழ்ச்சிகளை வீழ்த்தி, ஆஜ்மீருக்கருகே புஷ்கரத்தில் தங்கினர். புராணப் புலவர் கட்சி கட்டி வாதத்திற்கு வந்தனர். ஒரு புலவர் 'விக்கிரக ஆராதனையே சரியான ஆராதனை, என்று ஒரு சுலோகம் சொன்னர். அது பத்ம புராண சுலோகமாம்.

தயானந்தர் உடனே, உருத் தொழுகை பொய்த் தொழுகை' என்ெறாரு சுலோகம் கட்டிச் சொன்னர். இது எதில் உள்ளது என்று புலவர் கேட்டார். 'தயானந்த புராணத்தில்' 'அதென்ன புராணம்? "ஐயா! பத்ம புராணம் எழுதியவர் இன்றில்லை. தயானந்த புராணி இதோ தங்கள் முன் உள்ளார். அவர் சொல்வது வேதஆதாரம் பெற்றது" என்ருர். மற்ெறாரு புலவர், இருபத்து நான்கு காயத்ரிகள் உள்ளதாகச் சொன்னர். தயானந்தர் சிரித்து 24,000 காயத்திரிகூட உண்டு என நகைத்தார். இன்ெனாரு புராணிகர் தற்கால பூகோளம் பேசுகு. உலகை ஆதி சேஷனே தாங்குகிருர் என்ருர்.

த : ஆதிசேஷன் அப்பன் யார்?

பு : காஷ்யபன்.

த : அவன் அப்பன், அவனுக்கும் அப்பன்?

பு : மரீசி, பிரம்மா.

த : அப்படியானல் மரீசி, பிரம்மா காலத்தில் உலகைச் தாங்கினது யார்? அப்போது ஆதிசேஷன் பிறக்கவில்லையே.

புராணிகர் விழித்தார். "ஐயா! சேஷன் என்ருல் பாம்பில்லை. பிரளயத்தில் எல்லாம் அழிந்தபிறகு சேஷமாக மிஞ்சியிருக்கும் பரம்பொருள்.

"பரம்பொருளே உலகைத் தன் சக்தியால் தாங்குகிருர் என்பதே பொருள்" என்ருர். இவ்வாறு புராணக் கண்டனம் செய்து உண்மையை நிலை நாட்டினர் தயானந்தர்.

ஆஜ்மீரில் அரிய சொற்பொழிவுகள் நடந்தன. ஆரிய வேதமே அருள் வேதம். அதுவே இறைவான நூல் என்பதை விளக்கி, குரான், பைபிள் முதலியவற்றில் உள்ள முரண்களையும் எடுத்துக் காட்டினார். பாதிரிமார் வாதாடத் துணிந்தனர். ஆஜ்மீர் ஸ்காடிஷ் மிஷன் பாதிரிகளான கிரேயும், டாக்டர் ஹஸ்பண்டும், பைபிளின் சிறப்பைப் புகழ்ந்து பேசினர். சுவாமிகள், "கடவுள் அரு; உடலில்லாத வஸ்து என்பதை ஒப்புகிறீர்; அப்படியானால் அவர் ஆதாமைத் தன் உருவில் அமைத்தது, ஆதாமுக்குத் தோட்டம் அமைத்தது, ஸேனாய் மலையில் உலாவியது, உலகை ஆறு நாளில் படைத்தது, ஏழாம் நாள் ஓய்வு கொண்டது எல்லாம் நம்பத் தகாதவை. கடவுள் சூரியனை நான்காவது நாள் படைத்தாராம். மற்ற மூன்று நாள் எப்படிக் கணக்கு? சூரியனில்லாமல் நாளேது? பகலேது?" என்று பல குறைகளையும் முரண்களையும் எடுத்து விளக்கினார். பாதிரிகள் சரியான பதில் சொல்ல முடியாமல், மறுநாள் ஏதோ சாக்குபோக்குச் சொல்லித் தப்பினர்.

"ஏராளமான பேர் தினம் சுவாமிகளின் பேச்சைக் கேட்டனர். அவர் வீர கம்பீரமாக, அசைக்க முடியாத பகுத்தறிவுடன் பேசுகிறார். அவர் பேச்சு முஸல்மான்களுக்கும், கிறிஸ்துவர்களுக்கும் பிடிக்காத போனாலும், அவர்களும் வந்து கேட்கிறார்கள். "இந்த மஹா புருஷரின் மஹா பிரசங்கம் அற்புதமாயிருக்கிறது" என்று பத்திரிகைகள் புகழ்ந்தன. கர்னல் ஆல்காம் போன்ற பெரியார் சுவாமிகளின் அறிவையும், துணிவையும் கொண்டாடினர். மௌல்வி மூராத் ஆலி (ராஜபுதன கெஜட் ஆசிரியர்) சுவாமிகளிடம் மிகவும் ஈடுபட்டு, அவர் கொள்கைகளுக்கு ஆக்கந் தேடினார். பசு வதையைக் கண்டித்தார். உரு வணக்கத்தைக் கண்டிக்காதிருந்தால், ஏராளமான பேர் ஆரிய சமாஜத்தில் சேருவார்கள் என்றொருவர் சொன்னார், "ஐயா, அப்படிப் பொய் சொல்லி ஆள் சேர்க்க நான் வரவில்லை. உண்மையான சிலரே எனக்குப் போதும். உரு வணக்கம் சமாஜத்திற் புகுந்தால், அதுவும் புராணச் சந்தையாய் விடும். ஆரிய சமாஜம் பரிசுத்தமான வேத மந்திரமா யிருக்க வேண்டும். நம்மவர் வேதத்தைத் தேடாமல் அலட்சியம் செய்த பலனே அன்னியர் ஆதிக்கம்" என்றார்.

சுவாமிகள் பழைய சாஸ்திர ஏடுகளை நாடெங்கும் தேடினார். பழைய நூல்களில், தற்கால ஸயன்ஸ்-விநோதங்களும் இருப்பதா

கக் காட்டினார். ஒரு நாள் தனுர்வேதத்தின் இரண்டே ஏடுகள் கிடைத்தன; மற்றவை மறைந்தன. "நமது பழஞ் செல்வங்களும் ரிஷி வாக்குகளும் இப்படிக் கால வெள்ளத்தில் மறைகின்றன. நமது பழைய ஏடுகளை யெல்லாம், அன்னியர் எடுத்துச் சென்று, ஆராய்ந்து பயன் பெறுகிறார்கள். உதாரணமாக இந்த ராஜஸ்தானம் சரித்திரப் புகழ் பெற்றது. இதன் பெருமை யெல்லாம் லண்டனில் இந்திய வீட்டுப் புத்தகசாலையில் பள்ளி கொண்டிருக்கின்றன"—என்றார். "இது வருந்தத் தக்க வாய்மை! இராஜஸ்தான் வரலாறு எழுதிய கர்னல் டோட் என்பவரே, எண்ணூறு பெட்டிகள் நிரம்பப் பழைய சின்னங்களையும் ஏடுகளையும் எடுத்துச் சென்றாராம். நேபாலிலிருந்து ஆக்ஸ்போர்டுக்கு 20,000 சமஸ்கிருத கையேடுகள் அனுப்பப் பட்டனவாம். இங்கிலாந்து, பிரான்ஸ், ஜெர்மனிகளில் ஏராளமான, விலையுயர்ந்த ஏட்டுச் செல்வங்கள் மௌனப் பள்ளி கொண்டிருக்கின்றன. நமது பழஞ் செல்வங்களை மீட்டுப் பாதுகாத்து, உலகிற்கும் பயன் படுத்த வேண்டும்" என்று சுவாமிகள் உருக்கமாகப் பேசினார்.

நல்ல செல்வத்தை எல்லாம் இழந்து, மூடக் குப்பைகளை நாம் குவித்துப் பெருமை கொண்டாடுகிறோம். பிரமஞான சூனியராய் பொம்மை வணக்கம் செய்கிறோம், என்றொரு நாள் சுவாமிகள் பேசிக் கொண்டிருந்தார். அருகே ஹனுமார் கோயில்; சிவராம் என்பவன் தடபுடலாகத் தோத்திரம் சொல்லி, ஹனுமாரை வணங்கி வந்தான்.

தயா: என்ன ஹனுமானை வணங்கிப் புகழ்ந்தீரே, அவர் பேசக் கூட இல்லையே.

சிவராம்: ஹனுமார் என் காதுக்குள் பேசினார்.

தயா: ஏன் நான் கிட்ட இருக்கிறேன் என்று பயந்து, சத்தமில்லாமல் பேசினாரோ?

இதைக் கேட்டு, சிவராம் சிரித்தான்; எல்லோரும் சிரித்தனர்.

பரோடாவில் ராவ்சாகெப் பகதூர் சிங், தயானந்த பக்தரானார். அங்கே சுவாமிகள் வேத கைங்கர்யம் பலமாக நடத்தினார். மிஷின் ஸ்கூல் ஆசிரியர், சுகதேவப்ரசாதர், கிருஸ்துவராகப் போகும் சமயம், சுவாமிகளின் பிரசங்கத்தைக் கேட்டு, ஆரிய சமாஜத்தில் சேர்ந்தார். ஜயபூரில் லட்சுமண சிங் மாளிகையில் சுவாமிகள் மூன்று பிரசங்கங்கள் செய்தார். சுவாமிகள் மூடச் சடங்குகளைக் கண்டித்தார்.

மூர்த்தி பூஜை, சிரார்த்தம் இரண்டையும் கண்டித்தார். கோட் சொல்லிக் குறும்பர், ஒன்றுக்குப் பத்தாக அரசர் காதில் ஓதினர். அரசர் சினம் பொங்கி, சாமியாரை வெளியேறச் சொன்னர். தயானந்தர் அஞ்சாமல் ஒன்பது நாட்கள் இருந்து, அரிய சொற் பொழிவுகளாற்றினர். ஏராளமான ஜனங்கள் கேட்டு மகிழ்ந்தனர். ஒரு சாது மட்டும் "நான் பிரமம்" என்று செருக்காடினன். "பிரம்மம் உலகை ஆக்கும். நீ ஒரு நிலத்தையாவது உண்டாக்க முடியுமா? சர்வாந்தர்யாமி, சர்வ சக்திமான் ஆகிய கடவுளெங்கே நீ எங்கே" என்று வெளுத்து வாங்கியதில், அஹம்பிரம்மம் இறங்கிப் போனது.

9—1—1879-ல், சுவாமிகள் டில்லிக்கு வந்தார். ஆறு நாட்கள் அங்கே பிரசங்கம் செய்து, மீரட்டுக்குச் சென்று, அங்கிருந்து ஹரித்துவாரம் கும்பமேளத்திற்குப் போனர்.

## 3. பொது ஜனங்களே!

மடமையில் உறங்கிய ஜனங்களை எழுப்ப, தயானந்தர் வேத கர்ஜனை செய்தார். திருவிழாக் கூட்டங்களிலெல்லாம் அவரது சங்க நாதம் பலமாகக் கேட்டது. ஹரித்துவாரம் கும்பமேளத்தில், தயானந்தர் டேராவில், இரவும் பகலும் கூட்டமும் வேத வொலியுமாயிருந்தன. தயானந்தர் பொது ஜனங்களுக்கு ஒரு நீண்ட அறிக்கை அச்சிட்டு, ஏராளமாகப் பரப்பினர்.

அதன் சாரமாவது

ஆரிய வர்த்த மஹா ஜனங்களே; எல்லாரும் வாருங்கள்; வேத உண்மையை அறிந்து நடந்து இன்புறுங்கள். முன்னே புகழ் பெற்றோங்கிய ஆரிய பூமி, இன்று தாழ்வுற்று அன்னியருக்கு அடிமைப் பட்டு, மூடக்கொள்கைகளிற் கட்டுண்டு நலிகிறதே! தேசத்தை மகத்தான நிலையில் உயர்த்துவோம் வாருங்கள்; வழி வேதத்தில் உள்ளது. வேத நெறியை இழந்தீர்கள்; வீழ்ந்தீர்கள். வேத நெறி தழைத்தால் மீண்டும் வாழ்வீர்கள், சுய நல மற்ற தர்ம வீரர்கள், ஆத்ம தீரர்கள் வாருங்கள். பகை, பொறாமை, வேற்றுமை, சாதிப் பித்தம், மனத் தளர்ச்சி அனைத்தையும் விட்டு, வீரச் சிங்கக் கூட்டம் போல் எழுந்து, வேத கர்ஜனை செய்யுங்கள். வேதப் பிரசாரம் செய்ய அறிஞர் வாருங்கள். உபதேச மண்டலி கூட்டி, உலகெல்லாம் தர்ம பேரிகை முழங்கலாம். எழுந்திருங்கள், செயலில் இறங்குங்கள். முன் செல்லுங்கள்; அறம் வெல்லும், உண்மை ஒளிரும்" ஊனுறக்க வேலை தவிர, மற்ற வேலையெல்

லாம், தயானந்தர் வேதவுண்மைகளை விளக்கினார். காலை எழிலிருந்து பன்னிரண்டு மணி வரையில், பிறகு ஒன்றிலிருந்து ஐந்து மணி வரையில், பிறகு இரவில் எழுமுதல் ஒன்பது வரையில், தயானந்தர் ஜனங்களுக்கு உபதேசம் செய்தமணியமாயிருந்தார். கடுமையான வேலையால் அவருக்கு உடம்புகூட நோயுண்டது. அடிக்கடி அன்பரிடம் "இந்த நாடு கைம்பெண் கண்ணீர், அனாதைகளின் கண்ணீர், ஏழைகளின் புண்ணீர், பசுக் கொலை யிரத்தங்களால் நரக வேதனைப்படுகிறதே" என்று பெருமூச்செறிந்தார். துறவிகளுக்கெல்லாம் தர்மப் பிரசாரம் செய்ய உபதேசித்தார். ஒரு சாது ராங்கியாகப் பேசினான்; தயானந்தர் ஆணித்தரமாக பதில் சொன்னார். சாது தன் குற்றம் உணர்ந்து ஆரிய சமாஜியானான். சில இஸ்லாமியர் வாதாடினர்—இந்துக்களை இழிவுறுத்தினர். "ஐயா சலாம். இந்தியரை விட முஸ்லிம்கள் பெரிய உருவணங்கிகள். அவர்கள் காபாவை, மசூதியை, தூர்மலையை, அஸ்பாது கல்லை, புதை குழியை, பிறையைத் தொழுகிறது விக்கரகாராதனையே போலும். இந்திய முஸ்லிம்கள் சில ஆண்டுகளுக்கு முன் அசல் இந்தியர்களாகவேயிருந்தனர். அவர்கள் மறுபடியும் வேத தர்மந்தைக் கைக் கொண்டு நாட்டுடன் கலந்து ஒரே இனமாக வாழவேண்டும்" என்றார் தயானந்தர். காஷ்மீர் மன்னர் தூதனுப்பி, இந்திய கிறிஸ்துவரையும் முஸ்லிம்களையும் மறுபடி இந்து தர்மத்திற்கு மாற்றலாமா என்று கேட்டார்.

"மதம் மாறினவர்களை மனம் மாற்றி சுத்தி செய்து, வேத தர்மத்தில் கொண்டு சேர்ப்பது நமது கடமை" என்றார் மகான். அவ்வாறே அவர் செய்து காட்டினார்; முகம்மது உமார் என்றவரை ஆரிய தர்மியாக்கி, அலக்தாரி என்ற பெயரீந்தார். உண்மைத் துறவிகளையும் புலவர்களையும் சுவாமிஜீ அன்புடன் அழைத்து, உபசரித்து வேத தர்மத்தை உபதேசித்து, அதை நாடெங்கும் பரப்ப வேண்டினார். சுவாமி சுத்தானந்தர், ஆண்டவன் என்ற தமிழ்த் துறவி, ஜீவகிரி முதலிய துறவிகள் சுவாமிகளுக்குத் துணை செய்தனர். ஹகீம் தான்சேன் போன்ற இஸ்லாமியர் தயானந்தர் வாக்கைப் பருகி மகிழ்ந்து தொண்டு செய்தனர். கலெக்டர்களும், போலீஸ் தலைவருமான வெள்ளைக்காரர், சுவாமிகளுடன் அளவளாவி மகிழ்ந்து, ஆரிய சமாஜத்திற்கும், வேத பாஷ்யத்திற்கும் நன்கொடையளித்தனர்.

## 4. ஹவனம்

ஒரு ஐரோப்பிய டாக்டர் சுவாமிகளைக் கண்டார். ஹவனம் எதற்கு என்று வினவினார். "சுகாதாரத்திற்கு", என்றார் சுவாமிஜீ.

"அதெப்படி" என்று வியந்தார் வெள்ளையர்."கும்பமேளக் கும்பல் இலட்சக் கணக்கில் கூடியிருக்கிறது, ஹரித்வாரத்தில் ஆபாசமும் குவிகிறதே. அதை எப்படிப் போக்குகிறீர்கள்? ஊர் நாறுகிறதே." "ஆபாசங்களைச் சென்ற பனிரண்டு நாட்களாக வெட்டிப் புதைக்கிறோம் அல்லது கங்கையில் தள்ளுகிறோம்."

"இதனால் காலரா வருமே"

"வரவே வராது."

"இன்னும் நான்கு நாட்களில் பாரும்."

நாலாவது நாள் காலரா பயங்கரமாகப் பரவிப் பலரைக் கொன்றது. டாக்டர் சுவாமிஜீயிடம் ஓடிவந்து என்ன செய்வது என்று பதறினர்.

"ஜனங்களை வெளியேற்றும். அழுக்குகளை ஊருக்கு அப்பால் கொண்டு தள்ளி காற்றுக்கு எதிர்ப்புறம் எரியுங்கள். ஊரில் நெய்யும் கூடனும் கொண்டு ஹவனம் செய்யுங்கள்" என்றார் மஹான். அவ்வாறே செய்ததில், காலரா ஓடி மறைந்தது. ஹவனத்தின் பெருமையை வெள்ளை மருத்துவரும் கண்டு வியந்தார். "இப்படியே எங்கள் வேதாசாரங்களெல்லாம் அறிவுத் தெளிவுக்கும் சுகாதாரத்திற்கும் ஏற்பட்டன" என்று சுவாமிஜீ விளக்கினர்.

## 5 வேதாந்தி

இச்சமயம் சுவாமிகள் உடல், ஓயா உழைப்பால் மெலிந்தது. தொடையில் புண் புறப்பட்டது. அவர் படுக்கையுடனிருந்தார். இதுதான் சமயம் என்று சில புத்தகப் பண்டிதர் அவரை வாதத்திற்கு இழுத்தனர். "சரி வாரும்" என்றார் சுவாமிஜீ; வந்தார்கள்:

சு: விவாத விஷயம் என்ன?

வாதிகள்: வேதாந்தம்.

சு: வேதாந்தம் என்றால் என்ன தெரிந்து கொண்டீர்கள்?

வாதி: எல்லா உலகமும் மாயை, கானல்நீர்; பிரம்மம் ஒன்றே உள்ள பொருள் என்பதே வேதாந்தம்.

சு: உலகம் என்றால் தங்கள் உடல், ஆடை, புத்தகமூட்டை தங்கள் குரு, உபதேசம் எல்லாம் சேர்ந்ததுதானே.

வாதி: ஆம் எல்லாம் மாயை.

சு: உன் குரு நீ, உபதேசம் எல்லாம் மாயையானால் இந்த விவாதமும் எதற்கு? வாதியே தன் வழக்கை ஒப்பாதபோது, பிராதும் தீர்ப்பும் எதற்கு?

சாது பதிற் சொல்ல முடியாது சென்றார். சில சாதுக்கள் "சுவாமிகளே வாருங்கள் எங்களிடத்திற்கு" என்று எழுதினர். சுவாமிகள் மெல்ல விசுத்தானந்தரை அனுப்பி உளவறிந்து கொண்டார். "சாதுக்களே, என்னைத் தந்திரமாக அழைத்து இரகசியமாகக் கொலை செய்யவா சூழ்ச்சி? தெரியுமே உங்களை. வாதாட வேண்டுமானால் சரியான மத்யஸ்தத்தில் இங்கேயே வாதாடுவோம், வாருங்கள். நான் சாவிற்கு அஞ்சவில்லை; ஆனால் பகைவர் சூழ்ச்சியால் மறைந்தால், நான் மேற்கொண்ட காரியம் தடைப்படும். அதற்காகவே உயிரைப் போற்றி உலாவுகிறேன்" என்றார். சாதுக்கள் வெட்கிப் போனார்கள். இருந்தாலும் வெட்கங் கெட்ட சூழ்ச்சிகளால் தயானந்தரை ஒழிக்கவே அல்லும் பகலும் முயன்றார்கள். ஏன்? தயானந்தர் போலித் துறவிகளையும், காஷாய ஆஷாடபூதிகளையும், வேதாந்த வயிற்றுப் பிழைப்புகளையும், அம்பலமாக்கி விட்டார். இச்சமயமே தொத்து நோய் பரவியது, சுவாமிகள் நோய் தீர வழி செய்தார்.

## 6. உண்மையே பேசுவேன்

சுவாமிகள் ஐக்கிய மாகாணத்தில் பிரயாணம் செய்து, பல அறிஞருடன் வாதாடி, வேதக் கொடியை நாட்டினார். அவற்றுள் பரேலியில் நடந்த விவாதங்களே முதன்மையானவை. இங்கே கிறிஸ்துப் பிரசாரம் அதிகம். ரெவரண்டு ஸ்காட்டு புகழ் பெற்ற பாதிரி. அவர் தயானந்தருடன் நீண்ட வாதந் தொடுத்தார். "மறு பிறப்புண்டு, கடவுளுக்கு உடலில்லை; உடல் எடுக்க வேண்டிய அவசியமில்லை. அவதார வாதம் பொய்—விஷ்ணு எங்கும் உள்ள பொருள். எங்குமிருப்பவர், ஒரு உடலிற் பிறந்த உடலாகி, வினை வருந்தி, இறத்தல் பொருந்தாது. அவரவர் வினையை அவரவர் வருந்த வேண்டியது; ஆதாம் பண்ணின பாவத்தை இன்றுள்ள அந்தோணி, சூசை அனுபவிக்க முடியாது." என்று பைபிளில் உள்ள முரண்களை எடுத்து விளக்கினார். தாராளமான வெள்ளைக் காரரும் சுதேச கிறிஸ்துவர்களும் கேட்டனர்; பலர் வெகுண்டனர். இந்தத் துறவிக்கு 144 போடவேண்டும் என்று ஊர் அதிகாரிக்குப் புகார் செய்தனர். சிலர், "சுவாமிகளே பிறமத கண்டனம் வேண்டாம்! அபாயம்!" என்றனர். தயானந்தரோ "உலகரசனே என்னைத் தடுத்தாலும், உயிருக்கே இடர் வந்தாலும், உண்மையைச் சொல்லாது விடேன்" என்று இன்னும் பலமான பிரசாரம் செய்தார். பாதிரிமாரும் மௌல்விகளும் அவரை என்ன தந்திரம் செய்தும், அடக்கி வைக்க முடியவில்லை. "இந்த உடல் ஒரு நாள்

வீழும். தர்மத்தைத் தாங்கி வீழட்டுமே. என் ஆத்மாவை யார் அழிக்க முடியும்? உண்மையை நான் தைரியமாகப் பேசுவேன். தூக்கு மேடையிலும் துப்பாக்கி முனையிலும் உண்மையே பேசுவேன். என் மனச்சாட்சியை யாரும் அடக்கி வைக்க முடியாது'' என்றார் ஆத்மதீரர். அன்று பிரசங்கத்திற்கு ஸ்காட் வரவில்லை. அவர் சர்ச்சில் வணங்கிக் கொண்டிருந்தார். தயானந்தர் ''வாருங்கள் நாமும் சர்ச்சுக்குப் போவோம்'' என்று எல்லாரையும் அழைத்துக் கொண்டு சர்ச்சுக்குள் நுழைந்தார். அப்போது உபதேசம் செய்து கொண்டிருந்த ஸ்காட், மேடையிலிருந்து இறங்கிவந்து சுவாமிகளை அன்புடன் வரவேற்றார். எல்லோரும் வேண்டிக் கொண்ட படியே சுவாமிகள் இருபது நிமிஷம் மனித வணக்கத்தைக் கண்டித்து, பரம்பொருளை உள்ளத்தால், தியானத்தால் வணங்க வற்புறுத்தினர்.

லக்னோவில் சுவாமிகள் பசுக் கொலையைக் கண்டித்துப் பசுக் காத்தலைப் பற்றி உருக்கமாகப் பேசினர். ''பசுவைக் கொல்லுதல் தற்கொலைக்குச் சமானமாகும். உடல் வளர்ச்சிக்குப் பால் இன்றியமையாதது. கருணையுடன் பால் சுரக்கும் பசுவைக் கொல்கிறவர்கள் இரக்கமற்ற அரக்கராவார். கொன்ற பசு மாமிசம் பத்துச் சேர் தானியமும் சேர்த்துச் சமைத்தால், இருபது பேருக்கு உணவாகிறது. ஒரு பசுவை உயிருடன் வளர்த்தால் இருபதினாயிரம் பேருக்குப் பால் கிடைக்கும். காளை மாடுகள் நன்றாக உழைக்கும். இது தெரியவில்லையே புலாலுண்ணும் மனிதப் புலிகளுக்கு!'' என்று வருந்தினர் கருணை வள்ளல். வெள்ளைக்காரர்கூட அவர் சொன்ன நியாயத்தை நம்பினர். சுவாமிகள் லக்னோ ஆரிய சமாஜத்தில் அரிய சொற்பொழிவு ஆற்றினர். ஆரிய சமாஜத்திற்கு ஏராளமான பணம் சேர்ந்தது. வேத பாஷ்யத்திற்கு நன்கொடைகள் வந்து குவிந்தன. கேள்விகளும் அப்படியே.

## 7. கேள்விகளுக்குப் பதில்

கேள்விகளில் பலவகை: தயானந்தர் கிண்டல் கேள்விகளுக்குக் கிண்டலாகவே பதில் சொல்லி, ஆள் வாய்மூடச் செய்வார். கேலி நையாண்டிகளுக்குச் சரியான சாட்டை கொடுப்பார். விஷயத்தைத் தெரிந்து கொள்ள உண்மையாகக் கேட்கும் அன்பருக்கு, உள்ளன்புடன் பதில் சொல்லுவார். ஆயிரக் கணக்கான கேள்விகள் அவரை வளைத்துக் கொண்டன. அவற்றிற்கு சுவாமிகள் சொன்ன பதிலை மட்டும் இங்கே சுருக்கமாகக் குறிக்கிறேன்.

பாபத்திற்கு மன்னிப்பில்லை; வினைப்பயனை அனுபவித்தே தீர வேண்டும். கடவுள் ஆண்டான், முதல்வன், தலைவன்; மனிதன் கடவுளின் ஊழியனே. ஆன்மா சிற்றறிவானது, உணர்த்த உணர்வது; அது கடவுளாகாது; அது தெய்வ நியதிக்கு அடங்கியே நடத்தல் வேண்டும். உலகம் உண்மை, அது வெறும் கனவன்று. ஆன்மாவும் என்றும் இருப்பதே. காலம் ஒன்றே. காலம் இறப்பது மில்லை, வருவதுமில்லை; என்றும் இருப்பது ஜீவன் - முக்தியென்பது தீதின்றி நலம் புரிதலே; உடலை நீத்தபின் கடவுளின்பத்திற் கலத்தலே விதேகமுக்தி. வேதங்கள் உயிர்க் கொலையை ஒப்பவில்லை. யக்ஞம் உயிர்க் கொலையன்று. மெய்யைப் போற்றிப் பொய்யை விலக்கலே அறவொழுக்கம். சிராத்தம் தர்ப்பணம் என்பவை இறந்தவருக்கன்று, கண்முன் இருக்கும் நல்லுயிர்களுக்குத் தொண்டு செய்வதே சிராத்தம்; பொது நலத்திற்கு அர்ப்பணமாவதே தர்ப்பணம். புண்ணியம் செய்பவன் உயர்வான்; பாபி தாழ்வான். தீயன் தீயபிறவி யடைவான்; வினைப்பயன் விடாது.

இவ்வாறு கேள்வி கேட்டவர் பலர் திருப்தி யடைந்து ஆரிய சமாஜத்திற் சேர்ந்தனர்.

## 8. இரக்கக் கண்ணீர்

ஒரு நாள் தயானந்தர் கங்கைக் கரையில் உலாவிக் கொண்டிருந்தார்; அப்போது ஒரு முதியவள் தன் மகன் பிணத்தைக் கங்கையில் தள்ளிவிட்டு அழுது கொண்டிருந்தாள். ஈமக் கடனுக்குக் கூட அவளிடம் பணம் இல்லை; அதை கண்டார் தயானந்தர். கண்ணீர் வடித்துப் புலம்பினார்.

### கருணைக் கண்ணீர்

புண்ணிய பூமியிலே—மாந்தர்
 புழுவாய்த் துடிதுடிப்பார்
கண்ணீர் பெருகுதையே—நெஞ்சங்
 கலங்கிச் சுழலுதையே!

வஞ்ச நரிபுலிகள்—இவர்
 வாழ்வொட் டாதடிப்பார்
பஞ்சைத் தரித்திரராய்—இவர்
 பரி தவிக்கின்றார்,

உண்ண வுணவுமில்லை—இவர்
 உடுக்க வுடையுமில்லை
எண்ண வுயர்வுமின்றி—மனம்
 ஏங்கி ஏங்கித் தவிப்பார்;

அன்னியரின் கொடுங்கோல்—இவர்
ஆவியை வாட்டுதையே
இன்னற் சிறையிருளில்—இவர்
ஈனராய் வாழுகின்றூர்.

வேதநெறி மறந்தார்—பிரமசர்ய
வித்தகளும் பயிலார்.
பேத நெறிகளிலே—மூடப்
பித்தங் கொண் டேயலே வார்.

இம்மைப் பயனறியார்—தலைவிதி
என்று கவலை கொள்வார்
பொம்மைகளைத் தொழுவார்—வெறும்
போலிகள்முன் விழுவார்.

ஆயிரம் சாமிகளும்—பதி
னுயிரம் சாதிகளும்
ஆயிரம் பிரிவினையும்—இவர்
ஆக்கத்தைத் தேய்க்குமையே.

மந்தை மந்தையாக—மதம்
மாறிப் பகை வளர்ப்பார்
சொந்த சகோதரரை—இவர்
தூர விலகி டென் பார்

நெற்றி யலங்கரிப்பார்—இவர்
நெஞ்சில ழுக்குடையார்
கற்றப் படிப்புகளும்—வெறும்
கஞ்சி நடிப்புகளே.

உள்ளத்தில் எத்தனை நோய்—இவர்
உடலினில் எத்தனை நோய்
கள்ளத் தளுக்குகளால்—பிறர்
காசைக் கவருகின்றூர்.

மாசற்ற வேதவழி—நின்று
மானிடர் உய்வதென்றே
தேசநிலையை எண்ணி—என்
சித்தம் கலங்குதையே.

இந்த மாதிரி தயானந்தர், தேச நிலையைக் கண்டு வருந்தினுர். அன்னிய ஆட்சி நாட்டுச் செல்வத்தையும், சுதர்மத்தையும், வேதக் கலைகளையும் பாழ்படுத்துவதையும், அடிமை விலங்கு அட்டை போல் ஒட்டி நமது இரத்தத்தை உறுஞ்சுவதையும் தயா னந்தர் கண்டு கண்டு, கண்ணீர் விட்டார். உலகெல்லாம் போற்

றத்தக்க,கடவுட் செல்வம் படைத்த ஆரிய பூமி. எல்லாரும் தூற்றி இகழும் படி, மூடக் காடானதை எண்ணி யெண்ணி மனம் நைந்தார். சென்றவிடமெல்லாம் ஒவ்வொரு நாளும் வேத வழியே முன்னேறும் வகையைப் பொது ஜனங்களுக்கு உபதேசித்தார். உடல் நோயையும் பொறுத்துக் கொண்டு, உடலெடுத்த கடமையை நிறைவேற்றினர். எத்தனை வஞ்சச் சூழ்ச்சிகளை அவர் வென்றார்.

## 9. முகத்தைப் பாரேன்!

சுவாமிகளை வெறுத்த பகைவர் ஒவ்வொரு நாளும் தொல்லை செய்தனர். இச் சமயம் வைதிகர் இஸ்லாமியரைத் தூண்டி விட்டுப் பின்னிருந்து வேலை செய்தனர். பண்டித சதுர்புஜ புராணிகர் இஸ்லாமியரைத் தூண்டி விட்டு சுவாமிகளுக்குத் தொல்லை செய்யக் கிளம்பினர். சுவாமிகளை மிடுக்கான ஓரிடம் வாதுக்கழைத்தார்; அங்கே குண்டர்களை ஒளித்து, ஆளைச் சரி பண்ணிப் புதைக்க எல்லா ஏற்பாடுகளும் செய்தார்.

சுவாமிகள் குறித்த நேரத்தில் அந்த இடத்திற்குச் சென்று, சதுர்புஜரைத் தேடினர்; சதுர்புஜரின் வால்கள் நையாண்டி செய்யத் தொடங்கினர். "சதுர்புஜர் கண்கோளாறு அதனுல் வரவில்லை" எனறனர். "கண் கோளாரானுல் வாயால் பேசலாமே" "பேசலாம் ஆனுல் தங்கள் முகத்தில் விழிக்க அவருக்கு மனமில்லை" "என் முகத்தைப் பாராமல் திரை போட்டுப் பேசலாமே!" "அவ்வளவு பெரியவர் உங்களுடன் பேச மாட்டார். நான் அவர் சீடன்; என்னுடன் வாதாடும்"

"நீர் என்ன படித்திருக்கிறீர்?" இதற்குப் பதில் கல கல வென்று பல குரல்கள் சிரித்தன. பட்டென்று விளக்கணைந்தது; சடசட வென்று கரகோஷம், படபட வென்று தடிகளின் சத்தம் கேட்டன. சுவாமிகள் "குண்டர்காள்! உங்களுக்கு அஞ்சுவேனென்று பார்த்தீர்கள்; பார்க்கிறேன் ஒரு கை; கிட்டவாருங்கள்" என்றதும், அன்பர்கள் வந்து சூழ்ந்தனர்; ஒரு விளக்கு பளிச்சிட்டது. சதுர்புஜக் கூட்டம் ஓடி மறைந்தது. மறு நாள் அக் கும்பலில் சிலர் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு, ஆரிய சமாஜத்தில் சேர்ந்தனர்.

புராணிகர் ஒரு மௌல்வியைத் தூண்டி விட்டனர். தயானந்தர் பிரசங்கம் தொடங்கும்போது, மௌல்வியும் எதிர்ப்பாணையும் போட்டு, வசை மாரி பொழிவான். ஒரு நாள் இன்ஸ்பெக்டர்

ஜில்பெர்ட்டே வந்து மௌல்வியை அடக்கித் தாமே தலைமை வகித்துப் பிரசங்கங்கள் நடக்கச் செய்தார். அவர் தயானந்தரை மிகவும் மெச்சி, பாதிரிமார்களை யெல்லாம் வந்து கேட்கச் செய்தார். சேனாதிபதி ராபர்ட்ஸ் முன்பே தயானந்தர் கிறிஸ்து மத கண்டனம் செய்தார். அவர் தைரியத்தை ராபர்ட்சும் மெச்சினான். டாக்டர் ஜோன்ஸ், தயானந்தருடன் நெருங்கிப் பழகி, வேத உண்மையை அறிந்தார். எத்தனையோ பாதிரிகள் அவ்வாறு வந்து பழகினர். எனினும் கிறிஸ்துவர்கள் மதம் மாற்றுவதை அவர் கண்டித்தார். "இந்துக்களே! கும்பகர்ண உறக்கத்தி லிருந்து எழுந்திருங்கள்! நாடு கொள்ளைபோகிறது! வீடு பறி போகிறது! பரதர்மச் சூறுவளி உங்களைத் தூசிபோல் அடித்துச் செல்கிறது. அடிமைச் சங்கிலி உங்கள் கைகளில் கனக்கிறது! இடையிற் புகுந்த வேத விரோதமான, விநோத—மூடப் பழக்கங்கள், உங்கள் மானத்தைப் பலிவாங்குகின்றன. நம் இளைஞர்கள் ஆங்கில மோகத்தில் விழுந்து, இரண்டுங் கெட்டானாயினர்! எழுந் திருங்கள் இந்தியர்காள்!

இன்னும் உறங்குவதோ—இந்த
ஈன இருள் நரகில்
அன்னிய மோகவலை—தன்னை
அறுத்தெழுந்திருப்பீர்"

என்று நாட்டை எழுப்பினார் தயானந்தர். இரவில்கூட அடிக்கடி எழுந்து, நாட்டை நினைத்துக் கண்ணீர் விடுவார்; நல்லது சொன்னாலும் கேளார்! வழி காட்டினாலும் வழி பார்த்து நடவார்!! அப்படிப்பட்ட தடித்த மூடப் பிடிவாதத் திமிர் கொண்டனர் நம்மவர். தயானந்தரை மட்டும் அந்தக்கால இந்தியா பின் பற்றி யிருந்தால், இன்று பாகிஸ்தானோ, பிற மதங்களின் நரி வேலைகளோ, இந்தப் புண்ணிய பூமியில் நவகாளி-லாகூர்-படு கொலைக்கோ இடமிருக்காது. சர்ச்சும் மசூதியும் ஆரிய மந்திரமாகி வேதகோஷம் செய்யும். தயானந்தர் வெறும் சமயச் சீர் திருத்தத்திற்காக மட்டும் எழுந்தாரில்லை; சமயம், சமுதாயம், அரசியல், கலை, கல்வி, தொழில்-முதலிய எல்லாத் துறைகளிலும் தீவிரமான, உண்மையான மாறுதலையும், வேத வொளியையும் வீசி, ஒரே இந்தியாவில், ஒரே வேதவழிவாழும் ஒரே சமுதாயத்தையும், ஒரே அரசியல் ஆட்சியையும் காண எழுந்த மஹான் தயானந்தர். இன்று நம் முன் நடக்கும் அரசியல், சமுதாயச் சீர்திருத்தங்களுக்கெல்லாம் மூல புருஷர் தயானந்தரே. சர்க்காரின் 144-ஐக்கூடத் தூக்கி யெறிந்து, தயானந்தர் கர்ஜித்தார்.

சுவாமிகளின் பிரசங்கத்தைக் கேட்ட ஒரு கலெக்டர் "இந்தியர், தயானந்தர் சொன்னபடி நடப்பதானால், இங்கிலீஷ்காரர் உடனே இந்தியாவைவிட்டு வெளியேறித் தீரவேண்டும். அவர் பேச்சில் அவ்வளவு சுதந்தரக்கனலும், சுதர்ம ஒளியும் வீசுகின்றன" என்றார்.

ஆக்ரா கத்தோலிக் பிஷப் ஒருநாள் தயானந்தருடன் வாதாடினார்.

தயா: கிறிஸ்துவரும் இஸ்லாமியரும் மதவெறியை விட்டு, எல்லாருக்கும் பொதுவான உண்மைகளை உபதேசித்தால், நாட்டில் ஒற்றுமை யுண்டாகும்.

பிஷப்: அப்படி உண்டாகாது. கிறிஸ்து நம்பிக்கையாலே தான், எல்லாரும் கிறிஸ்துவரானாலேதான், ஒற்றுமை வரும்.

தயா: எல்லாரும் கிறிஸ்துவரான உங்கள் நாட்டில் ஒற்றுமை இருக்கிறதா? அதுவே போர்க்களமாயிருக்கிறதே. போதாக்குறைக்கு, இந்த வேத நாட்டில் வந்து சிலுவை நாட்டுகிறீர்.

பிஷப்: ஐயா, விக்டோரியா ராணி, வைசராய் லிட்டன் மூலம் இந்தியாவை ஆளுகிறாள்; அதுபோலவே பரலோகத்திலிருக்கும் பரமபிதா, தன் மகன் கிறிஸ்துமூலம் உலகை ஆளுகிறார்.

தயா: பரம பிதாவின் மகனா? பரம பிதாவின் மனைவி யார்? மச்சான் யார்? மாமன் யார்? எல்லாம் வல்ல இறைவனுக்கு ஏஜெண்டு எதற்கு? உலகெல்லாம் அவன் மயமே. இப்போது கிறிஸ்து இல்லையே.

பிஷப்: கிருஸ்து அவர் பிரதிநிதியில் விளங்குகிறார்; உலகைத் திருத்துகிறார்:

தயா: இப்போது உலகைத் திருத்தும் பிரதிநிதி யார்?

பிஷப்: எங்கள் போப்.

தயா: ஹ, ஹ! உங்கள் போப்பைத் திருத்தும் புத்திமான் யார்?

பிஷப் திகைத்துப் போனார். தயானந்தர் அன்று கூட்டத்தில் கிறிஸ்துவப் போப்புகளையும், இந்தியப் போப்புகளான பிடிவாத வைதிகர்களையும், நகைததும்ப, அம்பலப்படுத்தி "ஹே ஆரிய மஹா சங்கமே, மோசம் போகாதே! 1880 ஆண்டுகளுக்குமுன் இறந்த ஒருவன், இன்று உங்களுக்குக் கதிதர முடியுமா? மூடப் புரட்டு

களில் மயங்காமல் நமது வேதவாக்குகளைப் பின்பற்றுங்கள்" என்று கர்ஜித்தார்! பண்டாக்களும் புரோகிதர்களும், பூசாரிகளும், போலிக்குருமாரும், அற்புதப் புரட்டுகளும் அட்டூழியம் செய்யும் இந்த நாடு, தயானந்தரின் சங்கநாதத்தைக் கேட்கவில்லை. இரண்டு வெள்ளைக்காரர் கேட்டனர், வந்தனர். கண்டனர், பிரித்தனர். அவர்கள் யார்?

## 10. ஆல்காட், பிளாவட்ஸ்கி

இன்றுலகில் தியாஸாபிகல் சபை புகழ் பெற்ற ஸ்தாபனம். இதன் மூல புருஷர் பிளாவட்ஸ்கியும் கர்னல் ஆல்காட்டும். பிளாவட்ஸ்கி, ரஷ்ஷியப் பெண்மணி; சுதந்திரக் கனல், குப்த சக்திகளுடைய மாயாவி; வீட்டையும், கணவனையும் உதறியெறிந்து காற்றுடக் கிளம்பியவள். நாவன்மையும், ஆட்களை வசீகரிக்கும் காந்த சக்தியும் பெற்றவள். இந்தியாவிடம் மோகம் கொண்ட இம்மாது, இமாலயத்திலுள்ள மஹாத்மாக்களே தம்மை நடத்துவதாகவும், தம்முள் பேசுவதாகவும் கருதினர். இம்மாது 1874-ல் நியூயார்க்கில் ஆல்காட்டைச் சந்தித்தாள். ஆல்காட் அமெரிக்க வக்கீல், கிறிஸ்துவ மதமும், வெள்ளையரின் உலகாயத வாழ்வும் பிடிக்காமல், புதிய வழி தேடினன். அவன் பிளாவட்ஸ்கியின் மாயா வித்தைகளிலும், இந்திய ஞானத்திலும் ஈடுபட்டான். இருவரும் மனோதத்துவ ஆராய்ச்சி செய்தனர். பிளாவட்ஸ்கி Secret Doctrine "குப்தோபதேசம்" என்ற அதிசய நூலை எழுதினாள். அதில் மஹாத்மா ராமலிங்கத்தின் உள்ளமும் துடிக்கிறது. 7-9-1875-ல், நியூயார்க்கில், ஆல்காட் பிளாவட்ஸ்கியுடன் பதினறு நண்பர் சேர்ந்து, குப்த வித்தை ஆராய்ச்சிக்காக தியஸாபிகல் சங்கம் (பிரமஞான சபை) நாட்டி நடத்தினர். ஆல்காட்டே தலைவர். பிளாவட்ஸ்கி காரியதரிசி. 1877-ல், பிரமஞான சங்கத்தை இந்தியாவுக்கு மாற்ற பிளாவட்ஸ்கி தீர்மானித்தாள். அது நிறைவேற இந்தியப் பிரமுகருடன்கடித வுறவு கொண்டான். பம்பாய் மூல்சந்திற்குத்தான், ஆல்காட் முதற் கடிதம் எழுதினன். மூல் சந்து பம்பாய் ஆரிய சமாஜத் தலைவர். ஹரிச்சந்திர சிந்தாமணியை அறிமுகப்படுத்தி, தயானந்த சரஸ்வதியைப் பற்றியும் மிக விரிவாக எழுதினர்.

18-2-1878; தயானந்தர் நேரில் பேசிக் கொண்டிருந்தபோது, கர்னல் ஆல்காட்டின் நீண்ட கடிதம் வந்தது.

71, பிராட்வே, நியூயார்க்கு

பூஜ்ய பண்டித தயானந்த ஸரஸ்வதி,
இந்தியா, 18-பிப். 1878.

பூஜ்ய குருவே, அமெரிக்கரான நாங்கள், தங்கள் திருவடியில் அமர்ந்து ஞான வொளிபெற விரும்புகிறோம். நாங்கள் பல தொழில் பல நாட்டினராயினும், ஞான சித்தியடையும் விஷயத்தில் ஒன்று பட்டிருக்கிறோம்.

எங்களுக்குக் கிறிஸ்து மதம் திருப்தி யளிக்கவில்லை; சுற்றிலும் போலித்தனமும், பணத்தாசையும், மோசடிகளும், பொய்யும் அசுத்தமும் கண்டு வெறுத்து, நாங்கள் உண்மையொளி பெறக் கிழக்கே திரும்பினோம். நாங்கள் இதற்காகவே இங்கே தியஸாபிகல் சங்கம் நாட்டியிருக்கிறோம். பெற்றோரிடம் குழந்தைகள் வருவது போலவே, நாங்கள் தங்களையே குருவாகக் கருதி ஞானத் தாகம் தணிய வருகிறோம். நாங்கள் பெற்ற ஞானத்தை உலகமெல்லாம் பரப்புவோம். உங்கள் வேதங்களை உண்மையான விளக்கத்துடன் அச்சிட்டு உலகிற்குத் தருவோம். தாங்கள் செய்துவரும் பணியிற் கலந்துதவுவோம். இமயம் முதல் குமரி முனை வரையில் நாங்கள் பிரசாரம் செய்ய விரும்புகிறோம். எங்கள் சங்கத்தின் (corresponding fellow.) உழுவலன்பன் என்ற பட்டத்தைத் தாங்கள் ஏற்றருள்க. தங்கள் அன்பான கடிதத்தை எதிர்பார்க்கிறோம்.

தங்கள் பணிவுள்ள,
ஹென்றி எச். ஆல்காட்
(தியசாபிகல் சங்கத் தலைவர்)

இக் கடிதம் லாகூரில் சுவாமிகளுக்குக் கிடைத்தது. அதற்கு சமஸ்கிருதத்தில் பதிலும், அதன் ஆங்கிலமும் சேர்த்து 21-4-1878ல் ஆல்காட்டிற்கு அனுப்பினர்:

"பாதாள தேசமாகிய, அமெரிக்காவிலுள்ள அறிஞருடன் அளவளாவும் வாய்ப்பை அளித்த, எங்கு முள்ள, எல்லாம் அறிந்த இறைவனை வணங்குகிறேன். கடவுள் ஒன்றே, அதனால் உலக மதமும் ஒன்றே, கடவுளையே வணங்கி அவன் கட்டளையை நிறைவேற்றுவதே அம்மதக் கொள்கை. பொய் மதங்களும், மூடக் கொள்கைகளும் ஒழிந்து, ஆரிய வேத உண்மையை எங்கும் நிலவச் செய்ய, இறைவனை வணங்குகிறேன்." இதுவே கடிதச் சுருக்கம்.

மற்றொரு தடவை தியாசாபிகல் சங்கத்தை, ஆரிய சமாஜின் கிளையாக்கக் கருதினர். சுவாமிகளையே அதன் தலைவராக இருக்க வேண்டினர். 22—5—1878-ல் ஒரு கூட்டம் கூடி, அவ்வாறே செய்தனர். சங்கப் பெயரை ஆரிய சமாஜ் தியஸாபிகல் சங்கம் என்று மாற்றினர், "ஹே குருநாதா எங்களை மாணவராக்க வழி நடத்தும் ஆரிய சமாஜ விதி முறை நியமங்களைச் சொல்லும்; நாங்கள் நடக்கிறோம். கடவுள், ஆத்மா, உலகம், இயற்கைகளைப் பற்றிய தத்துவரகசியங்களை அறிந்து தெளிந்து, அமெரிக்க ஐரோப்பிய நாடுகளுக்குச் சொல்ல விரும்புகிறோம். எங்களுக்கு வெறும் ஆள் வணக்கமும் உரு வணக்கமும் பிடிக்க வில்லை. புத்த மதத்திற் கூடச் சிலை வணக்கம் உள்ளது. நாங்கள் ஆரிய சமாஜிகளாய், அதன் கொள்கையை உலகெல்லாம் பரப்பத் துடி துடிக்கிறோம். வேதக் கருத்தை உபதேசித் தருளுக." இவ்வாறு பல முறை மன்றாடினர் ஆல்காட். சுவாமிகள் வேதக் கொள்கையை விளக்கி வட மொழியில் கடிதம் எழுதி, ஆங்கில மொழி பெயர்ப்புடன் அனுப்பினர். அதன் சுருக்கமாவது :

"வந்தன மெல்லாம் ஒப்புயர்வற்ற கடவுளுக்கே உரியது. அவரே ஞான ஊற்று. கடவுளை மனங்குவிந்து, சித்த சுத்தியுடன், துதி பிரார்த்தனை தியானம் ஆகியவற்றால் உபாசிக்க வேண்டும். சகுண உபாசனையாவது, கடவுளின் தன்மைகளை நினைத்துத் துதித்தல்; எல்லா வுயிர்களுக்கும் இனிதே செய்தல். நிற்குண உபாசனையாவது சர்வாந்தர்யாமியான கடவுளைப் பரம பரிசுத்த ஆனந்தமயமாக உள்ளே உணர்தலாம். 'ஆரியன்' என்றால் மாண்புள்ள, நல்ல பண்புள்ள மனிதன் என்பதாம். ஆரியன் பிரமசரியக் கல்வி கற்று, இல்லறம் புகுந்து, பிறகு பரோபகார சீலனாக வாழ்கிறான். சமாதி யோகத்தால் அவன் தன்னுயிரிற் கலந்த கடவுளை உள்ளார உணர்கிறான். ஆத்ம சைதன்யத்தை அறிந்து திளைக்கிறான். சில மேனாட்டார் இறந்த ஆவிகளைப் படம் பிடித்து வித்தை காட்டுகிறார்கள். இந்தப் பிரேத பூத உபாசனை மண்ணுக்கும் பயனில்லை. யோகப் பயிற்சியினாலே தான் உண்மை விளங்கும். என் ஆரிய தேச ரத்னமாலையை, ஹரிச்சந்திர சிந்தாமணி ஆங்கிலமாக்கி யனுப்புவார். அதில் வேதக் கொள்கைகள் அடங்கும். கடிதங்களால் அதிகப் பயனில்லை. நாம் சந்தித்துப் பேசினாலே எல்லாம் தெளிவாகும். நீங்கள் தீர்மானித்தபடி தியஸாபிகல் சங்கத்தை ஆரிய சமாஜக் கிளையாகவே நடத்தலாம்."

இக் கடிதத்தால் கர்னல் ஆல்காட்டுக்கும் பிளாவட்ஸ்கி அம்மையாருக்கும் சுவாமிகளிடம் அளவற்ற பக்தி யுண்டானது.

சுவாமிகளின் கொள்கைகளை அவர்கள் அப்படியே ஒப்புக் கொண்டு, அவரைத் தரிசிக்கவே 16-2-1879-ல் பம்பாயில் வந்து இறங்கினார்கள். ஹரிச்சந்திர சிந்தாமணி அவர்களை உபசரித்துப் பிரசங்கம் வைத்தார். ஆல்காட்,பிளாவட்ஸ்கி பிரசங்கம் பம்பாயை வசீகரித்தது.

“நாங்கள் பொய் வளரும் மேனாட்டை விட்டு, புனிதமான சத்திய பூமியான இந்தியாவின் ஞானத்தைக் கற்க வந்தோம். இங்கே வெள்ளைப் பாதிரிகள் இருநூறாண்டுகளாக வேலை செய்து, பத்து லக்ஷம் பேர்களை மதமாற்றினர். ஆரிய சமாஜம் அமெரிக்காவில் இலட்சக்கணக்கான கிறிஸ்துவர்களை மாற்றி விட்டது” என்று பேசினர். தயானந்தர் சமர்த்தன் என்பவரை அனுப்பி அவர்களை உபசரித்தார். ஹரித்துவாரத்தில் சுவாமிகளைச் சந்திப்பதாக ஆல்காட் எழுதினார். அப்போது அவருக்கு உடல் நலமில்லை. ஆதலால் ஸஹாரன்பூரில் சந்திப்பு ஏற்பட்டது (1-5-1879). இரண்டு நாள் அளவளாவிய பிறகு தயானந்தர் இருவரையும், உடனழைத்துக் கொண்டு மீரட்டிற்குச் சென்றார். அங்கே ஆரிய சமாஜத்தில் பலமான உபசாரம் நடந்தது. ஆல்காட் பிளாவட்ஸ்கி, தங்களை ஆரியர் என்றே அழைத்துக் கொண்டனர். பொதுக் கூட்டங்களி லெல்லாம் “நாங்கள் அஞ்ஞான இருள் படிந்த மேனாட்டிலிருந்து,ஞானபூமியான இந்தியாவுக்கு வந்து, தயானந்தரின் சீடர்களாய், ஆரியர்களாய் இந்த நாட்டுப் பணிக்கே வாழ்கிறோம். வேதமே எங்கள் வழிகாட்டி” என்று விளம்பினர். சுவாமிகளும் அவர்களை உண்மையான வேத ஆரிய சமாஜிகளாகவே பாராட்டினார். இதன் பிறகு காசியில் ஆல்காட் பிளாவட்ஸ்கி தயானந்தரைச் சந்தித்து, நீண்ட நேரம் அளவளாவினார்கள். ஆல்காட் தமது பிரசங்கங்களி லெல்லாம் சுவாமிகளைப் புகழ்ந்து பேசினார்.

பிறகு ஆல்காட் பிளாவட்ஸ்கி இலங்கை சென்று, அங்கே சில காலம் புத்த மதம் பயின்று திரும்பினர். அவர்கள் மன மாற்றத்தையும் மத மாற்றத்தையும் முகக் குறிப்பால் அறிந்து கொண்டார் தயானந்தர். உடனே அவர்களுக்குத் தெரிவித்து, ஆரிய சமாஜத்தை தியாஸபியிலிருந்து பிரித்து விட்டார்.

நண்பராக வந்த ஆல்காட் பிளாவட்ஸ்கி, எதிரிகளாய் சுவாமிகளைக் குறைகூறத் தொடங்கினார்கள். ஆரிய சமாஜிகள் பலரை தியஸாபிகல் சங்கத்திற் சேர்த்துக் கொண்டனர். “தயானந்தரே நீரும் எமது சங்கத்தில் சேரும்” என்றனர். ஆல்காட் சிம்லாவில்

வைஸ்ராயைக் கண்டு, பெரிய பெரிய உத்தியோகஸ்தர்களின் சலுகையும் பெற்றுக் கொண்டு இந்தியாவில் தமது சங்கத்திற்குப் பலமான ஆதரவு தேடிக் கொண்டனர். அவர்கள் மீரட்டிற்கு வந்ததும், ஆரிய சமாஜத்திற்கு எதிர் செய்யத் தொடங்கினர். "எங்களுக்குக் கடவுளிடம் நம்பிக்கை யில்லை; நாங்கள் பௌத்தர்கள்" என்று வெளிப்படையாகச் சொன்னார்கள். அவர்களுடைய ஆங்கிலப் பேச்சும், பிளாவட்ஸ்கியின் குப்த வித்தைகளும், அதிசயச் செயல்களும் இந்தியரை வசீகரித்தன. அவள் தன்னை மனித சமுதாயத்தின் தீர்க்கதரிசியாகவும், மார்க்க தரிசியாகவும் கருதி நடந்தாள். அவள் படத்தை வைத்துக் கும்பிட்டு "அம்மா பரதேவி" என்று காலில் விழுந்தவர் பலர். தயானந்தர் வாதுக் கழைத்தும் வரவில்லை. "தியாசபியில் எல்லாரும் சேரலாம்; அவரவர் மதத்தையும் அனுஷ்டிக்கலாம். எல்லோரும் இங்கே சகோதரர்கள்—இந்தியர், கிறிஸ்துவர், இஸ்லாமியர், பௌத்தர் அனைவரும், ஆரிய சமாஜம் வேதத்தையே ஆதரிக்கிறது. பிற மதங்களைத் தூற்றுகிறது; அதனால் அது எல்லாரும் சேர லாயக்கில்லை; நீர் எங்களுடன் சேர்ந்து நண்பரா யிருப்பீரா, அலலது எங்களுக்கு எதிரியாவீரா? இரண்டில் ஒன்று சொல்லும்" என்று பிளாவட்ஸ்கி எழுதி விட்டு, சேதிலால் என்பரை தயானந்தரிடம் மொழி பெயர்த்தனுப்பச் செய்தாள். லாகூரிலும், காசியிலும் அவளுக்கு வலுத்த ஆதரவு கிடைத்தது. ஆங்கிலம் படித்த இந்திய உத்தியோகஸ்தர் சலுகையை அவள் அபரிமிதமாகப் பெற்றாள். மீரட்டில் "நாம் பௌத்தர்" என்றவள், இப்போது "நாம் கடவுளை நம்புகிறோம். ஆனால்" என்று பீடிகை போட்டாள். இந்தியரின் உள்ளத்தைத் தொடும் திறமை அவளுக்கு இருந்தது; அத்துடன் மாய வித்தைகளும் சேர்ந்து அவளுக்கு வெற்றி மேல் வெற்றி யளித்தது. சுவாமிகள் 30-12-1881-ல் பம்பாயிக்கு வந்தார். அவரை வண்டி நிலையத்தில் வரவேற்றவருள் ஆல்காட்டும் பிளாவட்ஸ்கியும் இருந்தனர். எப்படியாவது இந்த வேத ஜோதியின் நட்புறவைப் பெறவே அவர்கள் முயன்றனர். சுவாமிகள் "உங்களுடன் வாதாடவே வந்திருக்கிறேன். உண்மையை அறிவோம் வாருங்கள்" என்று அழைத்தார். இரண்டு மாதம் ஆல்காட் தாக்காட்டினார். பிறகு சுவாமிகள் இரண்டு அறிஞரை அனுப்பி "கடவுள் நம்பிக்கையைப் பற்றி விவாதிக்க வேண்டும். உங்கள் அந்தரங்கத்தை உள்ளபடி சொல்ல வேண்டும். இன்றேல் நானே உங்கள் குட்டை உடைப்பேன்" என்றார்.

ஆல்காட் "மார்ச்சு 17-உ விவாதம் நடத்தலாம்" என்று சொன்னார். இன்னும் வேறு சாக்குப் போக்குச் சொல்லித் தப்பினார். முதலில் சுவாமிகள் "மீரட்டில்; நாங்கள் பௌத்தர்; எங்களுக்குக் கடவுள் நம்பிக்கை இல்லை என்றீர்கள். உங்கள் சங்கமோ தியாஸபி; பிரம்ம ஞான சங்கம். நீங்கள் கடவுளை ஒப்பா விட்டால், நான் உங்களை ஒப்ப முடியாது. உங்கள் அந்தரங்கத்தை பகிரங்கமாக்குவேன். உடனே என்னிடம் வந்து விவாதியுங்கள்" என்று சவால் விட்டார். ஆல்காட் வேறு ஊருக்குப் போய்விட்டார். பிளாவட்ஸ்கி "இவருடன் விவாதித்துக் கொண்டிருக்க நேரமில்லை" என்று சொல்லி விட்டாள். "அம்மையே கடவுளைப் பற்றி உன் கொள்கைத் தெளிவாக்க மூன்று நாள் அவகாசம். தவறினால் கௌஸ்ஜீ ஹாலில் கண்டனக் கூட்டம் போடுவேன்" என்று இறுதியாக எழுதினார். அதற்கும் பதிலில்லை.

28-3-1882-ல் மாலை ஆறு மணிக்கு, தயானந்தர் சொன்னபடியே, கௌஸ்ஜீ ஹாலில் பெரிய கூட்டம் நடந்தது. தயானந்தர் ஆல்காட்டிற்கும் தமக்கும் நடந்த கடிதப் போக்கு வரத்துகளையெல்லாம் தெளிவாக்கி, "இவர்கள் முதலில் கடவுளையும் வேதத்தையும் நம்புவதாகச் சொன்னார்கள். அதனால் நானும் அவர்களுடன் உறவு கொண்டேன். பிறகு புத்தராகி கடவுளிடம் நம்பிக்கையில்லை என்றார்கள். தியாஸபி பத்திரிகையில், பூத பிரேத பிசாசு வேலைகளைப் பற்றியும், மாய வித்தையைப் பற்றியும் எழுதுகிறார்கள். இவற்றில் எனக்கு நம்பிக்கை யில்லை. இவர்கள் எந்தச் சமயத்தாருடன் பேசுகிறார்களோ அந்தச் சமயத்தை, சமயத்திற்கேற்றபடி புகழ்ந்து, ஆதரவு தேடும் சந்தர்ப்பவாதிகளா யிருக்கிறார்கள்" என்றெல்லாம் வெளுத்து வாங்கினார். மறு நாளே "கோல்மால் போல்பால்-தியாஸபி-மோசடி" என்ற துண்டுப் பிரசுரத்தைப் பரப்பினார். "அவர்கள் முதலில் என்னைத் தலைவராக்கி வேலை செய்யக் கருதினார்கள். நான் ஒப்ப வில்லை. பிறகு குதூமி என்ற குருவைச் சிருஷ்டி செய்தனர். அவரை யாரும் கண்டதில்லை. அந்த குருவே தங்களுடன் வந்து பேசி, அற்புதம் செய்வதாகச் சொல்லுகிறார்கள். அவர்கள் பிரசங்கம் செய்யும் போது,பூக்களும் கடிதங்களும் வந்து குதிக்கின்றன. மேஜை ஆடுகிறது. மாய வித்தை நடக்கிறது. கெட்டுப் போன பொருள்கள் அகப்படுகின்றன. எல்லாம் சரிதான். அவர்கள் முதலில் பம்பாயிக்கு வந்ததும், அவர்கள் துணிமணிகள் சில களவு போயின. அவற்றை மாய வித்தையால் கண்டு பிடித்திருக்கலாமே! அவர்கள் ஏன் போலீசுக்கு ஓடினார்கள்? தங்கள் சாமான்களையே திருட்டினின்

றும் மீட்க முடியாதவர்கள் பிறர் பொருளை மீட்பது என்ன மாயம்? அவர்கள் யோகம் பயில்வதாகச் சொன்னார்கள். சோதித்தேன். ஒன்று மில்லை; எல்லாம் மயக்கு வேலை! அவர்கள் கடவுளை நம்ப வில்லை. அதுவே அவர்களுக்கும் யோகத்திற்கும் வெகு தூரம் என்பதை வெட்ட வெளிச்சமாக்கும். ஆதலால் அவர்களை ஒதுக்கி வாழ்வதே சிறந்தது.'' இதற்கு தியாஸஃபிஸ்டில், பிளாவட்ஸ்கி கடுமையான பதில் எழுதினாள். அதை ஒரு விசேஷ அனுபந்தமாகவே வெளியிட்டாள். இமாலய மஹாத்மாக்கள், சுவாமிகள் சாதாரணமான மனிதர் என்றே தமக்குச் சொல்வதாகக் குறித்தார். மனத்தாங்கலால் எத்தனையோ பிரசாரங்கள் நடந்தன. அவற்றை மறப்போம். மாதாம் பிளாவட்ஸ்கி உள்ளத்தில், தயானந்தரைப் பற்றிப் பெரு மதிப்பு வைத்திருந்தாள். அவர் இறந்த அன்று "இன்று இந்தியா ஒரு பெரிய மஹாத்மாவை இழந்து விட்டது. பண்டித தயானந்த சரஸ்வதி இறந்தார். எனினும் அவர் ஆவி இறக்க வில்லை. எங்கள் வேறுபாடுகளெல்லாம் அவர் உடலை எரியிட்டதுடன் தீர்ந்து விட்டன. எமது ஆதி நண்பரும் குருவும் பிறகு எதிரியுமான தயானந்தரின் பெருந்தன்மைகளை மறவோம்" என்று தியாசபிஸ்டில் மாதாம் பிளாவட்ஸ்கி எழுதினாள்.

இதன் பிறகு கர்னல் ஆல்காட், ஏதோ சில வரிகள் எழுதினார். மற்றப்படி இரண்டு சங்கங்களும் அததன் கொள்கைபடி அமைதியாகவே வேலை செய்தன. ஆரிய சமாஜம் தியாசபி சங்கத்திற்கு எதிர் செய்ததே கிடையாது. தியாசாபி சங்கம் (பிரம ஞான சபை) பிளாவட்ஸ்கி தலைமையிலும் அனிபெஸண்டு தலைமையிலும் உலகளாவிய மஹா சங்கமாக வளர்ந்தது. இந்திய ஞானத்தை அது உலகெங்கும் பரப்பியது. இந்தியருக்கே பழைய ரிஷி ஞானத்தையும் புதிய விஞ்ஞானக் கலையையும் சேர்த்து அளித்த பெருமை பிரம்ம ஞான சபையைச் சேரும். பகவத் கீதையையும், காயத்திரியையும், ஸநாதன தர்மத்தையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து, உலக மெல்லாம் போற்றச் செய்த இச் சபையை நாம் மறக்க முடியாது.

எனக்குப் பூணூல் போட்டார்கள்; உபாத்தியாயரிடம் மந்திரங்களுக்கு அர்த்தம் கேட்டேன். "போடா அதிகப் பிரசங்கி" என்றார். காரணம் அர்த்தம் அவருக்கே தெரியாது. சும்மா கிராம போன் போல், பாடம் பண்ணின மந்திரங்களை ஒப்புவிப்பது தவிர வேறு தெரியாது. ஒரு நாள் எங்கள் ஊருக்கு அனிபெ

ஸண்டம்மை வந்தாள். ஸநாதன தர்மத்தையும் பகவத் கீதையையும் பற்றி அற்புதமாகப் பேசினாள். எல்லாரையும் சந்தி ஜபம் சரியாய்ப் பண்ணச் செய்தாள், அப்போது மதுரை பி. நாராயணய்யர் வந்திருந்தார். தீவிரமான பிரம்ம ஞானி. அவரிடம் நான் சந்தியா உபாசனைக்குப் பொருள் கேட்டேன். அவர் மிக்க மகிழ்ச்சியுடன் எனக்கு விளங்கும்படி சொல்லி, தமிழில் உரையுடன் ஒரு சந்தியாவந்தன புத்தகமும் தந்தார். முறைப்படி சந்தி மந்திரங்களை ஜபிக்கவும் சொல்லித் தந்தார். அதனால் நான் பெரும் பயன் பெற்றேன். பகவத் கீதை என்ற அற்புத நூலை எனக்கு அறிமுகப் படுத்தியதும் பிரம ஞான சபை தான். எங்கள் ஊரில் பிரம ஞான சபை எழுந்ததும், ஏராளமான உத்தியோகஸ்தர்கள் அதிற் சேர்ந்து, சந்தி ஜபம், பாராயணங்கள் செய்யத் தொடங்கினார்கள். பிரம ஞான சபைக் கல்விக்கும் கலைக்கும் அரிய தொண்டு செய்திருக்கிறது. எல்லா மதங்களும் கூடி வாழும் ஒரு சமரஸ நிலையமாக அது விளங்குகிறது. ஆதலால் மேற் சொன்ன சம்பவங்கள் ஏதோ மனித வியல்பினால் இடையே புகுந்த சச்சரவுகள். நான் பெஸண்டம்மையுடன் அளவளாவியதுண்டு; அவர் கடவுள் நம்பிக்கையில் உறுதி கொண்டவர். ஆதலால் ஏதோ ஒரு காலம் நடந்ததைக் கொண்டு நாம் மனம் வேறு படாமல், பிரம்ம ஞான சங்கம் செய்துள்ள அரிய சேவைகளை நினைப்போம்.

பிரம்ம ஞான சபையிலிருந்து தனிப்பட்டிருந்த ஆரிய சமாஜம் செய்த வேதத் தொண்டையும் கல்விப் பணிகளையும், சமுதாய சேவைகளையும், தேச சேவைகளையும் பாராட்டுவோம். முதன்மையாக கர்னல் ஆல்காட் வற்புறுத்தியே, தயானந்தர் தற் சரிதை ஒரு பங்கு நமக்குக் கிடைத்தது. அது தியாஸபிஸ்டில் வெளியானதே.

## 11. மின்வெட்டுகள்.

### (அ). லேக்ராம்

சுவாமிஜீ வாழ்க்கை ஒவ்வொரு நாளும் சோதனையும் சம்பவமும் நிரம்பியது. அவர் சென்ற ஊர்களிலெல்லாம் வேதக் கொடி நாட்டி, ஆரிய ஸமாஜத்திற்கு ஆக்கந் தேடினார். எதிர்ப்புகளும் பலமாக வந்தன. ஆதரவும் இருந்தது. இக் காலம் நடந்த சில சம்பவங்களை இங்கே மின் வெட்டாகக் குறிப்போம் :—

சுவாமிகள் மூன்றாவது முறையாக ராஜபுதனம் சென்று வேத தர்மத்தை கர்ஜித்தார். ஆஜ்மீரில் சுவாமிகள் இருபத்து நான்கு

சொற்பொழிவுகளாற்றினர். அவற்றைக் கேட்ட லேக்ராம் என்னும் பெஷாவர் அறிஞர், தயானந்தரைக் கண்டு சில கேள்விகள் கேட்டார். "பிரம்மம் எல்லையற்ற பொருள்; ஜீவன் அதற்கு நிகராகாது, இரண்டும் வெவ்வேறு, வேத தர்மமே தர்மம்; அதை எல்லாரும் அனுஷ்டிக்க வேண்டும். பிற மதம் புகுந்தவரை அவசியம் சுத்தி செய்து வேத தருமத்திற் சேர்க்க வேண்டும்" என்று சொன்னர். லேக்ராம் மிக்க மகிழ்ச்சி உவடந்து, ஆரிய சமாஜக் கொள்கையைப் பின் பற்றினர். இவரே பிற்காலம் சுவாமி தயானந்தரின் வரலாற்றை அழகாக உருது லிபியில் எழுதினர்.

* * *

## (ஆ). பகை-வாள்

ஒரு தரம் தயானந்தர் வெளிச்ஜுப் போய்க் கொண்டிருந்த போது, அவரை வெட்டுவதற்காக ஒருவன் பின்னல் வந்து கத்தியை ஓங்கினன். "ஐயா, நான் கால் கழுவிக் கொண்ட பிறகு என்னை வெட்டுங்கள்" என்று தயானந்தர் சொன்னர். அப்படியே கால் கழுவி, சில வேத மந்திரங்களை உச்சரித்த பிறகு, தயானந்தர் கழுத்தை நீட்டினர். ஆனல் அந்த ஆள் கத்தியை ஓங்குவதற்குச் சக்தியில்லாமல் "சுவாமி, என்னை மன்னிக்க வேண்டும்" என்று வணங்கி ஓடிப் போய் விட்டான்.

* * *

## (இ). என்னைப் பிடிக்க முடியாது

ஆஜ்மீரில் பாக்ராம் வீட்டில் தயானந்தர் ஹிந்து முஸ்லிம் மதங்களைப் பற்றி விவாதம் நடத்தினர். இரண்டு மதத்தினரும் தற்புகழ்ந்து கொண்டு சண்டையிட்டனர். சுவாமிஜி "பண்டிதர்கள், உங்கள் குடுமியைப் பிடித்து உலுக்குவேன்; சாயபு, உங்கள் தாடியைப் பிடித்து உலுக்குவேன்; எனக்குக் குடுமி தாடி இரண்டும் கிடையாது. என்னை நீங்கள் ஒன்றும் செய்ய முடியாது" என்று சொல்லிச் சிரித்தார். எல்லாரும் இந்த நகைச் சுவையை வியந்து, சமாதானமாகப் போனர்கள்.

* * *

## (ஈ). பாதிரி மகிழ்ந்தார்

மசூதாவில் சுவாமிகள் பைபிளைப் பற்றி அரிய பிரசங்கங்கள் செய்து, வேதத்தின் உயர்வை விளக்கினர். ஷூல் பிரட்

என்ற பாதிரி, சுவாமிகள் பிரசங்கத்தை மிகவும் வியந்து சில கேள்விகள் கேட்டார். அவற்றுள் ஒன்றாவது :

"சுவாமி! உலகத்தில் உள்ள பாவங்களுக்குக் காரணம் என்ன?

சுவாமி : காமம், குரோதம், லோபம் இவையே காரணம்

பாதிரி : உலகத்தில் பாவம் அதிகமாகச் செய்கிறவர்கள் யார்?

சுவாமி : (சிரித்துக் கொண்டே) கிராணி, கொராணி, புராணி, ஜெயினி.

பாதிரி : இதை விளக்க வேண்டும்.

சுவாமி : கிராணி பைபிள் படிக்கிறவர். ஆதாம் ஈவின் பாவம் மனிதனைத் தொடர்ந்து வருவதாக நினைக்கிறான்; இராத்திரி செய்த பாவம் காலை வணக்கத்தால் போய்விடுகிற தென்று நம்புகிறான். கொராணி 'தொபாஹ்' என்றால் சிறிய பாவங்களும், 'பிஸ்மில்லா ஹிற்றஹ்மான்' என்றால், பெரிய பாவங்களும் போய் விடும் என்று நினைக்கிறான். புராணியானவன் மற்ற இடங்களில் பண்ணின பாவம் காசியில் போய் விடுகிறது. காசியில் பண்ணின பாவம் பஞ்ச கோச யாத்திரை செய்தால் போய் விடுகிற தென்று நினைக்கிறான். ஜெயினர்கள், பஞ்ச நமஸ்காரம் சொல்லுவதால் பாவம் போய் விட்டது என்று நினைக்கிறார்கள். இந்தமாதிரி மூடக் கொள்கைகளைப் பரப்பி, புரோகிதர்களும் போப்புகளும் பண மடிக்கிறார்கள்.

பாதிரி : இந்த நான்கு பேருக்குள் தாங்கள் எந்த வகையைச் சேர்ந்தவர்கள்?

சுவாமி : நான் ஒரு வகையிலும் சேர்ந்தவனில்லை; நான் வேத உண்மையே பின்பற்றுகிறவன்.

பாதிரி : வேதம் வேதம் என்று சொல்லிக் கொண்டு, சிலர் ஆட்டையும், மாட்டையும், குதிரையையும் அறுத்து யாகம் பண்ணுவது பாவமில்லையா?

சுவாமி : வேதத்தில் இதற்கு ஆதாரமே கிடையாது. எந்த ஜீவஹிம்சையும் வேதத்திற்குச் சம்மதமில்லை. தன்னைப் போலவே எல்லா உயிர்களையும் கருத வேண்டும் என்று வேதம் வற்புறுத்துகிறது.

இதன் பிறகு சுவாமிகள் வேதத்தின் கொள்கைகளை விளக்கினார்.

பாதிரி :—" இன்றுதான் வேத உண்மையை அறிந்தேன்" என்று சொல்லி மகிழ்ச்சியுடன் விடை பெற்றுக்கொண்டார்.

* * *

## (உ). வாயில் துணி கட்டும்

ஒருநாள் தயானந்தர் சோஹங்கிரி பங்களாவில் தங்கினார். அங்கே சித்தாகரபிண்ஜீ என்ற ஜைனசந்நியாசியும் தங்கியிருந்தார். ஒருநாள் தயானந்தர் வெளியில் உலாவி வந்தபோது, " நீர் யார்? எந்த ஊர்?" என்று ஜைன ஸாது கேட்டார். சுவாமிகள், "நான் தயானந்தன்; ஆஜ்மீரிலிருந்து வருகிறேன். நீர்?"

ஜைன சாது : நான் சித்தாகரணன். சார்வாரிலிருந்து வருகிறேன்.

சுவாமிகள் : உம்மைத்தான் ஜைனர்கள் அனுப்பினார்களோ?

ஜைன சாது : ஆம்; உமது தொந்தி மடா மாதிரி இருக்கிறது. தோசைக் கல்லை வைத்துக் கட்டிக் கொள்ளுங்கள். இல்லா விட்டால் வயிறு வெடித்துப் போகும். உமக்கு ஞான அஜீரணம்.

சுவாமிகள் : உமக்கு ஞான ஜீரணமானால், கொஞ்சம் வாதாடலாம் வாருங்களேன்?

சாது : என் ஜாகைக்கு வந்தால் வாதாடலாம். அங்கே பல ஜைன சாதுக்கள் இருக்கிறார்கள். ஆனால் நீர் என்னைப் போல் வாயில் துணி கட்டிக் கொள்ள வேண்டும். வெந்நீரே குடிக்க வேண்டும்; இல்லாவிட்டால் உமக்குப் பதில் சொல்ல மாட்டேன்.

இச்சமயம் மசோதா ராவ்சாகிப் அங்கே வந்து " நடக்கட்டும் பேச்சு" என்றார். சாது, விருட்டென்று சென்று விட்டார் மறுநாள் தயானந்தர் அவரை வாதுக்கு இழுத்தார். " நீர் வாயில் துணியைக் கட்டிக் கொண்டாலொழிய உம்மோடு பேச மாட்டேன்" என்று சொல்லி விட்டார் சாது. தயானந்தர், " சாதுஜீ, நாம் வாதாடுவோம். நான் தோற்றால் துணியைக் கட்டிக் கொள்ளுகிறேன்; நீர் தோற்றால் துணியை அவிழ்த்து விடவேண்டும்" என்று எழுதி யனுப்பினார். " அது முடியவே முடியாது" என்று சாது பிடிவாதங் கொண்டார். சுவாமிஜீ " நீர் என் முகத்தில் விழிக்க வேண்டியதில்லை. பதிலை எழுதி யனுப்பலாம்" என்று மூன்று கேள்விகள் விடுத்தார் : (1) நீர் என்

வாயில் துணியைக் கட்டிக் கொண்டிருக்கிறீர்? அப்படிக் கட்டு வதால் வாயில் சூடேறி அதிலிருக்கும் உயிர்கள் சாகின்றன. மூக்கு வழியாக சுவாசம் தீவிரமாக வந்து, பூச்சிகளைக் கொல்லு கிறது. வாயும் நாற்றமடிக்கிறது. பேச்சுத் தடுமாறுகிறது. சாது, "வாய் திறந்திருந்தால் எச்சில் தெறிக்கும்; நீர் வாயைத் திறந்து கொண்டே வேதம் படித்தால் வேதப் புத்தகத்தில் எச்சில் தெறிக் குமே. வாயைக் கட்டிக் கொண்டிருந்தால் குளுமையா யிருக் கும்" என்றார்.

சுவாமிகள் இதை மறுத்து, "ஒரு கெட்டிலை ஆவி வெளியே ருது மூடி வைத்திருந்தால் சூடு கொதிப் பேறுகிறது. அதே மாதிரி துணி கட்டுவதால் வாய் சூடேறி அதிகப் பூச்சிகளைக் கொல்லு கின்றன. வேதம் என்பது ஏடில்லை, உண்மை; அதில் எச்சில் தெறிக் காது. நேற்று என் வாயில் துணியில்லாத போது நீர் ஏன் என் னோடு பேசினீர்?" என்று வினவினர். (2) "நீர் வெந்நீரே சாப் பிடுவது ஏன்? பச்சைத் தண்ணீர் சாப்பிட்டால் அதிலிருக்கும் பூச்சிகள் சாகும் என்கிறீர். தண்ணீரைக் கொதிக்க வைத்தால் அதே பூச்சிகள் இறந்து பிணமாகின்றன. பூச்சிப் பிணங்கள் ஊறிய தண்ணீரையா சாப்பிடுவீர்? (3) ஒரு துளி நீரில் கணக் கற்ற பூச்சிகள் சாகின்றன. தீ மூட்டினால் பூச்சிகள் சாகின்றன. மூச்சு விட்டாலும் பூச்சிகள் சாகின்றன. நீரும், தீயும், காற்று மில்லாமல் நீர் வாழுவீரா? சாது இவற்றிற்குப் பதிற் சொல்ல முடியாமல் துணியை இறுக்கிக் கட்டிக் கொண்டார்.

* * *

## (ஊ). கடுகளவு நம்பிக்கை

பிஹாரிலால் என்பவன், ஷூஹல் பிரட்டிடம் ஞானஸ்நானம் பெற்று கிறிஸ்தவனானான். தயானந்தர் அவனுக்கு வேத தருமத் தை உபதேசித்தார். தயானந்தரின் வழியைப் பின் பற்றிய ராவ்சாகிப் "ஐயா, பிஹாரிலால்! ஏசுநாதர், கடுகளவு நம்பிக்கை யிருந்தாலும் ஒரு மலையை அசைக்கலாம் என்று சொல்லுகிறாரே; உமக்கு ஏசுவினிடம் அபாரமான நம்பிக்கை யுண்டே; இந்த சோஹங்கிரியை உலுக்கிப் பாருமே உமது நம்பிக் கையால்" என்று சொன்னார். பிஹாரிலால் "பாதிரியைக் கேட் டுப் பதில் சொல்லுகிறேன்" என்றார். பதில் மட்டும் வரவில்லை.

* * *

## (எ). நான் ஒரே இடத்தில் தங்கமாட்டேன்

சுவாமிகள் ஒருதரம் ராஜ நீதியைப் பற்றி அருமையாகப் பேசினார். ராவ்சாகிப், "தாங்கள் இங்கேயே என்னிடமே இருங்கள். தங்கள் கொள்கைகளை யெல்லாம் நான் நிறைவேற்றுகிறேன்" என்று சொன்னார். சுவாமிகள் "நான் துறவி; எந்த இடத்திலும் பற்று வைக்க மாட்டேன்," என்று சொல்லி, உடனே புறப்பட்டு விட்டார். ராவ்சாகிப், வேத பாஷ்யத்திற்காக நானூறு ரூபா தந்து, பெரிய பூ மாலை சூட்டினார். தயானந்தரும் அவருக்குப் பூ மாலை சூட்டினார். ராவ் சாகிப் ஐந்து மைல் சென்று அவரை வழியனுப்பி உபசாரங் கூறித் திரும்பினார். நான் வேண்டுவது, கும்பிடும் தோத்திரமும் அன்று. நீங்கள் வேத வுண்மையை அறிந்து பின்பற்றினால், அதுவே போதும் என்று தயானந்தர் முன்னே நடந்தார்.

* * *

## (ஏ). காஜி எலாஹி பக்ஷ்

ரெய்ல்பூரில் சுவாமிஜி, டாகூர் ஹரிசிங் வீட்டில் தங்கினார். அவருடைய மந்திரி எலாஹி பக்ஷ். சுவாமிகள், ரகசியமாக "ஆரிய அரசர்கள் ஆரிய மந்திரிகளையே வைத்துக் கொள்ள வேண்டும்" என்றார். இது முஸ்லிம்களுக்குக் கொதிப்பை உண்டாக்கியது. அவர்கள் சுவாமியை நன்றாக அடித்து விரட்ட வேண்டும் என்று சதியாலோசனை செய்தார்கள். ஈதுல் நாளில் சுவாமிகள் காலையில் உலாவி வந்தபோது, ஒரு முசல்மான் கூட்டம் அவரை நோக்கி வந்தது. சுவாமிகள் விஷயத்தை அறிந்தார். அனைவரையும் அமைதியாக அழைத்து, அமர்த்தி அவர்கள் கேள்விகளுக் கெல்லாம் பதில் சொன்னார். "இந்துக்கள் கல்லையும் மண்ணையும் தொழும் அநாகரிகர்கள்" என்று காஜி எலாஹி பக்ஷ் சொன்னார். தயானந்தர், "அப்படி வேதம் சொல்லவே இல்லை; வேதத்தை மறந்த சில மூடர்கள் உரு வணக்கம் செய்கிறார்கள்" என்றார். இன்னும் சில கேள்விகளுக்கு சுவாமிகள் கொரானிலிருந்து பதில் சொன்னார். முக்கியமாக, இப்ரஹீம், சாராவின் அடிமையான் இஸ்மேலுக்கும் அஜிராவுக்கும், பிறந்தார் என்பதை விளக்கினார், அச்சமயம் சுவாமிகள் கொரானைத் தரையில் வைத்தார். "ஆ ஹா ஹா, எங்கள் வேதத்தைத் தரையில் வைக்கலாமா? அதுவும் தங்கள் காலடியில் வைத்து விட்டீர்களே" என்று காஜி சீறினார் "காஜியாரே, காகிதம் எப்படிச் செய்கிறார்கள்; மை எப்படிச் செய்கிறார்கள்? பேனா எப்படிச் செய்கிறார்கள்? புத்தகம் எப்படி

அச்சிடுகிறார்கள். அச்சியந்திரத்தைக் காலால் மிதித்துத்தானே கொரானை அச்சிடுகிறார்கள். அதற்கு என்ன சொல்லுகிறீர்?'' என்று சுவாமிகள் சொன்னதும் காஜி கப்சுப் ஆகிவிட்டார்.

* * *

## (ஐ). துக்கம் கேட்கமாட்டேன்

ஒருநாள் ஜெய்பூர் தாகூர் சாகிபின் மனைவி இறந்து போனாள். எல்லாரும் துக்கம் கேட்கக் கூட்டம் கூட்டமாகப் போனார்கள். சுவாமிகள் அந்தப் பக்கமே தலைகாட்டவில்லை. தாகூர் தன் மனம் சாந்தம் அடைய புரோகிதரிடம் கருட புராணம் கேட்டார். அதற்குப் பிரமுகர்களெல்லாம் வந்தனர். சுவாமிகள் '' இதென்ன கூத்து?'' என்று சும்மா விருந்தார். சில பிரமுகர்கள் தாக்கூரை துக்கம் விசாரிக்கச் செல்லவேண்டும்; இல்லா விட்டால் நன்றாயிராது என்று வற்புறுத்தினார்கள். சிலர் தாகூருக்கு ஆறுதல் கூறச் சொன்னார்கள். சுவாமிகள் '' அவருக்குக் கருட புராணம் இருக்கிறது. எனக்கு உலகுடன் என்ன சம்பந்தம்? பிறப்பும் இறப்பும் எனக்கு ஒன்றே. வேத தருமத்தை உபதேசிக்கவே நான் உலகத்துடன் உறவு கொண்டுள்ளேன். நான் துக்கமும் விசாரிக்க மாட்டேன்; சுகமும் விசாரிக்க மாட்டேன்'' என்று சொல்லி விட்டார். மறுநாளே ஊரை விட்டுக் கிளம்பி விட்டார். தாகூர் தன் மந்திரியை விட்டு சுவாமிகளை வழியனுப்பினார்.

* * *

## (ஒ). குருவின் எச்சில்

ஒரு தரம் கபீர் பந்தைச் சேர்ந்த ஒரு சாது, தயானந்தரிடம் வந்து வாதாடினார். சாது, '' சுவாமிஜீ! கபீர் கீர்த்தனங்களையே வேதமாகப் படிக்க வேண்டும்.''

**சுவாமிகள் :** கபீர் எத்தனை கீர்த்தனைப் புத்தகங்கள் எழுதியிருக்கிறார்?

**சாது :** இருபத்தி நான்கு கோடி கிரந்தங்கள் எழுதியிருக்கிறார்.

**சுவாமிகள் :** முழுப்பொய். இத்தனை கிரந்தங்களும் வைக்க இடம் எங்கேயிருக்கிறது.

**சாது :** கலியுகத்தில் நம்ப மாட்டார்கள் என்றுதான் அத்தனையும் மறைந்து போயின. சில பாடல்களே மிஞ்சின.

பஜனையும் குருவின் உச்சிஷ்டமும் மோக்ஷம் தருவன.

சுவாமிகள்: குரு சாப்பிட்ட எச்சிலை நீங்கள் சாப்பிடுகிறீர்களா? ஒருவன் பல்லில் வைத்துக் கடித்ததை இன்னொருவன் சாப்பிடுவது சுகாதாரத்திற்குக் கெடுதல் அல்லவா?

சாது: ஆ ஹா ஹா! அபசாரம் பண்ணி விட்டீர்கள். அயோனிஜரான கபீரின் பிரசாதம் கொடுத்து வைக்க வேண்டுமே?

சுவாமிகள்: கபீர் எப்படிப் பிறந்தார்; தெரியுமா?

சாது: அபசாரம், அபசாரம். அவர் பிறக்கவே இல்லை. அப்படியே அவதரித்தார்.

சுவாமிகள்: கபீர் ஒரு அம்மா வயிற்றில் பிறந்தார். அவள் குழந்தையைக் கைவிட்டுச் சென்றாள். ஒரு முஸ்லிம் நேசவியர் குழந்தையை எடுத்து வளர்த்தார் என்று கதை இருக்கிறதே. நீர் எப்படி கபீரை அயோனிஜர் என்கிறீர்? பதிலில்லை.

* * *

## (௭). ஜீவனும், பரமாத்மாவும்

சுவாமிகள் மீவாரைச் சேர்ந்த பனோராவில் ராஜா கோவிந்த சிங்கின் உபசரணையில் இருந்தார். இவர் நன்றாகப் படித்தவர். சுவாமிகளைக் கிண்டிக் கிண்டிக் கேள்விகள் கேட்டார். இவர் வேதாந்தி, ஜீவனும் பரமனும் ஒன்றென நம்பினவர். கீதையில் க்ஷர—அக்ஷர—பரமாக்ஷர—ப்ரகிருதி—புருஷ—புருஷோத்தம தத்துவங்களைப் பற்றிச் சொல்லியிருப்பதைக் குறித்தார். சுவாமிகள் "நான் வேதத்தையே ஆதாரமாகக் கொள்கிறேன்" என்றார். மறுநாள் ராஜாஸாஹெப் தனது பண்டிதருடன் யஜுர் வேதம் மஹீதரபாஷ்யத்தைத் தூக்கிக் கொண்டு வந்தார். அதில் உள்ள ஸம்ஸ்கார விதிகளை வற்புறுத்தினார். பண்டிதர் சிரார்த்தம் சடங்குகள் எல்லாம் வேத தர்மம் என்று பிடிவாதம் புரிந்தார். சுவாமிகள் மஹீதர பாஷ்யத்தைக் கண்டித்து, வேதத்தின் மூலத்தைத் தெளிவாக விளக்கினார். ருக் வேதம், யஜுர் வேதம், சாம வேதம் மூன்றோடும் அதர்வண வேதத்தையும் ஆதாரமாகக் காட்டி, ஜீவன் சிற்றறிவன்; பரமாத்மா முற்றறிவன்; ஒன்று மற்றொன்றாகாது என்று விளக்கினார். குறுகிய இடமுள்ள ஒரு வீடு அகண்ட உலகிற்குச் சமானமாகாது என்றதையும் குறித்தார்.

* * *

## (ஔ). பட்டம்

சித்தூர் மஹாராணா சஜ்ஜன் சிங்கிற்கு G. C. S. I. பட்டம் தர சர்க்கார் முன் வந்தது. இது நட்சத்திரப் பட்டம். சூரிய குலத்தில் பிறந்த எனக்கு இந்த நட்சத்திரம் தேவை இல்லை என்று சொல்லிவிட்டார் சஜ்ஜன் சிங். அடிமைப் பட்டம் அவருக்குப் பிடிக்கவில்லை. வைஸ்ராய் "உங்களைச் சரிசமானமாக மதித்தே பட்டந் தருகிறோம். பெற்றுக் கொள்ளவேண்டும்" என்றார். தாட்சிண்யத்திற்காக வைஸ்ராயே நேரே வந்தால் பெற்றுக் கொள்வதாக ராணா பதில் அளித்தார். வைஸ்ராய் அவ்வாறே சம் மதித்து சித்தூருக்கு வந்து சேர்ந்தார். பட்டத் திருவிழாவிற்குப் பல ஆடம்பரங்கள் தளுக்கி மினுக்கின. இச்சமயம் வேத தர்மத்தை உபதேசிக்க தயானந்தர் வந்து சேர்ந்தார். ராணாவின் சமஸ்தானக் கவி, கவிராஜ சியாமள தாஸர், அவரிடம் ஈடுபட்டார். சுவாமிகள் ராஜ நீதியைப்பற்றி மனுஸ்மிருதியுடன் வேதத்தையும் கோட்பாடுசெய்து உருக்கமாகப் பேசினார். பட்டம் வாங்கும் வெறும் ஆடுதன் ராஜாக்களின் பகட்டுகளை அம்பலமாக்கினார். அரசனுக்கு அழகு சர்க்கார் பட்டமில்லை; நீதி தர்ம பரிபாலனமே அரசன் கடமை என்பதை விளக்கினார். மகாராணா மிகவும் மகிழ்ச்சி யடைந்து, சுவாமிகளின் வாக்கைப் பருகினார். தன் தர்பார் மண்டபத்திலேயே அவருடன் பேசிப் பயன் பெற்றார். வேதப் பிரசாரத்திற்காக ஐநூறு ரூபா தந்தார். சுவாமி கைலாச பருவதத்தின் சிஷ்யர் ஒருவர் "துறவிக்குப் பணம் எதற்கு?" என்று ஏளனமாகப் பேசினார். "துறவி பணம் வைத்துக் கொள்ளவில்லை. வேத தருமத்திற்குப் பணம் காணிக்கை; உண்மையான துறவிகளை வேதத் தொண்டராக்கி, அவர்களை ஆதரிக்க வேண்டும். நாட்டில் கல்வி பரவவேண்டும். அதற்கே பணம்" என்றார் தயானந்தர். மஹாராணா சாஹெப் மிகவும் வணக்கமுடன் தயானந்தரின் கொள்கையில் ஈடுபட்டார்.

* * * *

## (ஃ). பெண்களைப் பாதுகாக்க வேண்டும்

ஒரு நாள் ஒரு கோவிலுக்கு முன், சில ஏழைக் குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தன. ஒரு பெண் குழந்தை ஆடையில்லாமல் குளிரில் வாடிக்கொண்டிருந்தது. அந்த நிர்வாணக் குழந்தையைக் கண்டு தயானந்தர் தலை குனிந்தார். அதைக் கண்ட சில குறும்பர் "உரு வணக்கத்தைக் கண்டிக்கும் சாமியார்

கோவிலுக்கு வணங்குகிறார்'' என்று கூச்சலிட்டனர். தயானந்தர் சட்டென்று தலை நிமிர்ந்து, ''ஐயா, நான் கோவிலுக்கு வணங்க வில்லை. இந்தப் பெண் அன்னைக்குச் சமானம். அவள் ஆடை கூட இல்லாமல் வாடுகிறாள். இப்படி நிர்க்கதியான நமது சமுதாயத்தைக் கண்டே தலை குனிந்தேன். நாட்டுத் தாய்மாரான பெண்களை எல்லா வகையிலும் போற்ற வேண்டும்'' என்றார்.

## .12 பம்பாயில் இடி முழக்கம்

சுவாமிஜி 30-12-1881ல் பம்பாய்க்குத் திரும்பினார். வண்டி நிலையத்தில் ஆல்காட்டும், ஆர்ய சமாஜிகளும் வரவேற்றனர். சுவாமிகள் பம்பாயில் அரிய பிரசங்கங்கள் செய்தார். மோர்வி சமஸ்தான அரசரும் தம் ஊரில் பிறந்த தயானந்தர் சொற்பொழிவைக் கேட்டுப் பெருமை கொண்டார். தயானந்தர் போலிகளைப் பலமாகக் கண்டித்தார். ஆல்காட், பிளாவட்ஸ்கி இருவரையும் கண்டித்தார். மறு நாளே அவர்கள் பம்பாயில் தலை தூக்க முடியவில்லை. பிறகுதான் சென்னைக்கு வந்தார்கள். சுவாமிகள் ''இந்திய நாட்டார் அந்நிய வலையில் மயங்கக் கூடாது; மூடக் கொள்கைகளை ஒழிக்க வேண்டும். நமது ஜனங்கள் நல்ல உடலுறுதியும், கல்வியறிவும், தொழிலறிவும், வியாபாரத் திறமையும், செல்வச் செழிப்பும் பெற வேண்டும்'' என்று உபதேசித்தார். பசுக்களைக் காப்பாற்றி, தேசத்தில் பால் வளம் பெருகத் தொண்டு செய்தார். சுவாமிகளின் சத்யார்த்தப் பிரகாசம் பலருடைய கண்ணைத் திறந்தது. பலருக்கு அதைப் படித்ததும கோபமும் வந்தது. அதில் உள்ள ஜைன மத கண்டனத்திற்காக ஒரு சமணர் வழக்குத் தொடுத்தார். ஆனால் அது தோற்றுப் போனது. மகாதேவ கோவிந்த ரானடே போன்ற அறிவாளர் சுவாமிகளின் தைரியத்தையும், அறிவையும், ஆற்றலையும் மெச்சினார். தயானந்தரை ரானடே குருவாக மதித்தார். சுவாமிஜி பம்பாயில் சில அன்பருக்குத் தியானம் பயிற்றினார். பதஞ்சலி யோக சூத்திரத்தை விளக்கினார். இயம—நியம சாதனங்களை வற்புறுத்தினார். மாணவர்களை பிரமசரிய விரதம் காக்கும்படி மன்றாடினார். ''மாணவர்களே! கல்வியில் கருத்தூன்றுங்கள்; காலையில் அனுஷ்டானங்களைச் சரியாகச் செய்யுங்கள். நிம்மதியாக வேதத்தைப் படியுங்கள். உங்கள் வேலைக்குப் பிறரை எதிர்பார்க்காதீர்கள். அன்னிய மோகத்தை ஒழியுங்கள்; பிற மதம் புகாதீர்கள். பிரமசரிய விரதத்தை உயிர் போலக் காப்பாற்றுங்கள். பெண்களை ஆசையுடன் பார்க்காதீர்கள்'' என்று உபதேசித்தார்.

## (அ). நூறு ரூபா போதும்

பம்பாயில் சுவாமிகளின் பிரசங்கங்கள் பலர் உள்ளத்தை மாற்றின. சுவாமிகளின் வேத தருமப் பிரசாரத்திற்காகப் பலர் பண உதவி செய்ய முன் வந்தனர். ஆனால் சுவாமிகள் அத்தியாவசியமான பொருளைத் தான் ஏற்றார். ஒரு நாள் ஒரு மார்வாடி ஆயிரம் ரூபாய் நோட்டை சுவாமிகளின் பாதத்தில் வைத்து, அத்தனையும் வேதப் பிரசாரத்திற்காக ஏற்க வேண்டும், என்று மன்றாடினான். சுவாமிகள் "நீர் சம்ஸாரி; 900 ரூபா வைத்துக் கொள்; வேதப் பிரசாரத்திற்கு 100 ரூபா நான் எடுத்துக் கொள்ளுகிறேன்" என்றார். மார்வாடி ஆயிரத்தையும் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று பிடிவாதம் செய்தான். சுவாமிகள் 100 ரூபா தான் எடுத்துக் கொண்டார்.

## (ஆ). தேச சேவை

ஒரு தரம் (1876)—புலவர் மோனியர் வில்லியம்ஸ், பம்பாயில் சுவாமிகளைப் பார்த்து, "தாங்கள் ஐரோப்பாவிற்கு வந்து பிரசாரம் செய்தால் பயனுண்டு; ஐரோப்பியர்கள் தங்கள் கொள்கைகளை ஏற்பார்கள். பிரயாணச் செலவை எல்லாம் நான் ஏற்கிறேன்" என்று சொன்னார். சுவாமிகள் "நான் முதலில் எனது சுதேசத்திற்கு வேண்டிய தொண்டுகள் செய்வேன். இந்தியா அஞ்ஞானத்தில் ஆழ்ந்து கிடக்கிறது. அதற்குக் காலத்திற்கு ஏற்ற கல்வி தந்து, வேத ஒளி காட்ட வேண்டும். பரதர்மத்திலிருந்து அதைக் காப்பாற்ற வேண்டும்; இந்தியர்களுக்கு அறிவுத் திறனும், அன்பும் ஒற்றுமையும், வீரமும் தீரமும் வளரச் செய்ய வேண்டும். சமுதாயத்தில் படர்ந்த தீமைகளை யெல்லாம் ஒழிக்க வேண்டும். ஹிந்தி பாஷை தேசீய பாஷையாக வேண்டும்" என்றார். இவற்றை யெல்லாம் நிறைவேற்றவே தன் ஆயுள் சரியாயிருக்கும் என்று கருதியே, தயானந்தர் கடல் தாண்டிச் செல்லும் யோசனையைக் கைவிட்டார். தயானந்தர் பம்பாயில் ஏராளமான பேர்களை வேத தருமத்திற்குக் கொண்டு வந்து சேர்த்தார். இந்து மதத்தைப் பழிக்கும் அன்னியருக்குச் சரியான பதில் சொன்னார். பெண் கல்விக்கு அரிய முயற்சிகளைச் செய்தார். கோவதையை நிறுத்த நீண்ட விண்ணப்பம் எழுதி ஏராளமான கையெழுத்துக்கள் வாங்கி விக்டோரியா ராணிக்கு விண்ணப்பம் செய்து கொண்டார். இவ்வாறு தனது ஆத்ம சக்தியால் சுவாமிகள் இடைவிடாது பொது நலத் தொண்டுகள் செய்தார். இச்சம

யம் மகாராணு சஜ்ஜன சிங் சுவாமிகளை அழைக்கவே சுவாமிகள் உதயபுரிக்குப் போய்ச் சேர்ந்தார்.

## 13. உதய புரியில்

தயானந்தரின் பெரிய எண்ணம் சுதேசி மன்னர்களை யெல்லாம் ஒரு சங்கமாகச் சேர்த்து, அவர்களுடைய செல்வாக்கைக் கொண்டு, நாடெங்கும் வேத தருமத்தைப் பரப்புவதே. இந்த எண்ணத்தைக் கொண்டே அவர் பல சமஸ்தானுதிபதிகளைக் கண்டு, அவர்களுக்கு ஆரிய தருமத்தை உபதேசித்தார். ஆனுல், அவர் கனவு நிறைவேருத படி ஒரு கொடிய சம்பவம் நடந்து விட்டது. அதைப் பிறகு சொல்வோம். 11-8-1888ல், சுவாமிஜீ உதயபுரி சென்ருர். அங்கே சஜ்ஜன சிங் அவரைச் சிறப்பாக வரவேற்று, தனது அரண்மனைத் தோட்டத்திலேயே எழுந்தருளச் செய்தார். சுவாமிகள் வந்த போது மகாராணி கர்ப்பமா யிருந்தாள். அவளுக்கு ஆண் குழந்தை பிறக்கும் என்ருர் சுவாமிகள்; அப்படியே பிறந்தது. மகாராணு பெருங் களிப்பெய்தி, தன் கையினுலேயே வந்தனக் கடிதம் எழுதி ஒரு மோகராவுடன் அனுப்பினுர். சுவாமிகள் அந்த மோகராவுடன் கொஞ்சம் பணமும் சேர்த்து, ஏழைகளுக்குத் தருமம் செய்தார். அரண்மனையில் நடந்த நாட்டியக் கச்சேரிகளை அவர் கண்டித்தார். இப்படி வீணுக்கும் பணத்தையெல்லாங் கொண்டு, கல்வியும் வேத தருமமும் பரப்பலாமென்ருர். மகாராணு சுவாமிகளிடத்தில் மிகவும் ஈடுபட்டார். சுவாமிகள் காலை உலாவி வந்து, தோட்டத்தில் தியானம் செய்வார். பிறகு வல்லாரைச் சாறும் பாலும் சாப்பிட்டு வேத பாஷ்யம் சொல்வார்; அன்பர் எழுதுவர். அவர் மகாராஜாவுக்கு மனுஸ்மிருதியும் மகா பாரதத்தில் வன பருவமும் உத்தியோக பருவமும், தரிசன க்ரந்தங்களும் சொல்லி வைத்தார். விசேஷ நாட்களில் கண்ட பாட்டுக் கச்சேரிகளுக்குப் பதிலாக, வேத கானம் முழங்கச் செய்தார். ஒவ்வொரு நாளும் நான்கு மணிக்குப் பிரசங்கம் செய்தார். மகாராணு முதல் மீவார் ஜனங்கள் பலர் பிரசங்கம் கேட்க வந்தார்கள். தயானந்தர் ஹிந்து தருமத்தில் படர்ந்த போலித்தனங்களைப் பலமாகக் கண்டித்தார். ஒரு நாள் மகாராஜா இவ்வாறு வேண்டினுர்: "சுவாமிஜீ, இந்த மீவார் சமஸ்தானம் ஏகலிங்க மகாதேவன் உடைமை; தாங்கள் இந்தக் கோவிலுக்கு மகந்தாக வந்து விட்டால், மீவார் சமஸ்தானமே தங்கள் கையில் இருக்கும். லட்சக் கணக்கான ரூபா தங்கள்

வேத தருமத்திற்குக் கிடைக்கும்." சுவாமிகள் பொறுமை யிழந் தார். "அரசே! தங்கள் சமஸ்தானமும் கோயிலும் அற்பமா னவை; நான் ஒரு ஓட்டத்தில் அவற்றைத் தாண்டி விடுவேன். இந்த அற்பப் பொருளுக்காக நான் வேத தருமத்தையும் வேத பிரசாரத்தையும் விட்டு, இந்தக் கோயிலில் விக்கிரக ஆராதனை செய்வேனென்று நினைத்தீர்? இனிக் கவனமாகப் பேசும்" என் றார். மகாராணு "சுவாமிஜி தங்கள் கொள்கையைப் பரிசோதிக் கவே சொன்னேன்; ஆனால் தாங்கள் உருத் தொழுகையைக் கண் டிக்கா விட்டால், கோடிக் கணக்கான மக்கள் தங்களைப் பின் பற்றுவார்கள்" என்றார். சுவாமிகள், "என் உயிர் போனாலும் பொய்த் தொழுகை புரியேன். வேதத்தில் உரு வணக்கத்திற்கு ஆதாரமே இல்லை" என்று அழுத்தமாகச் சொன்னார். மகாராஜா மௌனமானார். ஒரு நாள் கவி சியாமள தாஸ், "சுவாமிஜீ, தங்களுக்கு ஓர் உருவச் சிலையும் ஞாபகச் சின்னமும் செய்து வைக்கப் போகிறோம்" என்றார். சுவாமிகள் "ஒருக்காலும் இப்படிச் செய்யாதீர். பாமர ஜனங்கள் என் உருவை வணங்கி, கடவுளை மறக்கத் தொடங் குவார்கள். கடவுளைத் தவிர வேறு யாரையும் யாரும் வணங்கக் கூடாது" என்றார்.

ஒரு நாள் மகாராணுவுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்த போது, "எல்லாரும் மனச்சாட்சிக்கும் தருமத்திற்கும் பணிந்தே நடக்க வேண்டும். வேறு யாருக்கும் வணங்க வேண்டியதில்லை" என்று சொன்னார். அங்கிருந்த ஜாகிர்தார் மனோஹார சிங், "சுவாமி, மகாராணு என் எஜமான்; அவர் உத்தரவுப்படி நான் நடக்கா விட்டால், என் ஜாகிர் போய் விடுமே" என்றார். "ஐயா அதைப் பற்றிக் கவலை வேண்டாம். உமது ஜாகிர் மட்டுமா— உயிரே போவதானாலும், தர்மத்தை விடாதீர். அதரும உணவைக் காட்டிலும் தர்மத்தைத் தேடி இரந்துண்பது நல்லது" என்றார் சுவாமிகள்.

சுவாமிகள் உதய புரியில் ஒரு பெரிய கலாசாலை எழுப்பி "அதில், வேதக் கலையும், ராணுவக் கலையும், காலத்திற் கேற்ற தொழில்களும், ஆங்கிலமும் சமஸ்கிருதமும் இந்தியும் கற்பிக்க வேண்டும்" என்றார். அதற்கு வேண்டிய பாட முறைகளெல்லாம் வகுத்துக் கொடுத்தார். மகாராஜா அப்படிப்பட்ட கலாசாலை நாட்ட வாக்களித்தார். சுவாமிகள் "இந்தி தான் இந்தியாவின் பொது பாஷை. தேவநாகரி லிபியில் அதை எல்லாரும் கற்க வேண்டும். அதுவே

சமஸ்தான பாஷையாகவும் இருக்க வேண்டும்" என்று ஏற்படுத்தினர்.

சுவாமிகள் விபசாரத்தை பலமாகக் கண்டித்தார். "பணக்காரர்களும், சுதேச மன்னர்களும் பெண்ணாசையால் வாரி இறைக்கும் பணத்தை யெல்லாம், அறிவும் அறமும் செழிக்கச் செலவிட வேண்டும்" என்று வற்புறுத்தினர். மகாராஜா சஜ்ஜன சிங் அன்று முதல் பிற மாதரைக் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை. இரண்டாங் கலியாணமும் செய்து கொள்ள வில்லை. சுவாமிகள் அவருக்கு ஒரு கால அட்டவணை குறித்து, அதன்படி நடக்கச் செய்தார். அதாவது: அதிகாலை மூன்று மணிக்கே எழுந்திருத்தல்; வெளி வாசலுக்குச் சென்று வந்து, சித்தரத்தை ஊறப் போட்ட குளிர் நீர் சாப்பிடுவது. பிறகு அரை மணி நேரம் தியானம். பிறகு குதிரை சவாரி; தேகப் பயிற்சி. அதானதும் குளித்து விட்டு ஹவனம் செய்தல். ஒன்பது மணிக்கு ஆகாரமானதும் பதினொரு மணி வரையில், அரச காரியங்களைக் கவனித்தல். பிறகு மதியம் உண்டு சிறிது இளைப்பாறுதல். அதன் பிறகு நான்கு மணி வரையில், பல இலாக்காகளைச் சுற்றி, அரசியல் காரியங்களைக் கவனித்தல். மாலை அறிவை வளர்க்கப் புலவர்களுடன் சம்பாஷித்தல். பிறகு நல்ல பாடல்களைக் கேட்டல். பெண்களை விலகி வாழ்தல். வாரத்திற்கு ஒரு முறை அல்லது பக்ஷத்திற்கு ஒரு முறையே மகாராணியுடன் அந்தப் புரத்தில் இருத்தல். மகாராஜா இதே மாதிரி நடந்து மிகவும் பயன் பெற்றார். மகாராஜாவைச் சுற்றிப் பண்டாக்களும் புரோஹிதர்களும் செய்த பொய்க் கூத்துகளை, தயானந்தர் பலமாகக் கண்டித்தார். ஒருவர், "பிராமணனுக்குச் செருப்பு தானம் பண்ணினால் உலகத்தையே தானம் பண்ணின பலன் கிடைக்கும்" என்று ஒரு சுலோகம் சொன்னார். தயானந்தர் சிரித்து, "மகாராஜா இந்தப் பொய்யை யெல்லாம் நம்பாதீர்கள். பிராமணனுக்குச் செருப்பு தானம் பண்ணினால் உலகதானப் பலன் வருமென்றால், தாங்கள் பூதானமே செய்ய வேண்டியதில்லை. செருப்புகளைத் தைத்து பிராமணர்களுக்கு ஆளுக் கொன்றாகக் கொடுத்து விட்டால், அநேக பூமிகள் தானம் பண்ணின பலன் உண்டாய் விடும்; பிறகு தருமாசனங்களெல்லாம் மிச்சந்தான்" என்றார். கல்வியும் தொழிலும் செழிக்கும் படி, பல ஆக்க வேலைகளைச் செய்வதே சிறந்த தானம். ஜப மாலையில் மந்திரம் உருட்டுவதினாலும் அதிகப் பயனில்லை. இறைவனுடைய உயர்ந்த குணங்களைத் தியானிப்பதும், அவன் மயமான உலகிற்குத் தொண்டு செய்வதுமே தரும சாதனமாகும்.

ஒரு நாள் மகாராணா "ஸ்ரீ ராமச் சந்திரன் பரிபூரண அவதாரந் தானே ?" என்று கேட்டார். சுவாமிகள், "ராமச் சந்திரன் அவதாரமானால், தாங்களும் அவதாரத்தின் அவதாரமே. ஏனென்றால், உதயபுரி சமஸ்தானாதிபதிகள் ராமச் சந்திர குமாரனாகிய லவனின் சந்ததி என்பர். வால்மீகி ராமனை உத்தம சத்திய பராக்கிரம வீரனாகவே வர்ணிக்கிறார். பௌராணிகர் அவரை அவதாரமாக்கி விட்டனர். அதனால் ராமன் பேரால் விக்கிரக ஆராதனை பலமாக நடந்தது." சுவாமிஜி வால்மீகி ராமாயணத்தைப் படித்து, இந்த உண்மையை நிலைநிறுத்தினர். மகாராஜா அன்று முதல் அவதார வாதத்தை விட்டு விட்டார். உதயபுரிக்கு வந்த சில துறவிகள் சுவாமிகளை, "அதிகாரிகளுக்கே வேதத்தை உபதேசிக்க வேண்டும். அதுவும் அதிகாரிகளே உபதேசிக்க வேண்டும்" என்றார். சுவாமிகள், "ஏ, துறவிகளே! சாதுக்களே ! ஒவ்வொரு நாளும் ஆயிரக்கணக்கான இந்துக்கள் சுதருமத்தை விட்டுப் பரதர்மத்திற் புகுந்து நமக்கே தீங்கு விளைவிக்கிறார்கள்; நம்மவர் தர்மம் இன்னதென்றே அறியாமல், மூடக் கொள்கைகளில் உறங்குகிறார்கள். இச்சமயம் சாதி மத வேறுபாடுகளெல்லாம் பார்க்காமல், எல்லாருக்கும் வேத ஞானத்தை உபதேசியுங்கள். தருமம் உங்களுக்குக் குத்தகையா ? மிராசா ? அஃது எல்லாருக்கும் பொதுவுடைமை" என்றார்.

ஒருநாள் விஷ்ணுலால், "சுவாமி, இந்தியா எப்பொழுது சுதந்தரம் பெறும்?" என்று கேட்டார். "எப்பொழுது இந்தியா ஒரே பாஷை ; ஒரே தர்மம் ; ஒரே உள்ளத்துடன் ஒன்றுபட்டு முயற்சி செய்யுமோ அப்போதுதான் விடுதலை பெறும் : தற்போது இந்தியாவில் குரு பீடங்களும், ஆச்சாரியர்களும், புரோகிதர்களும் தர்மத்தைத் தமக்கே பூட்டி வைத்துக் கொண்டு, விளையாடுகிறார்கள். கோடானு கோடி ஜனங்களை முல்லாக்களும் பாதிரிகளும் வலை போட்டிழுக்கிறார்கள். அதனால் நம்மவர் தொகை குறைந்து போகிறது. நான் உண்மையைச் சொல்லவே வந்தேன். என் கடமையை நான் செய்கிறேன். நஞ்சும் வாளும் பகைவர் தொல்லையும் சூழ்ச்சியும் எவ்வளவு சோதித்தாலும், என்னுடைய கடமையை நான் விடவில்லை. ஆரிய ஜாதியின் உஜ்ஜீவனத்திற்காக என் உயிரைக் கொடுத்தும் உழைப்பேன்" என்றார். விஷ்ணுலால் "சுவாமி, தங்களைப் போல் சத்தியவான்கள் நான்கு பேரிருந்தால், தேசம் எளிதில் முன்னேறும்" என்று வியந்தார்.

மீவார் சமஸ்தானத்தை இந்தியாவிலேயே முதன்மையாக்க சுவாமிகள் சஜ்ஜன சிங்கிற்குப் பல நல்ல யோசனைகளைச் சொன்னார். சஜ்ஜனசிங் பதினைந்து வயதில் பட்டம் பெற்றவர். 1875-ம் ஆண்டில் பம்பாயில் எட்வர்டு இளவரசரைக் கண்டார். ஆனால் இளவரசர் தோன்றிய சபையில் அவருக்கு உரிய நாற்காலி இல்லை. அதனால் சுயமரியாதை கொண்ட சஜ்ஜனசிங் தன் சமஸ்தானத்திற்கு உடனே திரும்பிச் சென்றார். சஜ்ஜனசிங் குலப் பெருமையை உயிரெனக் காக்கும் வீரர். தயானந்தரின் உபதேசத்தால் அவர் பெரும் பயன் பெற்றார். முன்னே பகையாயிருந்த ஜயப்பூருடன் நட்புறவு கொண்டார்.

உதயபூர் சிவில் ஜட்ஜ், அப்துர் ரஹ்மான், குரான் புலவர். அவர் தயானந்தரைப் பல கேள்விகள் கேட்டார். அவற்றிற் சில அடியில் வருமாறு:—

கேள்வி: உலகத்தில் பல மதங்களும் பல பாஷைகளும் உள்ளன; அனைத்திற்கும் பொதுவான ஒரு சன்மார்க்க நூல் உண்டா?

பதில்: உண்டு. அதுவே வேதம். அஃது உண்மை ஞானச் சுரங்கம். இயற்கை விதிகளைப் போற்றுவது.

கேள்வி: குரான், அருள் ஆவேசத்தால் எழுந்தது போலவே வேதமும் எழுந்தது. அதனால் குரானைப் படித்தால் என்ன?

பதில்: வேதம் அந்தராத்ம அனுபவங்கள். எல்லாருக்கும் பொதுவான ஜாதி மதச் சாயமற்ற சர்வோத்தம கிரந்தம்.

கேள்வி: உலக மனித ரெல்லாம் ஒரே இனமா?

பதில்: இனிமேல் மனிதர்களை யெல்லாம் அப்படி ஒரே இனமாக்க முயற்சி நடக்கும். 196 கோடி ஆண்டுகளுக்கு முன்னால் மனித உற்பத்தியானது. இன்னும் இருநூறுகோடி ஆண்டுகள் மனித ஜாதி யிருக்கும்.

கேள்வி: உங்கள் மதம் என்ன?

பதில்: அறிவுக்கு ஒத்த அறமே என் மதம். அப்படிப்பட்டது வேதமே.

கேள்வி: வேதத்தின் தனிச் சிறப்பு என்ன?

பதில்: வேதமே கடவுளின் அருள் வாக்கு. மற்ற மதங்களின் சாரமெல்லாம் வேதத்தில் அடங்கி யிருக்கிறது.

கேள்வி : உலகத்தில் நித்திய வஸ்துக்கள் யாவை?

பதில் : கடவுள், ஆத்மா, ஜகம்—இவையே நித்திய வஸ்துக்கள். வேதத்தின் பயனை மனித சமுதாயம் முழுதும் அடைய வேண்டும்.

## 14. சுவீகார பத்திரம்

தயானந்தர் வருங்காலப் பாதுகாப்பிற்காக மீரட்டில் ஒரு பரோபகாரிணி சபை கூட்டினார். 27-2-1883-ல், அவர் தமது கொள்கைகள், என்றும் நின்று நிலவ, ஒரு நிலையான ஏற்பாடு செய்தார். இருபத்து மூன்று அங்கத்தினர்கள் கொண்ட ஒரு பரோபகாரிணி சபையை நிலைநாட்டி, அதனிடம் தன் சொத்து சுகங்களை யெல்லாம் கொடுத்து விட்டார். அந்த சுவீகார பத்திரத்தின் சுருக்கத்தை அடியில் தருகிறோம்.

"பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஸ்ரீ ஸ்வாமி தயானந்த சரஸ்வதியின் சாசனம். இந்த சாசனம் மேவார் சமஸ்தானத்தில் பதிவு செய்யப்பட்டது. இதன் தலைவர் மகாராணா சஜ்ஜன் சிங். மகாராஜா கஜசிங், ராய்சிங், கவிராஜ சியாமளதாஸ், விஷ்ணுலால் பாண்டியா, ராவ் ரத்ன சிங் முதலியோர் இச்சபையின் நிர்வாகிகள். கவி சியாமளதாஸ் காரியதரிசி. விஷ்ணுலால் உதவிக் காரியதரிசி. சியாமாஜீ கிருஷ்ண வர்மா, மகாதேவ கோவிந்த ரானடே, கோபால் ராவ், ஹரிதேஷ்முக், லாலா ஜகன்னாத் பிரஸாத், பாபு துர்க்கா பிரஸாத், போன்ற பெரிய அறிவாளர்கள் இந்தச் சபையின் அங்கத்தினர். இந்தச் சபை எனது சொத்துக்களையும் நூல்களையும் பொறுப்பேற்க வேண்டியது. என் காலத்திற்குப் பிறகு நான் எந்தக் கொள்கைக்காக வாழ்ந்தேனோ, அதை நிறைவேற்ற வேண்டியது. வேத வேதாந்த ஞானத்தைப் பரப்ப வேண்டியது. உண்மையை ஒப்பிப் பொய்யைக் கண்டித்து, இந்தியாவிலும் மற்ற நாடுகளிலும் வேத தருமத்தைப் பரப்ப ஆசிரியர்களையும் பிரசாரகர்களையும் தயாரிப்பது. ஏழை யெளியவர்களுக்குத் தகுந்த பாதுகாப்பளித்து, வேதக் கல்வி புகட்ட வேண்டியது. வேத கலாசாலைகளின் கணக்கு வழக்குகளையும் நடை முறைகளையும் கவனிக்க வேண்டியது. தேசமும் தர்மமும் முன்னேறி விளங்க, விசால நோக்கும், கருத்தும், கவனமுங் கொண்டு இந்தச் சபை சுறுசுறுப்பாக உழைக்க வேண்டும். இச்சபையே எனது பிரதிநிதி. இதில் சுயநலம் புகக் கூடாது. வேத விரோதமான கொள்கை நுழையக் கூடாது. தர்மாசாரங்கள் சரிவர நடை—

பெற வேண்டும். அடிக்கடி இந்தச் சபையில் ஹவனம் நடக்க வேண்டும். தர்மத்திற்கு விரோதமாக நடக்கும் யாரையும் சபையிலிருந்து நீக்கிவிட வேண்டும். அவர்களுக்குப் பதிலாக உத்தமர்களைச் சேர்க்கலாம். சபையின் வளர்ச்சியையும், பணிகளையும் கணக்கு வழக்குகளையும் பற்றி, ஆண்டறிக்கைகள் அச்சிட்டுப் பரப்ப வேண்டும். இந்தச் சபையில் ஓர் அச்சுக்கூடம் நடத்தி அறிவுப்பணி செய்ய வேண்டும். ஆரிய தர்ம ஸ்தாபனங்களையெல்லாம் இச்சபை நிர்வகிக்க உரிமை யுண்டு.''

மகாராணா சஜ்ஜனசிங் "சுவாமிகளின் விருப்பப்படியே எல்லாம் சரிவர நடக்கும்'' என்றார். தயானந்தருக்கு முழுதும் திருப்தி யளித்தார் சஜ்ஜனசிங். அவரை 'ஆரியகுல திவாகரன்' என்று புகழ்ந்தார். மகாராணா தனது சமஸ்தானப் பள்ளிக் கூடங்களி லெல்லாம் சுவாமிகளின் 'வேதாங்கப் பிரகாசத்தைப் பாடமாக வைத்தார். தயானந்தர் மகாராணாவுக்கு ராஜநீதி முழுதையும் விரிவாக உபதேசித்து, அதன்படி நடக்கச் செய்தார். சத்யார்த்தப் பிரகாசத்தில் அவர் செய்த உபதேசங்களெல்லாம் அடங்கி யிருக்கின்றது. மகாராணா ஆரிய சமாஜருக்கும் அதைச் சார்ந்த கலாசாலைகளுக்கும் தாராளமாக நன்கொடை யளித்தார். சுவாமிகள் புறப்படும் பொழுது, இரண்டாயிர ரூபா காணிக்கையாக அளித்தார். சுவாமிகள் அதைத் தாம் எடுத்துக் கொள்ளாமல், பரோபகாரிணி சபைக்கே தந்துவிட்டார். ஆறு தரிசன க்ரந்தங்களுக்கு வியாக்கியானம் எழுதவும், அவற்றை வெளியிடவும் ரூபா இருபதினாயிரம் தருவதாகவும் மகாராணா சொன்னார். "வேத பாஷ்யம் முதலில் வெளிவர வேண்டும்; பிறகே மற்றவை'' என்றார்.

27-2-1883; சுவாமிகள் புறப்படும் நாளிலும் சஜ்ஜனசிங் சிறப்பான மரியாதைகள் செய்து நன்றிப் பத்திரமும் அளித்தார். அதில் அவர் கூறியதாவது: "சர்வஜன பரோபகார கருணமய பரம ஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீமத் தயானந்த சரஸ்வதி யதீஸ்வரருக்கு, மகாராணா சஜ்ஜன சிங்கின் வந்தனம். தாங்கள் ஏழு மாதங்களாக இந்த உதயபுரியில் இருந்தது, எங்களுக்கு மட்டற்ற மகிழ்ச்சி யளித்தது. தங்கள் உபதேசங்கள் எங்கள் தார்மீக ஜீவனத்திற்கும் தனி வாழ்க்கைக்கும் பெரும் பயனளித்தன. சொல்லும் செயலும் ஒன்றாகிய தங்கள் வாழ்க்கையே, எங்களுக்குப் பெரிய உபதேசமாகும். தங்களை விட்டுப் பிரிய எங்களுக்கு மனமில்லை; என்றாலும் ஏராளமான ஜனங்களுக்

குத் தாங்கள் நன்மை செய்யச் செல்கிறீர்கள். அதனால் தங்களை இங்கேயே தங்கும்படி பிடிவாதம் செய்ய மாட்டோம். ஆனால் தாங்கள் இங்கே அடிக்கடி வந்து, நன்மொழி கூறி எங்களை நடத்த வேண்டுமாய்க் கேட்டுக் கொள்ளுகிறோம்."

## 15. ஷாப்பூரில் சுவாமிகள்

அந்தக் கால க்ஷத்திரியருள் ராஜா தீர நாராயண சிங் ஒருவர். இவர் சுவாமிகளிடம் மிகவும் ஈடுபட்டவர். இவர் சுவாமிகளிடம் மனுஸ்மிருதியும், பதஞ்சலி யோக சூத்திரமும், கணாதரின் வைசேஷிக! சூத்திரமும் கேட்டவர். இவருக்கு சுவாமிகள் பிராணாயாமம் பயிற்றுவித்தார். வேத தர்மத்தின்மேல் படர்ந்த மூடத் திரைகளை யெல்லாம் அகற்றி, தூய உண்மையைத் தயானந்தர் இவருக்கு விளக்கினார். அந்த ஊரில் ராமஸ்நேகிகள் என்னும் மதவாதிகள் அதிகம். இவர்கள் 'ராம நாமத்தையே பலமாகக் கூச்சலிடுவதால் ராமனை அடையலாம்' என்று நம்பினார்கள். மகாராஜா இதைப் பற்றி ஒரு தரம் சுவாமிகளிடம் கேட்டார். ஒருதரம் ராமஸ்நேகி கூட்டத்தின் ஆண்டு விழா நடந்தது. நாமத்தால் ராமன் வருவான் என்று எல்லாரும் அமர்க்களமாகப் பாடிக் கொண்டிருந்தார்கள். சுவாமிகள் குறுக்கிட்டு "ஐயா உங்கள் பெயரெல்லாம் எனக்குத் தெரியாது; நானும் உங்களை அடைந்து விட்டேன்; பெயரை மட்டும் கூச்சலிடுவதால் கடவுளை அடைய முடியாது. லட்டு லட்டு என்றால் லட்டு வந்து விடுமா? சாதனம் செய்தாலே கடவுளை அடையலாம்" என்றார். அப்போது சில குழந்தைகள் துள்ளிக் குதித்து "உண்மை, உண்மை. சுவாமிகள் சொல்வதே உண்மை. நாங்கள் லட்டு, லட்டு என்றால் லட்டு வராது" என்று கூச்சலிட்டனர். சுவாமிகள் "இந்தக் குழந்தைகளுக்கு ஓரகமற்ற உள்ளம் இருக்கிறது; அதனால் தான் அவை, உண்மையைத் தைரியமாகச் சொல்லுகின்றன" என்றார். இச்சம்பவம் அங்கிருந்தவர்கள் உள்ளத்தை மாற்றியது. அவர்களுக்கு சுவாமிகள் யோக சாதன முறையை விளக்கினார். சிலர், "கல்லிலும் கடவுள் தானிருக்கிறார்; அதைத் தொழுவதால் என்ன?" என்று கேட்டனர். "வெள்ளை மணலும் சர்க்கரையைப் போலத் தானே இருக்கிறது. அதைத் தின்றால் என்ன?" என்று கேட்டார் தயானந்தர்.

ஒரு தர்க்க வித்வான் வந்து சேர்ந்தார். அவர் ஒரு சின்ன விஷயத்திற்குக்கூட தர்க்க சாஸ்திரத்தைத்தடதட வென்று ஒப்பிப்

13

பார். சுவாமிகள் வேடிக்கைக்காக "தேவ தத்தன் கிராமம் செல்லுகிறான்; இதைத் தர்க்க ரீதியாக விளக்குக" என்றார். தர்க்க சாஸ்திரி அரை மணி நேரம் போட்டுப் புரட்டி ஒருவரும் அர்த்தம் புரிந்து கொள்ளாதபடி செய்தார். சுவாமிகள், "ஐயா நீர் தர்க்கம் செய்வதற்குள் தேவ தத்தன் கிராமத்திற்குப் போய் விடுவான் போலிருக்கிறதே; ஒருவருக்கும் விளங்காமல் இப்படிச் சொற் சிலம்ப மாடுவதால் என்ன பயன்?" என்றார். ஷாப்பூரில் ஆரிய சமாஜம் பலமாக ஊன்றிக் கொண்டது. அரசரின் முழு ஆதரவும் அதற்குக் கிடைத்தது. இச்சமயம் ஜோட்பூர் மகா ராஜா தயானந்தரை அழைத்தார். ராஜா நிர நர்ராயண சிங்கிற்கு அவரை ஜோட்பூருக்கு அனுப்பவே விருப்பமில்லை. "சுவாமிகளே! ஜோட்பூர் ராஜா ஜஸிவந்த சிங், நன்னி ஜான் என்ற வேசையின் வலையில் விழுந்தவன். அங்கே தாங்கள் வேசைகளைப் பற்றித் தூஷித்தால் ஆபத்து" என்றார். "என் விரல்களில் பந்தம் சுற்றிக் கொளுத்தினாலும், நான் உண்மையைச் சொல்லியே தீருவேன்" என்று தயானந்தர் தைரியமாகப் புறப்பட்டார். ஷாப்பூர் மன்னர் "சுவாமிகள் இரண்டுமாதம் இங்கே இருந்ததால், அளவற்ற முன் னேற்றமுற்று, வேத வுண்மையும் அறிந்தோம். சுவாமிகளுக்கு என்றும் நாங்கள் கடமைப் பட்டிருக்கிறோம். இப்படி அடிக்கடி வந்து எங்களுக்கு நல்லுபதேசம் செய்ய வேண்டும்" என்று நன்றி கூறி, வெகு தூரம் வந்து வழியனுப்பி, வணக்கமுடன் விடை பெற்றுக் கொண்டார்.

## 16. நஞ்சும் வஞ்சமும்

ஜோட்பூர் ராஜா யானை, குதிரை, ஒட்டகம், பல்லாக்கு, தேர் எல்லாம் அனுப்பி சுவாமிகளை மிகவும் சிறப்பாக வரவேற்றார். நஜார் பார்க்கிற்கு எதிரேயுள்ள "பஸி உலாகான்" கோட்டையில் சௌகரியமாக ஜாகை அமைந்தது. ஏற்பாடுகளெல்லாம் தட புடலாகத்தா னிருந்தன. அரசரின் தம்பி ஸர் பிரதாப் சிங், சுவா மிகளை வரவேற்று, ஒரு தங்க மோகராவும் இருபத்தைந்து ரூபாயும் காணிக்கை வைத்து வணங்கினார். ராஜாவிற்குத் தொண்டை புண் ணானதால், இருபத்தைந்து நாட்களுக்குப் பிறகே வந்து, ஐந்து தங்க மோகராக்களும் நூற்று ஐந்து ரூபாயும் வைத்து வணங்கினார். சுவாமிகள் அவரைக் கையினால் எழுப்பி, ஒரு நாற்காலியில் அமர்த் தினார். மகாராஜா உபதேசம் கேட்டார். சுவாமிகள் தரும பரி பாலனத்தைப் பற்றி உபதேசித்தார். மூன்று மணி நேரம் மனு ஸ்மிருதியையும் வேதத்தையும் கோட்பாடு செய்து, சுவாமிகள்

பேசிய வாக்குகளைக் கேட்டு, அரசர் வியந்து மகிழ்ந்தார். ஒவ்வொரு நாளும், மாலை நான்கு மணி முதல் ஆறு மணி வரையில், அரிய விஷயங்களைப் பற்றி சுவாமிகள் பேசினார்கள். க்ஷத்திரிய தருமத்தையும், அதனால் தேசத்திற்கு உண்டாகும் பாதுகாப்பையும் பற்றிவிரிவாகப் பேசினார். பேச்சிடையே அரசர்கள் வேசைகளின் வலையிற் பட்டு அறமிழந்து வருந்தும் பரிதாபத்தையும் விளக்கித் தீர்த்தார். "சுவாமிகளே! ஆபத்து! இந்த மாதிரி பேசாதீர்கள். அரசர் நடத்தையைக் கண்டிக்கிறீர்கள்" என்று பெரிய உத்தியோகஸ்தர்கள் எச்சரிக்கை செய்தனர். "உண்மையை நான் தைரியமாகத் தான் கூறுவேன்; அதில் எது வந்தாலும் சரி" என்றார் தயானந்தர்.

சுவாமிகள் தன் ஜாகையில் பெண்களை வரவிடுவதில்லை. வழக்கப்படி நான்கு மணிக்கு எழுந்து அனுஷ்டானங்களை முடித்துத் தியானம் செய்து, பால் பருகி, எட்டு முதல் பதினொரு மணி வரையில் வேத பாஷ்யம் சொல்லி, பிறகு குளித்துப் பன்னிரண்டு மணிக்குச் சாப்பிட்டார். பிறகு பதினைந்து நிமிஷம் இளைப்பாறி, சத்தியார்த்த பிரகாசம் முதலிய நூல்களின் அச்சுத் தாள்களைத் திருத்தினார். பிறகு செய்தித் தாட்களைப் படித்தார். மாலை தோறும் பிரசங்கம் செய்தார். இரவில் பழங்கனி யுண்டு பால் பருகினார். எந்த வேளையும் வேத உண்மைகளை வேண்டுவோருக்கு விளக்கினார். பல பண்டிதர்கள் வந்து தர்க்கம் நடத்தினார்கள். 'அஹம் பிரம்ம வாதிகள்' அவரிடம் அகப்பட்டுக் கொண்டு விழித்தனர். "நீரே கடவுளானால், கடவுளுக்கு உரிய குணங்கள் உங்களுக்கு உண்டா?" என்று சுவாமிகள் கேட்டார். கடவுளைப் போல மனிதன் ஐந்தொழில் புரிய முடியாது என்று விளக்கினார். சில இஸ்லாமியர்களும் வந்து குரானைக் கொண்டு வாதாடினர். ஊரில் எல்லாரும் சுவாமிகளிடம் மிகவும் வணக்கமுடன் இருந்தார்கள். மகாராஜா கூட ரசித்துக் கேட்டார். வேத தர்மத்தை ஒப்பினார். இருந்தாலும் அவர் நடத்தையில் ஒன்றும் மாறுதல் ஏற்படவில்லை. ஒரு நாள் சுவாமிகள் மகாராஜாவைப் பார்க்க வந்தார். அப்போது நன்னிஜான் மகாராஜா பக்கத்தில் உட்கார்ந்திருந்தாள். சுவாமிகளுக்குக் கோபம் வந்து விட்டது. "சிங்கம் போல் இருக்க வேண்டிய அரசர்கள், இந்த நாய்களோடு சம்பந்தம் வைத்துக் கொள்ளலாமா?" என்று சொன்னார். இதைக் கேட்ட உத்தியோகஸ்தர்கள் அஞ்சி நடுங்கினர். இத்துடன் வல்லபக் கூட்டத்தையும் தயா

னந்தர் பலமாகக் கண்டித்தார். அந்தக் கூட்டம் சூழ்ச்சி செய்தது. மேதா விஜயசிங் என்பவர், பொருளாதார மந்திரி. அவர் மூலம் எதிரிகள் சதியாலோசனை செய்தனர். சுவாமிகள் புராணிகளைக் கண்டித்து வல்லபக் கூட்டத்தின் பகைக்கு உள்ளானார். இஸ்லாமைக் கண்டித்ததால் முஸல்மான்களுக்கு எதிரியானார். விக்கிரக ஆராதனையைக் கண்டித்ததால், பல பிராம்மணர்களுக்கு எதிரியானார். அரசர்களின் இடம்பக் கூத்தையும் விபசாரத்தையும் பலமாகக் கண்டித்ததால், ராஜபுத்திரர் பலர் எதிர்த்தனர். அரசரின் வைப்பாட்டியைக் கண்டித்ததால், நன்னி ஜான் கொடிய விரோதியானாள். அவள் அரசர் மனத்தையும் கலைத்துப் பகைத் தீயை மூட்டினாள். இவர்கள் எல்லோரும் சேர்ந்து சுவாமிகள் மேல் கூரிய சொல்லம்பு பாய்ச்சினார்கள். அரசரின் முதல் அமைச்சர் இஸ்லாமியர். அவர், "இஸ்லாமைக் கண்டித்தால் தங்கள் உயிருக்கு ஆபத்து வரும்" என்று சொன்னார். சுவாமிகள் அதே மாலை இஸ்லாமைப் பலமாகக் கண்டித்து, வேத தருமத்தை உயர்த்திப் பேசினார். மகாராஜா சுவாமிகளின் பிரசங்கங்களுக்கு வருவதை நிறுத்திக் கொண்டார். சுவாமிகள் அவரைத் திருத்த எவ்வளவோ முயன்றார். பல கடிதங்கள் எழுதினார்; தக்கார் மூலம் தன் உள்ளத்தைச் சொல்லி யனுப்பினார். "அரசர்க்குரிய கடமையை மறந்து அந்த வேசையின் மையலில் விழுந்து, அதர்ம வழியில் நடப்பது க்ஷத்திரியர்களுக்கு அழகில்லை. மனிதன் காமத்தை அடக்கியாள வேண்டும். புலன்களை வெல்ல வேண்டும். குடி, சூது, வியபிசாரம் இவை மகா பாபம். பிரம்மசரியத்தினாலும், யோகத்தினாலும், தார்மிக ஜீவனத்தினாலுமே மனிதனுக்கு இன்பம்" என்று விரிவாக எழுதி யனுப்பினார். ராஜ நீதியைத் தெளிவாக விளக்கினார். தனியாகச் சந்தித்தும் தனது அந்தரங்கத்தைப் பேசினார். "தங்களைப் போன்ற அரசர்கள் பிறருக்கு உதாரணமாக இருக்க வேண்டும். வேத தருமத்தைப் பரிபாலனம் செய்ய வேண்டும். தாங்கள் வழி தவறி நடந்தால், தேசத்திற்கே மானம்" என்று மன்றாடினார். ஒன்றும் பலிக்கவில்லை. தொல்லைகள் வரவர அதிகரித்தன; எதிரிகளின் சூழ்ச்சி வலுத்தது; அரசர் இப்படியும் அப்படியும் இருந்தார். பகைவர் சூழ்ச்சி அவர் உயிருக்கே உலை வைத்தது.

26—9—1883. சுவாமிஜீயின் வைர உடல் திடீரென்று தளர்ந்தது; வயிற்றில் கொடிய வலி எடுத்தது; மூன்று தரம் வாந்தி எடுத்தார். உடனே தனக்குப் பகைவர் நஞ்சு வைத்து விட்டார்கள் என்பதை உணர்ந்தார். நன்னி ஜான் சமையற்காரன் மூலம்

உணவில் நஞ்சு கலந்து, எப்படியோ தந்திரமாகக் கொடுத்து விட்டான். டாக்டர் சூரஜ்மல் என்பவர் வந்து சேர்ந்தார். அவர் ஜோட்பூர் ஜெயில் வைத்தியர். அவர் கொடுத்த மருந்தாலும் பயனில்லை. அவரைத் தூண்டி விட டாக்டர் அலிமர்த்தன் கான் வந்து சேர்ந்தான். இவன் முகத்துதி பேசியே, அரசர் சலுகையைப் பெற்றுப் பணக்காரனானான். "அவன் சுவாமிகள் சரீரம் பெருத்ததால் அவருக்கு நான்கு பங்கு அதிகமாக மருந்து கொடுக்க வேண்டும்" என்று பேதி மாத்திரைகளை ஏற்றி விட்டான். "ஏழு தரம் வெளிக்குப் போகும்" என்றான். காலையில் நாற்பது தரம் வெளிக்குப் போனது. வஞ்ச வைத்தியர்கள் இன்னும் இன்னும் பாஷாண மருந்துகளை ஏற்றினர். சுவாமிகளின் வாயும், வயிறும், குடலும் வெந்துபோயின. நிலைமை அபாயமாகி விட்டது. நம்பிக்கையான வைத்தியர்களை சுவாமிகள் பக்கமே வர முடியாதபடி செய்தனர். வைரம் பாய்ந்த உடலும் மெலிந்து, நலிந்து, தளர்ந்து படுத்தது. இச்சமயம் சமையற்காரன் காளியன் (ஜகந்நாதன்) என்பவன் நன்னி ஜானிடம் லஞ்சம் வாங்கிச் சுவாமிகளுக்குப் பாலில் கண்ணாடித் தூளும் விஷமும் கலந்து கொண்டு,கொடுத்ததாக ஒப்புக் கொண்டான். சுவாமிகள் அவனை மன்னித்துவிட்டார். கொஞ்சம் பணமுந் தந்து "ஜோட்பூரினின்று ஓடிப்போ; இல்லாவிட்டால் உன்னைக் கைது செய்வார்கள்" என்று அனுப்பி விட்டார். அவன் சில காலத்திற்குப் பிறகு பைத்தியம் பிடித்து அலைந்தானாம். இதை ஒட்டிப் பல கதைகள் உண்டு. பகைவர் பாலில் நஞ்சு கலந்து கொடுத்து விட்டார்கள் என்பது மட்டும் உறுதி. பதினாறு நாட்கள் சுவாமிகள் சாவுடன் போராடினார். பிறகு அவர் ஆஜ்மீருக்குப் போகத் தீர்மானித்தார். ஜோட்பூரில் இறந்தால், தன் சமஸ்தானத்திற்கே கெட்ட பெயர் வருமென்று, மகாராஜா அவருக்கு வந்தனங் கூறி, இரண்டு சால்வைகளும், இரண்டாயிரத் தைநூறு ரூபாய் காணிக்கையும் தந்து, அபு மலைக்கு அனுப்பினார். சுவாமிகளின் பல்லக்குடன் மகாராஜா சென்று வழியனுப்பி "சுவாமிகள் மறுபடியும் என் சமஸ்தானத்திற்கு வர வேண்டும்" என்று மரியாதை சொல்லி, விடை பெற்றுக் கொண்டார். சுவாமிகள் அபு பருவதத்தில் ஜோட்பூர் மாளிகையிலேயே தங்கினார். சுவாமிகளுக்கு உடம்பு எரிச்சலெடுத்தது; அடிக்கடி மயக்கம் போட்டது. நேர்வாளம் உள்ளே ஏறியிருப்பதாக, நம்பிக்கையான வைத்தியர்கள் சொன்னார்கள். கர்னல் ஸ்பென்சர் தன்னால் முடிந்த மட்டும் வைத்தியம் பார்த்து,

அவரை ஆஜ்மீருக்குப் போகச் சொன்னார். சுவாமிகள் எழுந்திருக்கக் கூட முடியாமல் தளர்ந்து போனார்கள்.

## 17. ஆஜ்மீர் சமாதி

ஆஜ்மீரில் டாக்டர் லட்சுமண தாஸ் என்ற அன்பர், தம்மாலான மட்டும் சிகிச்சை செய்தார். ஆனால் விஷத்தின் கொடுமை தணியவில்லை. குடல் எரிச்சல் எரிமலை போலானது. சுவாமிகள் கண்ணீர் விடும் அன்பர்களைப் பார்த்து, "எனக்கு யாரோ அமிர்தம் கொடுத்து விட்டார்கள்" என்று புன்னகைத்து நின்றார். இருமல் அதிகமானது. இனிப் பிழைக்க மாட்டோம் என்பதை அறிந்து, சுவாமிகள் உலகத்தினின்று விடை பெற்றுக் கொள்ள தயார் செய்து கொண்டார். தான் எழுதி வைத்த சாஸனத்தை, எல்லாருக்கும் அச்சிட்டு வழங்கினார். டாக்டர் லட்சுமண தாசுக்கு 1200 ரூபா பெறுமான சன்மானங்களைத் தந்தார். டாக்டர் அவற்றை எடுத்துக் கொள்ள மறுத்து, கண்ணீர் விட்டு, "சுவாமிஜீ, எனக்குப் பணமிருந்தால் உங்கள் உடம்பில் உள்ள ஒவ்வொரு மயிர்க் கூருக்கும் இப்படிச் சன்மானம் தருவேன்" என்று விம்மி யழுதார். சுவாமிகள் "நீ ஆரிய தீரன்; உன்னைப் போன்று ஒவ்வொரு ஆரியனும், பரோபகாரியா யிருக்க வேண்டும்" என்று புகழ்ந்தார். மற்றொரு வைத்தியர் ஜோட்பூரில் மருந்துடன் விஷம் கலந்து கொடுத்து விட்டதாகக் கண்டு பிடித்தார். சுவாமிகளின் இறுதிக் காலம் வந்து விட்டதை அறிந்த அன்பர்கள், பல திசைகளினின்றும் வந்து குவிந்தனர். கண்ணீரும் கம்பலையுமாக நிற்கும் அன்பரைக் கண்டு சுவாமிகள் "வேத மந்திரங்களைப் பாடுங்கள்; அழாதீர்கள்" என்று சொன்னார். ஒரு நாள் சிறிது குணம் கண்டது. சுவாமிகள் அன்பருடன் வழக்கம் போல் பேசினார். "சத்தியார்த்தப் பிரகாசத்தை நாடெங்கும் பரப்பி, தேசத்திற்குப் புதிய வாழ்வு தர வேண்டும். வேத தருமத்தை மறுபடி அநுஷ்டானத்திற்குக் கொண்டு வர வேண்டும். பிரமசரியக் கல்வி முறையால் நாட்டில் தீரர்களை உண்டு பண்ண வேண்டும்" என்று உபதேசித்தார். மறு நாள் அவர் பேச்சடைத்தது. நாது விழுந்தது. மூச்சுக் கூட நின்று விட்டது. அன்பர்கள், சிவில் சர்ஜன் டாக்டர் நியூமனைக் கூப்பிட்டார்கள். நியூமன் டாக்டர் லட்சுமண தாஸ் செய்த வைத்தியமே சிறந்தது என்றார். சுவாமிகள் "இனி வைத்தியம் பார்ப்பது வீண்; இந்த உடல் இதோ விழப்போகிறது. நீங்கள் வேத தருமத்தை அநுஷ்டித்தால் அதுவே எனக்குத் திருப்தி" என்று சொன்னார்.

தயானந்தர் ஜோதியில் கலந்த இல்லம் (ஆஜ்மீர்)




ஒளியில் ஒளி கலந்த உள்ளன்பு விடிதுவே

தீபாவளி யன்று சுவாமிகள் தலை வழித்துக் கொண்டார். தலை வழித்தவருக்கு ஐந்து ரூபா கொடுக்கும்படி சுவாமிகள் கட்டளை யிட்டார். அதுவே அவன் மனத்தில் எண்ணியது. மத்தியானம் சுவாமிஜி படுக்கையுடன் கிடந்தார். லாலா ஜீவன் தாஸ் "சுவாமிஜீ! தாங்கள் எங்கே இருக்கிறீர்கள்?" என்று கேட்டார். "பரமேச்வரன் இச்சையில்" என்றார் சுவாமிகள். பிறகு நினைப்பில்லை; முகத்தில் பரம சாந்தமே நிலவியது. மாலை நான்கு மணிக்கு ஆத்மானந்த சரஸ்வதியை அருகில் அழைத்தார்; அவர் கண்ணீருடன் வந்து நின்று "தங்கள் உடல் நலத்திற்கே இறைவனை வேண்டுகிறேன்" என்றார். "இது ஜடவுடல்; இது வீழ வேண்டியது தான்; நீங்கள் சந்தோஷமாக வேத தர்மப் பிரசாரம் செய்யுங்கள்" என்று ரூ. 200 பெறும் சால்வை தந்தார். பீமசேனன் என்ற அன்பருக்கு ஒரு சால்வை தந்தார். "தைரியமா யிருங்கள்" என்றார். பிறகு சாந்த மௌனம். சாவின் கொடிய நிழல் படரப் படர, தயானந்தர் உள்ளம் இறைவனையே நினைத்து உள்ளே ஆழ்ந்தது. பொறுக்க முடியாத வலியும் எரிவும் இருந்தும் ஒரு பெரு மூச்சுக் கூட இல்லை.

ஆறு மணி; "விளக்கேற்றுங்கள்" என்றார். விளக்குகள் பளிச்சிட்டன. கதவு ஜன்னல்களை யெல்லாம் திறக்கச் சொன்னார். "இன்றைக்கு என்ன திதி?" என்று கேட்டார். "அமாவாசை" என்றதும், மேலே பார்த்தார். உடனே வேத மந்திரங்களை இனிமையாகக் கோஷித்தார். காயத்திரி மந்திரத்தை ஜபித்தார். உடனே சமாதியில் ஆழ்ந்தார். திடீரென்று கண் விழித்தார். "எல்லாம் வல்ல கருணைக் கடவுளே! இதுவே உன் இச்சை; ஆம், உன் இச்சை நடக்கட்டும்; உன் லீலையை என் சொல்லுவேன்! சர்வேஸ்வரனே! நின் திருவுளம் ஆகுக" என்று சொல்லி மூச்சை யடக்கிக் கொண்டு, பக்கவாட்டில் படுத்து நீண்ட மூச்சு விட்டார். அத்துடன் உடலை நீத்தார். தயானந்தர் யோகத்தினால் கர்ம சரீரத்தை உதறிச் சென்றார். சாவை வென்றார். அந்தக் காட்சியைக் கண்ட நாஸ்திகர்களும் ஆஸ்திகர்கள் ஆனார்கள். "அக்னே நய சுபதாரயே" (அக்கினியே என்னை நல்ல வழியில் நடத்து) என்ற மந்திரத்தை அவர் இறுதிக் காலத்தில் சொல்லிக் கொண்டிருந்தார். வட இந்தியா முழுதும் தயானந்தரின் மஹா சமாதியைக் கேட்டுத் திடுக்கிட்டு வருந்தியது. சஜ்ஜனசிங் தயானந்தர் ஆவிக்குக் கவி மாலை சூட்டி வணங்கினார்:—குறுகிய எண்ணங்களையும் மூடக் கொள்கைகளையும் தைரியமாகக் கண்டித்து,

வேத தருமத்தைக் கர்ஜித்த சிங்கம், தயானந்தர். தயானந்தர் சென்றது, "ஞான சூரியனே அஸ்தமித்தது போலானது." "நீர் கலந்த பாலில், பாலை மட்டும் பிரித்து எடுக்கும் அன்னம்போல், தயானந்தர் போலிக் கொள்கைகளை ஒழித்துத் தூய வேத மந்திரங்களுக்கு உயிர் கொடுத்தார்" என்று கவி சியாமள தாசர் பாடினார். "வேத கலா நிதியே! யோக ஜோதியே! கம்பீர வாணியே! உண்மைச் சுடரே! அறிவானந்தக் கடலே! கருணை மயமே!" என்று அன்பர்கள் புகழ் கூறிக் கொண்டாடினர்.

இனி என்ன? சதிகார உலகம், ஏசுநாதரைச் சிலுவை ஏற்றிய பகையுலகம்; புத்தரையும் சங்கரரையும் நஞ்சளித்துக் கொன்ற உலகம்; ஆரிய தர்ம ரக்ஷகரான தயானந்தரையும் கொன்றது. தயானந்தரின் உடல் 'பினய்' மாளிகையில் கம்பீரமாக நீட்டிக் கிடந்தது. பிரம்மசரிய பலத்தால் வாளையும் நஞ்சையும் வஞ்சப் பகைவரையும் எதிர்த்து நின்று, வேதமுழக்கம் செய்த அபினவ பாரத சிங்கம், எங்கோ பறந்தோடியது. அவர் உடல் மட்டும் வேட்டையாடிச் சோர்ந்து உறங்கும் சிங்கம் போலக் கிடந்தது. ஒரு பிரசங்கத்தின் போது தயானந்தர், "எனது பிரமசரிய பலத்தைப் பாருங்கள்; நான் இறந்தால் என் உடலைத் தூக்கப் பதினறு பேர் வேண்டும்" என்று முழங்கினர். என்னே ஆச்சரியம்! அவர் உடலை பதினறு பேர்கள் தூக்கி யிருந்தார்கள்! தன் உடல் கம்பீரமாக சாம்பலாக்க வேண்டிய இடத்தையும் குறிப்பிட்டார். அதே யிடத்தில் ஜதை யடுக்கி, சுவாமிகளின் உடலை வைத்து, அதன் மேல் சூடன், சாம்பிராணி முதலிய வாசனைத் திரவியங்களைப் போட்டனர். அந்த உடலிலிருந்து தயானந்தர் செய்த மகத்தான சேவைகளை மனமுருக அன்பர் பேசினர், உடனே உடலின் மேல் நெய் சொரிந்தனர். சுவாமி ஆத்மானந்தரும், பிரம்மச்சாரி ராமானந்தரும் கொள்ளி வைத்தனர். சுவாமிகளின் மேல் போர்த்திய சால்வை முதலில் பற்றிக் கொண்டது. அன்பர்கள் ஜதையில் தீச்சொரிந்தனர்.

இனி என்ன? உடல் சாம்பலானது. அன்று தீபாவளியானதால், இயற்கையாகவே எல்லாரும் அந்த நாளைக் கொண்டாடினர்கள். அமாவாசை இருளைப் பிளந்து, தீப ஜோதி எங்கும் பளிச்சிட்டது. அஞ்ஞான இருளைப் பிளந்து, தயானந்த ஜோதி சத்தியச் சுடராக எழுந்து, உலகெல்லாம் பரவியது.

## 18. புகழ் மாலை

தயானந்தரைக் கொண்டாடாத மகான் இடையாது. சில பெரியார் புகழ் மொழிகளை இங்கே தருவோம்:

“தயானந்தர் கடவுளின் கர்ம சாலையில், அயராது உழைத்த வேத கலைஞர்; ஜோதி வீரர்; இடர்களை எதிர்த்து வெல்லும் பரம தீரர்; சக்திமான்; ராம் மோஹன் உபநிஷத்துடன் தன் உபதேசத்தை நிறுத்திக் கொண்டார். தயானந்தர் அதற்கப்பாலும் சென்று, வேத உண்மைகளை உபதேசித்தார்.”

—ஸ்ரீ அரவிந்தர்

“வட இந்தியாவின் மார்க்கதரிசியாகிய சுவாமி தயானந்தரை வணங்குகிறேன். அவரே சிக்கல்களையெல்லாம் நீக்கித் தெய்வ பக்தியும் ஜன சேவையும் கொண்ட தெளிவான வழியைக் காட்டினார்.”

—டாகுர்

“தயானந்தர் இந்தியாவுக்கு எவ்வளவோ நல்லுபதேசங்களைச் செய்திருக்கிறார். அதில் தீண்டாமை ஒழிப்பு மிகவும் முக்கியமானது.”

—மகாத்மா காந்தி

“தயானந்தர் வீரத் திறனும் திண்மையும் கொண்ட உண்மையான துறவி. பொது ஜனங்களை உண்மை நிலைக்கு உயர்த்த வந்த தீர்க்கதரிசி.”

—ரோமா ரோலான்

“தயானந்தர் விசாரமும் ஆசாரமும், தைரியமும் ஒழுக்கமும் அறிவும் ஆற்றலுங் கொண்ட உண்மையான ஆரியத் துறவி. தியானமும் தொண்டுமாக வாழ்ந்த மகான்.”

—டி. எல். வாஸ்வானி

“எனக்குத் தயானந்த சரஸ்வதியை நன்றாகத் தெரியும். அவர் அபாரமான அறிவும் ஆற்றலும் படைத்தவர். உலகம் மதிக்கத் தக்கவர். அவருக்குச் சமானமானவர் இந்தியாவில் யாருமில்லை. இந்து மதத்தில் அவர் அரிய சீர்திருத்தங்களைச் செய்தார்.”

—ஸர் ஸையத் அகமத் கான்

“ஆங்கிலம் தெரியாமலே, சமஸ்கிருதத்தில் அருவி போலப் பேசித் தம் எண்ணங்களை வட இந்தியாவில் பரப்பியவர் தயானந்

தர். வாழ்க்கையில் ஒவ்வொரு துறையிலும் அவருடைய ஆராய்ச்சி யொளி பாய்ந்திருக்கிறது."

—ஸிட்னி வெல்ஸ்

"தயானந்தர் அபூர்வமான கல்விமான். பொருள் நிறைந்த பேச்சாளர். உண்மையான தேச சேவகர். கருணை மிகுந்த பொது நல ஊழியர். காலத்திற்கேற்ற சீர்திருத்தவாதி. சக்தியும் தைரியமுங் கொண்ட பெரிய மேதாவி."

—நீதிபதி ரானடே

"தயானந்த சரஸ்வதி வேதாவேசங் கொண்ட அத்யாத்ம வீரர். அவர், வேதத்திற்குப் புத்துயிர் அளித்தார்."

—ஸி. எஃப். ஆண்ட்ரூஸ்

## 19. ஆரிய சமாஜம்

தயானந்தரின் உள்ளத்துடிப்பு பாரத ஜாதியை, ஹிந்து தர்மத்தை, வேத கங்கை பாய்ச்சி, அமுதக்கனி குலுங்கச் செய்வதேயாம். இதற்காகவே அவர் ஸத்யார்த்தப் பிரகாசம் எழுதி வெளியிட்டார். அதைச் சாதனம் செய்து உலகெல்லாம் பரப்பவே ஆரிய சமாஜம் கண்டார். இந்தியா முன்னேறி, ஒரு சக்தி பெற்ற வல்லரசென உலகின் முன் விளங்க வேண்டுமானால், தயானந்தரின் வழியைப் பின்பற்ற வேண்டும். அவர் காட்டிய வழி நமது பாரத ரிஷிகளின் அருள் வாக்கையே உயிராகக் கொண்டது. ஆரிய சமாஜம் ஒன்றே இன்று வேத ரிஷிகளின் வாக்கையும் வாழ்வையும் தன் உயிர்த் துடிப்பாகக் கொண்டு, உலகெல்லாம் அரிய பெரிய பொது நலம் புரிந்து வருகிறது. அதுவே இன்று பிரமசரிய குருகுலக் கல்வியைப் போற்றுகிறது.

என்னைச் சுற்றி ஏராளமான ஆரிய சமாஜிகளும்—குரு குல பிரமசாரிகளும் இருக்கிறார்கள். அவர்கள் நேர்மையும், ஒழுக்கமும், அயரா உழைப்பும், அறிவும் ஆற்றலும் வியக்கத்தக்கவை. சுவாமி சிரத்தானந்தர் கண்ட காங்கிரி குரு குலமும், லாகூரிலுள்ள தயானந்த வேத பாடசாலையும், ஸூபா குரு குலமுமே, ஆரிய சமாஜத்தின் பிரமசரிய வித்யா சேவைக்குச் சிறந்த விளக்கமாகும். ஆண் பெண் சரி நிகர்; இருவருக்கும் கல்வி தந்தது சமாஜம். ஆரிய சமாஜம் என்றால் 'அது வெறும் வடநாட்டு வியாபாரம், தென்னாட்டுக்குப் பிரதிவாதி' என்று சிலர் பாய்கிறார்கள். அது பிசகு. தயானந்தர் உள்ளம் உலகளாவிய கருணையுள்ளம். அவர் இன்னும் சில காலம் இருந்திருந்தால் தென்

ஆர்ய சமாஜ மந்திரம் (மதருஸ்)




சீரியர் கூடும் ஆரிய சமாஜம்!

நாட்டுக்கும் வந்து தமிழகத்திலும் தொண்டு செய்தே யிருப்பார். ஆனால் இன்று அவர் ஆத்மா எங்கும் பரவி, எத்தனையோ நீரச் செயல்களை, அறிவுப் பணிகளை ஊக்குகிறது. தேச முன்னேற்றத் திற்கான தீவிர இயக்கங்களிலெல்லாம், ஆரிய சமாஜிகளைக் காணலாம். நமது சென்னையிலும் ஆரிய சமாஜம் உள்ளது. ஒவ்வொரு நாளும் அதன் தொண்டர், சமுதாய சேவை செய்து வருவதை நாம் நேரிற் காணலாம். நமது நாட்டில் சாதிமத வகுப்பு வாதமும் பேதமும் இல்லாமல், எல்லாருக்கும் ரிஷி ஞானத் தையும் குரு குலக் கல்வியையும்,வெள்ளம் போலத் தருவது, ஆரிய சமாஜம்; நமது சமுதாயத்திற் படிந்த, மூடக் கொள்கைகளையும், நம்மைக் கேலிக்கிடமாக்கிய அசட்டு மாமூல் பழக்கங்களையும், கண்மூடித்தனங்களையும் ஒழித்தது ஆரிய சமாஜம். பாலிய மணம், கிழட்டுக் கலியாணம், இளம் விதவையின் கண்ணீர், தீண் டாமை, பாராமை, தொடாமை போன்ற விநோதமான பீடைகளை ஒழித்து, ஆணும் பெண்ணும் சரிநிகராகத் தலை நிமிர்ந்து நடக்கச் செய்தது, ஆரிய சமாஜம். பேய் பிசாசு, பில்லி, பூச்சாண்டி, ஜக்கம்மா, ஆருடம், கோடாங்கி முதலிய முழு மூட ஆர்ப்பாட் டங்களுக்கு, அஞ்சாமல், இந்தியர் மனச்சாட்சியின் வழியே, வேத தர்மத்தையே தைரியமாகப் பின் பற்றச் செய்தது ஆரிய சமாஜம். தேச சுதந்தரத்திற்குச் சக்தி பெற்ற வீரரைத் தந்தது ஆரிய சமாஜம். ஊர்ச் சோற்றை உண்டு, ஒரு வேலையும் இல்லாது, சும்மா வயிற்றைச் சுமந்து திரியும் போலித் துறவை ஒழித்து, துறவிகளைப் பொதுநலத்தொண்டிற்கும், தியாகத்திற்கும் ஊக்கியது ஆரிய சமாஜம். அரசியல், சமுதாயம், கலை, கல்வி, முதலிய எந்தத் துறையிலும், அநீதியை அநீதியெனக் கண்டித்து, உயிரைக்கொடுத் தும், உண்மையைக் காக்கும் தீர வீர சூரர்களைத் தேச முன்னணி யில் வைத்தது ஆரிய சமாஜம். ஆரிய சமாஜ தீரரான சிரத்தா னந்தர் சத்தியாக்கிரகப் போரில், பிரிட்டிஷ் பிரென் பீரங்கிக்குத் தன் மார்பைக் காட்டிய காட்சி, இன்று நினைத்தாலும் மயிர் பொடிக்கும், பயங்கரத் தியாகக் காட்சியாகும். சுவாமி நாராயண சுவாமி ஐதராபாத்தில் ஹிந்து தர்மத்திற்காகச் செய்த தியாகங்க ளும், பஞ்சாபில் பாய் பரமானந்தர் செய்த அபாரமான ஹிந்து தர்ம சேவையும், இந்து சரித்திரத்தில் இரத்த எழுத்தால் எழுதத் தக்கவை.

நமது சமுதாயம் அன்னிய மதங்களின் மாய வலையால், தொகையிலும், பலத்திலும், மனத்திட்பத்திலும் அருகி மெலிந்து

இனி என்ன செய்வோம் என்று ஏங்கி நின்றபோது, ஹிந்து தர்மத்தைத் தாங்கி நின்றது, ஆரிய சமாஜம், பிற மதம் புகுந்தவர்களையெல்லாம் சுத்தி செய்து, ஹிந்து தர்மத்திற்குத் திருப்பியது தயானந்தரின் ஆரிய சமாஜம். இலட்சக்கணக்கான கிறிஸ்துவரும், முஸல்மான்களும் மறுபடி ஹிந்து தர்மத்திற் புகுந்து இந்தியராகச் செய்தது ஆரிய சமாஜம். ஆரிய சமாஜம் இல்லா விட்டால் இன்று பலகோடி இந்துக்கள், நமக்கே அன்னியராகி, பிரதிவாதிகளாயிருப்பார்கள். இந்து ஜாதி மறுபடி உலகில், ஒன்று சேர்ந்து, பலம் பெற்று, ஆத்மச் சிங்கக் கூட்டமாக நிற்கச் சேவை செய்தது ஆரிய சமாஜம். இந்தத் துணிகரமான சேவையில் எத்தனையோ ஆரிய சமாஜிகள் தங்கள் உயிரையும், தியாக பலியாக தர்மத்தின் பலி பீடத்தில் தந்திருக்கிறார்கள். மாப்பிள்ளைக் கலகத்தின்போது, பலாத்கார மத மாற்றம் நடந்தது. வட நாட்டில் பலாத்கார மதமாற்றத்தைப் பற்றிக் கேள்வியில்லை. மதம் மாறினவர்களையெல்லாம் மறுபடியும் சுத்தி செய்து காயத்ரி உபாசகராக்கி, ஹிந்து தர்மத்தில் சேர்த்து, அதனால் எதிரிகளிடம் கத்திக் குத்துப் பட்டு இறந்த ஆரிய சமாஜிகளை நினைப்போம். 'சுத்திஸங்கடன்' இயக்கத்தில் தீவிரமாகப் பாடுபட்டு, மதவெறித் துப்பாக்கியால் இறந்த சிரத்தானந்தரை நினைப்போம். தன் ஆயுள் முழுவதையும் ஹிந்து தர்ம புனருத்தாரணத்திற்கே பலிதானமாக்கி, அளவற்ற தியாக சேவை செய்த பாய் பரமானந்தரை நினைப்போம். தேச விடுதலைக்காகச் சிறையிலும், அன்னிய நாட்டிலும் வருந்திய தீரரான லாலா லஜபதிராயை நினைப்போம்.

இவ்வாறு தயானந்தரின் உயிர்த் துடிப்பு, கோடிக்கணக்கான வீரர் உள்ளத்தில் துடித்து, ஹிந்து தர்மத்திற்கே ஆவேச மின்சாரமாக, சுதந்தரக் கனலாகப் பரவி வளர்கிறது. தயானந்தர் இன்று நமது உயிர்த் துடிப்பாக இரத்த ஓட்டமாக, ஆவேச வெள்ளமாக, இந்து சமுதாயத்தின் வேத ஜோதியாக என்றும் இருக்கிறார். வாழ்க தயானந்த ஜோதி!

தயானந்தர் பாரத ரிஷிகளின் வாக்குகளைக் கொண்டே, தமது கொள்கையை நிலை நாட்டினார். ஆதலால் ரிஷிவாக்குக் கொண்டே ஹிந்து தர்மத்தை அறிய வேண்டும்.

## 20. ஹிந்து தர்மம்

ஆரியன் என்றால் நேரியன் சீரியன் சீலவான், அறிவாளி என்று பொருள். இது ஒரு சாதிப் பெயரன்று; இதில் ஆரிய

திராவிட விவகாரம் இல்லை. இந்தக் காலம் இந்தியா, இந்து என்ற பெயர்கள் பரவி விட்டன; ஆதலால் நாமும் 'இந்து' என்ற பெயரையே காலத்தை ஒட்டிப் பயன்படுத்துகிறோம். ஆரிய தர்மத்தை ஹிந்து தர்மம் என்கிறோம். உலகில் எந்த நாட்டையும் விட அறமும், அன்பும், அமைதியும், அத்யாத்ம ஞானமும் பொலிந்து விளங்கும் நாடு நமது இந்தியா, பாரத தேசம் புண்ணிய பூமி. இந்தியாவில் வசிப்பவர்கள் அனைவரும் இந்துக்களே. இந்து என்றால் ஸப்த ஸிந்துவாசி என்பது பொருள். வேதத்தில் ஸப்த ஸிந்து ஆழ்ந்த பொருளுடையது. ஸ்தூலம், பிராணன், மனம், விக்ஞானம், ஆனந்தம் சித்து ஸத்து ஆகிய ஏழு சேதனப் படிகளையும் கடந்து, துரிய நிலையில் உள்ள முற்றறி யோகியே ஸப்த ஸிந்துவாசி. யோகக் கலை இந்தியாவுக்கே சிறப்பானது; ஆதலால் ஆத்யாத்ம யோகத்தில் வாழ்பவனே ஹிந்து. இதை ஒவ்வோர் இந்தியனும் அறிக. இந்தியர் சிந்து முதல், கடல் வரையிலுள்ள பாரத புண்ய பூமியை, இந்தியாவை, தாய் நாடாகக் கொண்டவன் என்று ஹிந்து தர்மா வேசங் கொண்ட வீரசாவர்க்கார் அழகாகச் சொல்லுகிறார்.

आसिंधु सिंधु पर्यन्ता
यस्य भारत भूमिका ।
पितृभूः पुण्यभूश्चैव
स वै हिन्दु रिति स्मृतः ॥

ஆ ஸிந்து ஸிந்து பர்யந்தா
யஸ்ய பாரத பூமிகா
பித்ருபூ புண்ய பூஷ்ச்சைவ
சர்வை ஹிந்து ரிதி ச்மரத:
சிந்து—கடல் வரை புண்ய தேசந் தன்னை
எம் புனிதத் தந்தை நிலம் என்பான் ஹிந்து.

## 21. வேதம்

ஹிந்து சமுதாயம் சுத்தாத்ம தர்மத்தின் மேல் கம்பீரமாக எழுந்து நிற்கிறது. அந்தத் தரும விளக்கமே வேதம்.

வேதம் என்றால் அறிவு, உள்ளறிவு, சுத்தாத்ம ஞானம் எனப் பொருள். அது அருள் வாக்கு. ஜீவ ப்ரம்மைக்கியமான ரிஷிகள் உள்ளத்தில், ஓங்காரமாக எழுந்த மணிவாக்குகளின் தொகுதியே வேதம்.

" ஸாக்ஷாத் க்ருத தர்மாண
ரிஷியோ பபூவு !

" மஹரிஷிகள் உள்ளே நேராகக் கண்ட தர்மமே வேத மந்திரங்கள் " என்று யாஸ்கர் தமது நிருக்தத்தில் சொல்லுகிறார்.

வேதம் ஒன்றே ; வேதம் ஒன்றின் விளக்கமே ருக், யஜுர், ஸாமம், அதர்வணம் என்பன. ஒரே வேதத்தின் நான்கு உறுப்புகளே. வேதம் ஒரே மூச்சில் அருளப் பட்டது ; வேதம் ஆத்மானுபவப் பாட்டருவி. மனிதன் தெய்வத் தன்மை பெறுதற்கு வேண்டிய எல்லா அறிவும், எல்லாப் பயிற்சிகளும் வேதத்தில் உள்ளன. உலகச் சமயங்களின் தாயூற்று வேதமே ; இந்திய நாகரிகத்தின் உயிர்த் துடிப்பு வேதமே. இந்தியாவில் தோன்றிய தெய்வப் புலவர்க ளெல்லாரும் வேத வழி வாழ்ந்தார்கள், மொழிந்தார்கள். ஹிந்து தர்மத்தின் உள்ளமும் உயிரும் வேத ஞானமே. வேத வியாசருக்கும் சங்கரருக்கும் பிறகு வேதத்தின் உண்மையை விளக்கின மகான் தயானந்தரே. வேத சம்பந்தமான அருள் நூல்களையே தயானந்தர் தமது சத்தியார்த்தப் பிரகாசத்தில் எழுத்தாண்டார்.

இக்காலம் ஹிந்து தர்மம், குண்டரின் வெறிவாள் முனையில் துடி துடிக்கிறது. தர்மம் இழந்தால் உயிர் இழந்தது போலாகும். ஹிந்துக்கள் தமது தருமத்தை அறியாது, கை சோர விட்டே, கோடானு கோடிப்பேர்களைப் பிற மதம் புகுந்து நமக்கே அன்னியராக்கினர். இனியாவது ஹிந்து சமுதாயம் ஒன்று சேர்ந்து, வீறு கொண்டு ஓரினம், ஓர்மெய் நெறி, ஒரே வேத ஞானம் பெற்று, முன்னேற வேண்டும். வெள்ளைக்காரர்கள் வேத ஞானத்தைத் தேடி இங்கே வருகிறார்கள். புத்தகம் போட்டு விற்கிறார்கள். நாமோ நமது வேத நூல்களை அறியாது, ஒருவரோடொருவர் சேராது, அன்னிய மாயத்திற்குக் குனிந்து கொண்டிருக்கிறோம். இந்த நிலை மாறி நாம் நமது ரிஷி ஞானத்தில் வாழ்வை ஊன்றி, தற்காலத்தின் பெருமையான கலை ஞானத்தை உரமிட்டு, வளர்க்க வேண்டும். வேதங்கள் எல்லையற்ற அறிவுச் சுரங்கங்கள். ருக் வேதம்(8 அஷ்டகம், 64 அத்தியாயம், 2024 வர்க்கம்) 10,522 மந்திரங்கள் ; யஜுர் வேதம் (40 அத்), 1,975 மந்திரங்கள் ; ஸாம வேதம் (27 அத், 185 காண்டம்) 1185 மந்திரங்கள் ; அதர்வ வேதம் 20 காண்டம் 730 ஸூக்தம் 5,977 மந்திரங்கள் ஆக நான்கு வேதங்களும் 20,349 மந்திரங்களைக் கொண்டன.

இவற்றைத் தவிர வேத இலக்கியத்தில் பல கிளைகளுண்டு. 1127 சாகைகள், பிராமணங்கள், உபநிஷத்துக்கள்; நான்கு உப வேதங்களான, ஆயுர் வேதம், அர்த்த வேதம், கந்தர்வ வேதம், தனுர் வேதம்; ஆறு வேதாங்கமாகிய சிக்ஷை, கல்பம், வியாகரணம், நிகண்டு, சந்தசு, ஜோதிஷம்; ஆறு தர்சனங்களான நியாயம், வைசேஷிகம், பதஞ்சலி யோகம், கபிலரின் சாங்கியம், ஜைமினியின் பூர்வ மீமாம்சம், பாதராயணர் வேதாந்தம், உத்தர மீமாம்ஸம்.

வேதங்களின் முடிவான விளக்கமே வேதாந்தம்; இவை வேதங்கள் அல்லது பிராமணங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப் பட்ட உப நிஷத்துக்கள்:

வேதத்திற்கு இருபத்தேழு விரிவுரைகள் உண்டு. சாயனர் மஹீதரர், பட்ட பாஸ்கரர், இராவணன், அஸ்தாமலகர், ஆனந்த தீர்த்தர், யாஸ்கர் ஆத்மானந்தர் முதலியோர் விரிவுரை, புகழ் பெற்றவை. என்றாலும் சாயனர், மகீதரர் யாஸ்தர் ஆகிய மூவர் உரைகளே வழக்கத்தில் உள்ளன. ஆனால் இந்த உரைகளெல்லாம் உரைபோடக்காணு. வேதப் பொருள் அவ்வளவு ஆழ்ந்தகன்றுள்ளது. வேதபாஷை ஆதிகால சமஸ்கிரதம். அதற்கும் பிற்கால பாஷைக்கும் வேறுபாடு அதிகம். வேதத்தை அறியக்கூடிய துணைக் கருவிகளெல்லாம் மறைந்து போயின. இக்காலம் மேனாட்டுப் புலவர் சிலரும் ஆங்கிலம் படித்த இந்தியர் சிலரும் வேதத்தில் கை வைக்கிறார்கள். அவர்கள் வேத உள்ளத்தை உள்ளபடி காண முடிவதில்லை. ஏனெனில் வேதம் வெறும் இலக்கியமன்று; அது முழுதும், வரிக்கு வரி அத்யாத்ம உருவகம். அதை அறிய ஆத்ம சித்தியும், அருள் விழியும் பெற்ற மஹர்ஷிகளாலே தான் முடியும். தற்காலத்தில் மஹர்ஷி தயானந்தர் ஸ்ரீ அரவிந்தர் ஆகிய இரண்டு மஹான்களே வேதத்தின் கருத்தைத் தெளிவாக அறிந்திருக்கிறார்கள். தயானந்தர் வேத நெறியைக்கொண்டு, நமது பாரத தேசத்தையே உய்விக்கும், சிறந்த சமுதாய வாழ்வை விளக்கினார். இக்காலம் பழைய சமஸ்கிரதத்தைப் படித்து, வேதத்தை அறிவது கடினம். மிகச் சிலருக்கே முடியும். வேதத்தைத் தெளிவாக ஆங்கிலம், இந்தி, வங்கம், தமிழ் முதலிய மொழிகளில் ஆக்கி எல்லாரும் படிக்கச் செய்ய வேண்டும்.

பாரத சக்தி மஹா காவியத்தில், சாதன காண்டத்தில் நான்கு வேத சாரத்தையும் தெளிவான அகவற்பாவில் எல்லாரும் பாராயணம் செய்யும்படி எழுதியிருக்கிறேன். கண்டு கொள்க. வேதம், ஒரே

கடவுளை உள்ளத்தில் தியானத்தினால் அடைந்து, அதுவாகவே உலகைக்கண்டு, எல்லாரும் இன்புற வாழவே உபதேசிக்கிறது. வேதம் சுத்த சுதந்தர சமத்துவ சத்திய வாழ்வை விளக்குகிறது. இந்த வாழ்வால் மனிதன் தெய்வத் தன்மை பெற வழி காட்டுகிறது.

இந்த வழியையே தயானந்தர் தமது சத்தியார்த்தப் பிரகாசத்தில் விளக்குகிறார். அதைப் படித்தாலே வேதாத்யயன பலன் உண்டாகும்.

## 22. சத்யார்த்தப் பிரகாசம்

சுவாமி தயானந்தர் உலகிற்கு அளித்த ஒப்புயர்வற்ற ஞான நிதி சத்யார்த்தப் பிரகாசமே. அதை ஒரு உபவேதம் என்றும் சொல்லலாம். இக்காலம் சமுஸ்கிரதத்தில் பழைய வேதத்தைப் படித்து, அறிபவர் மிகவும் அரியர். இக்காலம் இந்திய நாட்டு மொழியாகத் தக்கது என்று வற்புறுத்திய மஹான் தயானந்தரே. தயானந்தருக்குப் பிறகு மகாத்மா காந்தியே ஹிந்தியை ராஷ்டிர பாஷையாக வற்புறுத்தினார். தயானந்தரின் தாய்மொழி குஜராத்தி. அவர் பேசியது சம்ஸ்கிரதம். என்றாலும் அவர் முயன்று ஹிந்தியிலேயே சத்யார்த்தப் பிரகாசம் எழுதினார். இந்தி அதி விரைவில் தேசீய பாஷையாகு மென்பது அவரது தீர்க்க தரிசனம். தயானந்த சரஸ்வதி பதினேழாண்டுகள் (1867-1883 வரையில்) வேத தருமத்தைப் பற்றிப் பிரசாரம் செய்தார். முதல் ஒன்பது வருஷம், அவர் சமஸ்கிரதத்திலேயே பேசினார். 1874 வரையில் அவர் எதையும் எழுதிவைக்காமல், வாயினாலேயே உபதேசித்தார். பிறகு தான் அவர் இந்தியில் பேச ஆரம்பித்தார். ராஜா ஜயக்ருஷ்ண தாஸ், சுவாமிஜீயின் உபதேசங்களை யெல்லாம் எழுதி அச்சிட விரும்பினார். இவர் காசியில் டிபுடி கலக்டராக இருந்தார். இவர் சுவாமிகளின் பிரசங்கங்களைக் கருத்துடன் கேட்டு வந்தார். அவற்றைப் புத்தகமாக்கினால், உலகிற் கெல்லாம் பயனாகும் என்று மன்றாடினார். சுவாமிகள் ஒரு எழுத்தாளனைக் கொண்டு, அவர் இச்சைப்படி செய்யலாமென்று இசைந்தார். ஜயக்ருஷ்ணன் தாஸ், பண்டித சந்திர சேகரரை நியமித்தார். அன்று முதல் (12-6-1874) சத்தியார்த்தப் பிரகாசம் தொடங்கியது. சுவாமிகள் சொல்லச் சொல்ல பண்டிதர் எழுதி வந்தார். 1875-ல் காசி ஸ்டார் அச்சுக்கூடத்தில் சத்யார்த்தப் பிரகாசம் முதற் பதிப்பு வெளி வந்தது. முதற் பதிப்பில் உள்ள சில குற்றங்களை இரண்டாம் பதிப்பில் திருத்தினார். சத்தியார்த்தப் பிரகாசத்

தில் முழு உண்மையைத் தவிர வேறெதற்கும் இடம் கிடையாது. இரண்டாவது பதிப்பு வேத யந்திராலயத்தில் அவராலேயே வெளியிடப் பட்டது. அவரே அச்சுப் பிழையைத் திருத்தினர். காலை எட்டு மணிக்கு தயானந்தர் சத்தியார்த்தப் பிரகாசம் சொல்லி வந்தார். ஒரு மணிக்கு அச்சுத் தாட்களைத் திருத்தினர். அந்தக் காலமே சத்தியார்த்தப் பிரகாசத்திற்கு நல்ல மதிப்பிருந்தது. எதிர்ப்பும் அதிகமா யிருந்தது. எவர் எதிர்ப்பையும் பாராட்டாமல் உண்மையை உண்மை என்று சொன்னவர் தயானந்தர். சத்தியார்த்தப் பிரகாசம் என்றால் உண்மை விளக்கம்.

சத்தியார்த்தப் பிரகாசம் பதினன்கு பகுதிகளாகப் பிரிக்கப் பட்டது. முதல் பத்துப் பகுதிகள் வேத தருமத்தை விளக்குகின்றன. இவை முதற் புத்தகம். இரண்டாம் புத்தகமாகிய நான்கு பகுதிகள், இந்தியாவில் உள்ள வேத விருத்தமான மதங்களை அலசிப் பார்த்து, குற்றங்களை எடுத்தெறிந்து, வேத தருமத்தின் உயர்வை விளக்குகின்றன. சத்தியார்த்தப் பிரகாசத்தின் முதல் அத்தியாயம் "எல்லா உயிர்க்கும் இறைவன் ஒருவனே; வேதத்தில் வரும் தெய்வப் பெயர்களெல்லாம் ஒரே கடவுளின் குண விளக்கமே" என்பதைத் தெளிவாகக் காட்டுகிறது. இரண்டாவது அத்தியாயம், மக்கட் பேறு, பிள்ளை வளர்த்தல், பெற்றோர்களின் நடைமுறை முதலியவற்றை விளக்குகிறது. மூன்றாவது பகுதி, ஆசிரிய மாணவர் நடை முறை, பிரமசரியம், நல்லொழுக்கம், புலனடக்கம், நன்னூற் பயிற்சி, சாதி மத பால் வேற்றுமை யில்லாமல், எல்லாருக்கும் வேதத்தை உபதேசித்தல் ஆகியவற்றை விளக்குகிறது. நான்காம் பகுதி, திருமணம் செய்யும் முறை, வர்ண தர்மம், பிரம்ம க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் தன்மை, பெற்றோர் கடமை, பெண்கள் நடைமுறை, இல்லற ஒழுக்கம், இல்லறத்தார் கடமை, ஆசிரியர் கடமை, மறுமணம், சந்ததி உற்பத்தி முதலிய விஷயங்களைப் பற்றி விரிவாகச் சொல்லுகிறது. ஐந்தாவது பகுதி, வானப்பிரஸ்த சந்நியாசி ஆசிரமங்களையும், அவற்றிற்குரிய தர்மங்களையும், சந்நியாசி பொது நலத் தொண்டு செய்ய வேண்டும் என்பதைப் பற்றியும் விளக்குகிறது. ஆறாவது பகுதி, அரசாட்சி முறையைப் பற்றி விரிவாக விளக்குகிறது. அரசன், மந்திரி, குடிகள், ஜன சபை வரி சட்டம், சேனை, ராணுவப் பயிற்சி, யுத்த தந்திரங்கள், நீதி நெறி, குற்றத் தண்டனை முதலியவற்றைப் பற்றி தரும சாஸ்திரக் கோட்பாடுகளுடன் அற்புதமாக விளக்குகிறது. ஏழாம் பகுதி

கடவுள், வேதம், ஆத்மா, ஆத்மாவுக்கும் கடவுளுக்கும் உள்ள சம்மந்தம்; துதி, உபாசனை, தியானம், சித்த சுத்தி, வேதப் பொருள் முதலியவற்றைப் பற்றிச் சொல்லுகிறது. எட்டாம் பகுதி உலகை ஆக்கல், அளித்தல், அழித்தல், பல மத ஆராய்ச்சி, ஆறு தரிசன விளக்கம், தத்துவ சாஸ்திரங்கள் முதலியவற்றை விளக்குகிறது. ஒன்பதாம் பகுதி ஞானம், அஞ்ஞானம், பந்தம், மோக்ஷம் முதலியவற்றை விளக்குகிறது. பத்தாம் பகுதி, சுகாதார ஒழுக்கம், உணவு நெறி, பிரயாணம் முதலிய பல விஷயங்களைப் பற்றிப் பேசுகிறது. பதினோராம் பாகம், இந்தியாவில் வழங்கும் பல மதங்களை ஆராய்ந்து, அவற்றிலுள்ள குற்றங்களைக் கண்டிக்கிறது. வாம தாந்திரம், பஞ்ச மகார பூஜை, சாருவாகம், ஜைனம், பௌத்தம், சைவம், வைஷ்ணவம், சாக்தம் சங்கரம் முதலிய எல்லா மதங்களையும் கண்டிக்கிறது. தற்காலத்தில் எழுந்த வல்லப பாகவத, நாராயண மதங்களைக் கண்டிக்கிறது. இன்னும் தற்காலத்திற்கு உதவாத பழங்குப்பைகளை யெல்லாம் ஒதுக்கித் தள்ளிப் பரிசுத்தமான வேத நெறியே நெறி என்று விளக்குகிறது. பன்னிரெண்டாம் பாகம் நாஸ்திகம், பௌத்தம், ஜைனம், சாருவாகம் இவற்றின் குண தோஷங்களை விளக்கி, உயிர்க் கொலையையும் புலாலுண்பதையும் கண்டிக்கிறது. பதின்மூன்றாம் பாகம் கிருஸ்துவ மதத்தின் குண தோஷங்களை ஆராய்கிறது ; பைபிளை அலசிப் பிழிகிறது. பதினான்காம் பாகம், கொரானையும் இஸ்லாமியத்தையும் ஆராய்ந்து, குற்றங்களை விளக்குகிறது. நூலின் முடிவில் தயானந்தர் தமது கொள்கைகளைச் சுருக்கமாக விளக்குகிறார். தயானந்தர் வழியைப் பின்பற்றி யிருந்தால், இன்று நாற்பது கோடி இந்தியர்களும் நாற்பது கோடி இந்துக்களாகவே இருப்பார்கள் ; பாகிஸ்தானுக்கே இடமிராது. இந்து சாதி சக்தி பெற்று வீர தீரக் கூட்டமாக உலகின் முன் நிமிர்ந்து நிற்கும். தயானந்தர், ஆண் பெண் இரு பாலாரும் நல்ல கல்வியும், மனவுறுதியும், உடலுறுதியும், வீறும், ஆத்ம சக்தியும் பெற்று, தெய்வப் பொலிவுடன் வாழ, வழி காட்டினார். இன்று இந்தியா பேருக்கு விடுதலை பெற்றிருக்கிறது. ஆனால் அதன் உள்ளம் பிளவு பட்டு இரத்தம் ஒழுகுகிறது. இந்தியாவிற்குரிய வேத தருமம் மூலையில் ஒதுக்கப் பட்டிருக்கிறது. அன்னிய தருமங்கள் மத வெறி கொண்டு இந்து சமுதாயத்தை உயிர் பிளக்கத் துள்ளி வருகின்றன. மறுபடியும் இந்தியா உய்ய வேண்டுமானால் தயானந்தர் காட்டிய வழியே செல்ல வேண்டும். அந்த வழி சத்தியார்த்தப் பிரகாசத்தில் உள்ளது.

ஸத்தியார்த்தப் பிரகாசம் தெளிவான தமிழில் வெளி வருகிறது. எதிர் பாருங்கள். அதன் கொள்கை யெல்லாம் புது யுகப் பாட்டில் அடங்கி யுள்ளன—பாடுங்கள் !

# 23. ஸமாஜ பஜனை

## 1. ஓம்

பேஹாக்—ஆதி

பல்லவி

ஓம் சுத்த சச்சிதானந்தம்—உண்மை
ஒன்றதன் சக்தி அனந்தம்

அநுபல்லவி

நாம ரூப மத பேதம்—இல்லா
ஞான ஜோதி சுக போதம்—தத்ஸத் (ஓம்)

சரணம்

இது வெள இருதயத்தியானம்—தனில்
இலகிடும் சைதன்ய வானம்
பொது நிலையாகிய பொருளே—நாம்
போற்றிடுவோம் திருவருளே—தத்ஸத் (ஓம்)

## 2. வேதம்

தீர சங்கராபரணம்—திஸ்ர ஏகதாளம்

ஆதியான ஜோதியை
அறிந்து நின்று வாழ்வதே
வேத சார மாகுந் தூய
மெய்யருள் வழியதே (ஆதி)

துள்ளுகின்ற பேய் மனத்
துடிப்பினை அடக்குவோம்
உள்ளுணர்ந்து தியானத்தில்
உணரும் உண்மையின்பமே (ஆதி)

கண்ணிற் காணும் உலக மெல்லாம்
காணறிய ஓர் மயம்
எண்ணிலா வியன்களை
இயற்றுகின்ற சின்மயம் (ஆதி)

வானம் போல் விரிந்த நெஞ்சும்
மலையினின் றிரங்கிடும்

தேனருவி போல வாழ்வும்
  தெய்வ வாழ்க்கையாகுமே (ஆதி)

சூரியனைப் போலவே
  சுடர் விடும் கடமையும்
காரிணை கருணையும்
  கருதி நன்மை செய்குவோம் (ஆதி)

பிச்சை யின்றி சோம்ப லின்றிப்
  பேதமைகள் இன்றியே,
அச்சமின்றி யாவருக்கும்
  அன்பு செய்வ தின்பமே (ஆதி)

தனையறிந்து தன்னுயிர்த்
  தலைவனை யறிந்து நல்
வினையறிந்து மனமறிந்து
  வீறு கொண்டு வாழுவோம் (ஆதி)

பூத்துதிரும் பூவைப் போன்ற
  பொய்யுடலின் கட்டிலா
ஆத்ம ஞான மாவதே
  அமரத்தன்மை யாகுமே (ஆதி)

## 3. தயானந்த ஜோதி

பேஹாக்—ஆதி

உத்தம ஆரிய பாரத ஜாதி
  உய்திட வந்த தயானந்த ஜோதி
சத்திய வேதத்தைச் சாற்றினன் யோகி—அதைச்
  சாதனம் செய்வோம் சகோதர ராசி (உத்)

அந்தண உள்ளமும்
  ஆண்மையும் வீறும்,
ஆயிரந் தொழில்களும்
  ஆனந்தம் ஊறும்.
பந்த மில்லாத
  சுதந்தரத் திருவும்
பழுதறு பொது நலப்
  பண்புடன் பெருகி (உத்)

ஆரணஞானமும்
அருங்கலை யறிவும்
அரிய பிரமசர்ய
விரத நிறைவும்,
பூரண சக்தியும்
புலமையும் பொங்க
புண்ணியத் தேவர்கள்
பூமிசை யிலங்க (உத்)

அவ்லிய மாயத்தை
அடியுடன் போக்கி,
அதர்மத்தை நீக்கி நல்
அன்பினை ஊக்கி,
உன்னத உள்ளத்தில்
ஒற்றுமை கூட்டி,
உலகினில் ஒரு குல
உண்மையை நாட்டி (உத்)

பாரினில் வறுமையும்
மடமையும் இன்றியே,
பயம்பிணி துயரின்றி
நயமுடன் ஒன்றியே
வீரர்களாய்ப் பர
சூரர்களாய், ஆத்ம
தீரர்களாய் நர
தேவர்களாய் எங்கள் (உத்)

## 4. தயானந்த சேவை

பல்லவி

வந்தனை செய்திடுவோம்—தயானந்த
வள்ளலை வாழ்த்திடுவோம்
சிந்தனை செய்திடுவோம்—அவன் வழி
தேசப்பணி புரிவோம். (வந்)

வேதம் முழங்கிடுவோம்—வீடுதோறும்
வேள்விக்கனல் வளர்ப்போம்—ஞானச்
சோதியைத் தூண்டிடுவோம்—இருளை
துரத்தி யோட்டிடுவோம் (வந்)

கல்வி பரப்பிடுவோம்—குருகுலங்
கண்டு நலம் புரிவோம்

வெல்லுந்திறல் வளர்ப்போம்—ப்ரம்மச்சர்ய
வீறு மிகப் பெறுவோம் (வந்)

அன்பை வளர்த்திடுவோம்—அதுவே
ஆரியரின் சிறப்பாம்
பண்பை வளர்த்திடுவோம்—சமரசப்
பான்மை வளர்த்திடுவோம் (வந்)

தணலுந் தெய்வவொளி—சுடரத்
தலை நிமிர்ந்திடுவோம்—நடைப்
பிணமெனத் தளரோம்—சக்திமிகப்
பெற்றுமுன் னேறிடுவோம் (வந்)

தீரர்களைப் படைப்போம்—திருவருட்
செல்வர்களைப் படைப்போம்
பூரணரைப் படைப்போம்—பொதுநலப்
புண்ணியங்கள் புரிவோம் (வந்)

ஒன்றே பிரம்மம் என்போம்—அதன் கோயில்
உலகம் என்றுணர்வோம்
ஒன்றே நமது குலம்—அத்யாத்ம
உண்மை யொன்றே மதமாம் (வந்)

ஓம் தத்ஸத் ஓம் தத்ஸத் ஓம்—பரப்ரஹ்மம்
ஓம் சச்சி தானந்தமாம்
ஓம் தத்ஸத் ஓம் தத்ஸத் ஓம்—பரம்பொருள்
ஓம் ஸச்சி தானந்தமாம் (வந்)

## 5. சிரத்தானந்தர்

வாழ்க ஸ்ரீச்ரத்தானந்தர்
வளருமாந்தர் நெஞ்சிலே
சூழ்ந்தவரைச் சுட்டகுண்டு
சுடுக துர்ப்ப லங்களை. (வா)

நெடிய தீபஜோதி போன்ற
நிகரிலாத மேனியான்,
படிகம் போல் மனத்தினன்
பரந்தநல் லறிவினன். (வா)

## ஸ்ரீ சிரத்தானந்தர்



குண்டுக்கும் அஞ்சாது கொள்கை கடைப்பிடித்துத்
தொண்டுக்கே வாழ்ந்த துறவி !

வீரம்வீரம் என்று பேசி
　　விம்முகின்ற தோளினன்
தீரமான செய்கை கொண்ட,
　　தியாகிநல் விவேகியே. (வா)

வேத தர்மம் எங்கும் பரவ
　　வீறுகொண்டு தொண்டுசெய்
ஸ்ரீதயானந்த குருவின்
　　ஜெயமுரச மன்னவன். (வா)

மாசிலா பிரம சர்ய
　　வாழ்வுடன் கலைவளர்
தேசமே சிறந்ததென்று
　　செய்துகாட்டும் சித்தனும். (வா)

இன்னொரு மதம் புகுந்த
　　இந்தியரை மீட்டனன் ;
தன்னறம் தழைக்க வந்த
　　தருமவீரன் வாழ்கவே ! (வா)

## 6. ஒரே இந்தியா

ஒன்று சேர்க இந்தியா
　　என்று சேர்ந்து கூவுவோம் !
இன்று காணும் தொல்லைகள்
　　ஏகி நன்மையாகவே !

வகுப்பு வாதப் பேயினை
　　மனவுறுதி கொண்டு நாம்
தொகுப்புணர் வினுடன்
　　துரத்தி வீறு கொள்ளுவோம் !

பாழுஞ்சாதி மதமெலாம்
　　பழைய மூடப்பைத்தியம்
வாழும் எதிர்காலத்தில்
　　மனித ஜாதி யொன்றுதான்.

துண்டுபட்ட இந்தியா
　　துயரமான போர்க்களம்;
விண்ட நெல் முளைக்குமோ ?
　　வெறுத்த நெஞ்சம் ஒட்டுமோ?

ஊன் சுமக்கும் உயிரெலாம்
    ஒன்றென உணருவோம்
வான் சுமக்கு மழையிலே
    வகுப்பு வாதப் பேயுண்டோ?

தேன் சுமக்கு மலரிலே
    திளைக்கும் வண்டு போலவே
வானுலக வாழ்விலே
    வளருந் தெய்வத் தேனுண்போம்

---

தயானந்த ஜோதி முற்றிற்று

ஓம் தத்ஸத்

சுத்தானந்த பாரதி

Printed at Commercial Printing & Publishing House, Madras and Published by Arya Samaj (Central) Madras—T. P. No. 347.

# யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியாரின்

## அரிய, புதிய நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | ஏழை படும் பாடு (Les Miserables) | 5-0 |
| 2 | கீர்த்தனுஞ்ஜலி<br>கவியோகியின் அருளாவேசத்தில் எழுந்த 556 இசைப் பாடல்கள். | 3-8 |
| 3. | கவிக் கனவுகள் (திருக் காட்சியுடன்)<br>வரிக்குவரி கலேச்சுவையும், கவியின்பமும், ஆழ்ந்த பொருளும், அருளும் அழகும் நிரம்பிய அமரகவி. | 1-8 |
| 4. | புது யுகப் பாட்டு<br>இதில் சுதந்தர இந்தியாவின் வாழ்வையும், புதுயுகத்தையும், புதிய மனித சமுதாயத்தையும் கவியோகி இசையோவியமாக அளிக்கிறார் | 1-8 |
| 5. | நவரஸ நடனுஞ்ஜலி<br>பரத நாட்டிய விளக்கத்துடன் நூறு நடனக் காட்சிகள் | 3-0 |
| 6. | ஸ்ரீ அரவிந்தப் பிரகாசம் | 2-8 |
| 7. | பகவத் கீதை (தெளிந்த தமிழுரை) | 1-4 |
| 8. | இதுதான் உலகம் (அற்புத நாவல்) | 8-0 |
| 9. | நாகரிகப்பண்ணே முதலிய கதைகள் | 2-0 |
| 10 | வானரசு (ஓரங்க நாடகம்) | 0-9 |
| 11. | பாப்பா பாட்டு | 0-8 |
| 12. | ஆனந்தரங்கப் பிள்ளை | 0-8 |
| 13. | The Gospel of Perfect Life | 3-8 |
| 14. | Yogi Shuddhananda Bharati (A Study)<br>(K. S. Ramaswamy Sastriar) | 4-0 |